பிருக்கும்படி வேண்டிக்கொண்டார்கள். அவர்களது இஷ்டப் படியே ஸைமன் ஆங்கிலப் பிரபுக்களின் கட்சித் தலைவரானார்.

ஆக்ஸ்பர்ட் என்னுமிடத்தில் நடந்த பிரபுக்கள் சபை:— ஸைமன் ஆக்ஸ்பர்ட் (Oxford) என்னும் பட்டணத்தில் ஆங்கிலப் பிரபுக்களின் சபை ஒன்றை கி. பி. 1258-ல் கூட்டினார். அங்கே அவர்கள் தங்களுடைய குறைகளைத் தெரிவித்துக்கொண்டதுடன் இங்கிலாந்தில் செம்மையான ஆட்சியை ஏற்படுத்தவேண்டி ஒரு பத்திரத்தையும் எழுதினார்கள். அப் பத்திரத்திற்கு ஆக்ஸ்பர்ட் ஷரத்துக்கள் (Provisions of Oxford) என்று பெயர். அதன்படி ராஜ்ய விஷயங்களைக் கவனிக்கப் பதினைந்து பிரபுக்கள் அடங்கிய ஒரு சபையை அமைத்து அதன் ஆலோசனைப் பிரகாரம் அரசர் நாட்டை ஆளவேண்டுமென்றும், அன்னியர்களை இங்கிலாந்திலிருந்து வெளியேற்ற வேண்டுமென்றும் தீர்மானங்கள் செய்யப்பட்டன. மூன்றாவது ஹென்றி ஆக்ஸ்பர்ட் ஷரத்துக்களை ஒப்புக்கொண்டார்.

பிரபுக்களின் போர்:—பிறகு அரசர் அவைகளை மீறி நடக்கத் தொடங்கினார். அதனால் ஸைமனது தலைமைக்கு உட்பட்ட ஆங்கிலப் பிரபுக்களுக்கும் அரசருக்கும் ஒரு கடும் போர் ஆரம்பித்தது. இதற்குப் பிரபுக்களின் போர் (Barons War) என்று பெயர். லூவிஸ் (Lewes) என்னுமிடத்தில் ஸைமன் கி. பி. 1264-ல் ஹென்றியின் கட்சியாரைத் தோற்கடித்து அவரையும் அவரது மூத்த குமாரரான எட்வர்ட் இளவரசரையும் கைதியாக்கினார். இதற்குப் பிறகு ஸைமன் ஆங்கில அரசாங்கத்தில் முதன்மையானவரானார்.

ஸைமன் கூட்டிய பார்லிமெண்ட் (கி. பி. 1265):— அரசர் பொது ஜனங்களின் நன்மையை உதாசீனித்து ஆட்சி

புரியாததாலும், அவர் பொது மக்களின் அபிப்பிராயப்படி ஆளவேண்டும் என ஸைமன் எண்ணியபடியாலும், அரசர்க்கு எப்பொழுதும் ராஜ்ய விஷயங்களில் புத்தி கூற, ஸைமன் கி. பி. 1265-ல் ஒரு மகாசபை கூட்டினார். அச் சபையில் பிரபுக்களும் குருமார்களும் அங்கத்தினர்களாகும்படி செய்தார். மேலும், அவர் அந்த மகா சபைக்கு ஒவ்வொரு பட்டணமும், ஒவ்வொரு ஜில்லா (Shire) வும் பொதுஜனப் பிரதிநிதிகளாக இரண்டுபேர்களை அனுப்பும்படி செய்தார். அம் மகா சபைக்குத்தான் பார்லிமெண்ட் (Parliament) என்று பெயர்.

ஸைமனின் மரணம்:—இப் பார்லிமெண்ட் சபையைக் கூட்டிய பிறகு, சிறையில் அடைபட்ட எட்வர்ட் இளவரசர் தப்பியோடி ஒரு பெரிய சைன்யத்துடன் ஸைமனை எதிர்த்தார். எவ்ஷம் (Evesham) என்னுமிடத்தில் ஸைமன் தோல்வியடைந்தோடு மடிந்தார். உடனே எட்வர்ட் தமது தந்தையைச் சிறையிலிருந்து விடுவித்து மறுபடியும் ஆட்சிபுரியும்படி செய்தார். பிறகு அவர் சிலுவைப்போர் செய்ய ஒரு சேனையுடன் பாலஸ்தீன் நாட்டிற்குச் சென்றார். அவர் இங்கிலாந்திற்குத் திரும்புமுன் ஹென்றி கி. பி. 1272-ல் இறந்துவிட்டார்.

கேள்விகள்:—

1. மூன்றாவது ஹென்றியின் அநீதியான செயல்கள் யாவை?
2. ஆக்ஸ்பர்ட் ஷரத்துக்களின் பிரகாரம் என்ன ஏற்பாடு ஆயிற்று?
3. பிரபுக்களின் போரில் நடந்த இரண்டு முக்கிய சண்டைகள் யாவை?
4. பார்லிமெண்ட் என்பது யாது? ஸைமன் என்ன நோக்கத்துடன் பார்லிமெண்ட் சபையைக் கூட்டினார்?
5. அந்த பார்லிமெண்டில் யார் யார் அங்கத்தினர்களாக இருந்தனர்?

---

# அத்தியாயம் 5.

---

## முதலாவது எட்வர்ட் (கி. பி. 1272—1307.)

முதலாவது எட்வர்டின் குணாதிசயங்களும் நோக்கங்களும்:—முதலாவது எட்வர்ட் தமது தந்தை இறந்த செய்தியைக் கேட்டு இங்கிலாந்திற்குத் திரும்பி வந்து ஸிம்மாஸனமேறினார். இங்கிலாந்தை ஆண்ட பிளாண்டாஜனெட் வம்சத்து அரசர்களுள் எட்வர்ட் மேன்மை மிக்கவர். தம்முடைய குடிகளின் நன்மையை உத்தேசித்து நன்றாக ஆட்சி புரிய வேண்டுமென்பதும், பிரிட்டிஷ் தீவுகளில் உள்ள எல்லாப் பாகங்களையும் தமது ஆட்சியின் கீழ்க் கொண்டுவர வேண்டுமென்பதும் அவருடைய முக்கிய நோக்கங்கள். மேலும், பொது ஜனங்களின் பிரதிநிதிகள் அடங்கிய பார்லிமெண்ட் மகாசபையின் இஷ்டப்படி அரசர் ஆட்சி புரிய வேண்டுமென்பதும் அவருடைய அபிப்பிராயம். தாம் ஒரு காரியத்தைச் செய்வதாக உறுதிமொழி கூறிவிட்டால் அதன்படி அவர் கட்டாயம் நிறைவேற்றுவார்.

மாதிரிப் பார்லிமெண்ட் (கி. பி. 1295):—எட்வர்ட் ராஜ்ய காரியங்களில் பொது ஜனங்களின் அபிப்பிராயங்களைத் தெரிந்து கொள்ள எண்ணிப் பார்லிமெண்ட் மகா சபையைக் கி. பி. 1295-ல் கூட்டினார். இந்தச் சபைக்கு ஒவ்வொரு பெரிய பட்டணத்திலிருந்து இரண்டு பேர் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தார்கள். பிரபுக்களும் குருமார்களும் இம்மகா சபையின் அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். இது ஸைமன் கூட்டிய பார்லிமெண்டைப்போல இருந்தாலும், இதற்கும் எட்வர்டின் பார்லிமெண்டிற்கும் ஒரு முக்கிய வித்தியாசம் உண்டு. ஸைமன் பார்லி

மெண்டில் குருமார்களும் பிரபுக்களும் பொதுஜனப்பிரதிநிதிகளும் மெம்பர்களாக இருந்தார்கள். ஆனால் எட்வர்டின் பார்லிமெண்டு இரண்டு பகுதிகளாகப் பிரிந்திருந்தது. பிஷப்புக்களும், பிரபுக்களும் அடங்கிய பிரிவுக்குப் பிரபுக்கள் சபை (House of Lords) என்றும், சாமான்ய ஜனங்களின் பிரதிநிதிகளும் சாதாரணத் தொண்டர்களும் அடங்கிய பிரிவுக்குப் பொது ஜன சபை (House of Commons) என்றும் பெயர்கள் வழங்கலாயின. முதலாவது எட்வர்ட் கூட்டிய பார்லிமெண்டை மாதிரிப் பார்லிமெண்ட் (Model Parliament) என்று சொல்வதுண்டு. ஏனென்றால் அப் பார்லிமெண்டின் அமைப்பின்படியே இங்கிலாந்தில் பின்னால் கூட்டப்பட்ட எல்லா பார்லிமெண்டுகளும் அமைக்கப்பட்டன.

எட்வர்ட் வேல்ஸ் நாட்டை ஜயித்தல் (கி. பி. 1282):—பிரிட்டன் முழுவதையும் தமது ஏகாதிபத்தியத்திற்கு உட்படுத்த வேண்டுமென்பது முதலாவது எட்வர்டின் நோக்கம். ஆகையால் அவர் லூவெலின் என்ற ஒரு வெல்ஷ் சிற்றரசரைத் தமக்கு விசுவாச உறுதிமொழி அளிக்கும்படி பல முறைகளிற் கேட்டார். அதற்கு அவர் சம்மதிக்கவில்லை. ஆகையால் முதலாவது எட்வர்ட் ஒரு பெரிய படையைச் சேகரித்து வேல்ஸின் வடபாகத்தின் மேல் படையெடுத்தார். லூவெலின் ஒரு சண்டையிற் தோற்கடிக்கப்பட்டதுடன், போர்க்களத்திலேயே கொல்லப்பட்டு இறந்தார். இவ்வாறு எட்வர்ட் வேல்ஸைக் கைப்பற்றிக் கொண்டார். பிறகு அவர் வேல்ஸில் அநேக மாளிகைகளைக் கட்டி, வெல்ஷ் ஜாதியார் கலகம் செய்யாது தடுத்தார். கார்னர்வான் (Carnarvon) என்னுமிடத்திலுள்ள மாளிகையில் முதலாவது எட்வர்டின் மூத்த மைந்தர் பிறந்தார். ஆகையால் அவருக்கு வேல்ஸ் இளவரசர் (Prince of Wales) என்ற பட்டப் பெயர் முதல்

முதலில் கொடுக்கப்பட்டது. அது முதல் இதுவரையிலும் இப் பட்டப்பெயரே இங்கிலாந்து மன்னரின் மூத்த புதல்வருக்கு இடப்பட்டு வருகிறது. நமது மேன்மை மிக்க சக்கரவர்த்தியும் ஆங்கில வேந்தருமான எட்டாவது எட்வர்ட் சில மாதங்களுக்கு முன்புவரை "வேல்ஸ் இளவரசர்" என்ற பட்டப் பெயரை வகித்து வந்தார்.

எட்வர்ட் ஸ்காட்லந்தின் விஷயத்தில் பிரவேசித்தல்:—எட்வர்ட் வேல்ஸை ஜயித்தபிறகு, ஸ்காட்லாந்தையும் தமது அரசாட்சியின் கீழ்க் கொண்டுவர முயன்றார். அத் தேசத்தின் அரசரான அலெக்ஸாண்டர் (Alexander) கி. பி. 1286ல் இறந்துபோகவே, மார்கரேட் (Margaret) என்னும் ஒரு சிறுமி அப்பட்டத்திற்கு உரிமையுள்ளவளாக இருந்தாள். எட்வர்ட் அவளைத் தம் மூத்த குமாரருக்கு விவாகம் செய்து வைக்க எண்ணியிருக்கையில் அவள் இறந்துபோனாள். ஆகவே, அவர் ஸ்காட்லாந்தைத் தமது ஆட்சிக்குள் கொண்டுவரச் செய்த பிரயத்தனம் வீணாயிற்று அவள் இறந்த பிறகு ஸ்காட்லாந்தின் ராஜவம்சத்தைச் சேர்ந்தவர்களில் அநேகர் அந்நாட்டின் முடிக்குப் பாத்தியம் கொண்டாடினர். அவர்களுள் ஜான் பாலியல் (John Balliol), ராபர்ட் ப்ரூஸ் (Robert Bruce) என்ற இருவரும் முக்கியமானவர். இவர்களுக்குள் எவருக்குப் பட்டம் கொடுக்கலாமென்று தீர்மானிக்கும்படி ஸ்காட்லந்தியர்கள் எட்வர்ட் மன்னரை வேண்டிக் கொண்டனர். எட்வர்ட் தமது அபிப்பிராயத்தை வெளியிடுவதற்குமுன், அவர்கள் தம்மையே ஸ்காட்லாந்தின் உம்பள வேந்தர் என ஒப்புக்கொள்ளும்படி சொன்னார். அவர்கள் அதற்குச் சம்மதித்தபிறகு தான் எட்வர்ட் அவர்களுடைய கட்சிகளைக் கேட்டுப் பாலியலுக்கு அதிகப் பாத்தியம் உண்டு

என்று கூறினர். பாலியல் எட்வர்டுக்கு ராஜபக்திப் பிரமாணம் செய்த பிறகு ஸ்காட்லாந்தின் முடி சூட்டிக்கொண்டார்.

எட்வர்ட் ஸ்காட்லாந்தை ஜயித்தல்:-சில காலஞ் சென்ற பிறகு ஸ்காட்லாந்தியர் எட்வர்ட் மன்னரின் ஆட்சியை எதிர்க்கத் தொடங்கினர். எட்வர்ட் ஸ்காட்லாந்தின்மேல் படையெடுத்துப் பாலியலைத் தோற்கடித்தார்; தம்மை ஸ்காட்லாந்தின் மன்னனென்று ஒப்புக்கொள்ளும்படி செய்துவிட்டுத் திரும்பினர். இம்மாதிரியாக அவர் ஸ்காட்லாந்தை ஜயித்தார்.

ஸ்காட்லாந்தியர் எட்வர்டின் ஆட்சிக்கு விரோதமாய்க் கிளம்புதல்:-எட்வர்ட் சில ஆங்கிலப் பிரபுக்களை அந்நாட்டுக்கு அனுப்பி, அவர்களைத் தம்முடைய பிரதிநிதிகளாக இருந்து ஆண்டுவரும்படி திட்டம் செய்தார். ஸ்காட்லாந்தியர்கள் தேச அபிமானத்தால் ஆங்கிலப் பிரபுக்களின் ஆட்சியை வெறுத்தார்கள். அவர்கள் வில்லியம் வாலஸ் (William Wallace) என்ற சிறந்த தளகர்த்தரைத் தங்களது தலைவராகச் செய்துகொண்டு கலகம் செய்தார்கள். வாலஸ் ஆங்கிலச் சேனையை ஸ்டார்லிங் பிரிட்ஜ் (Stirling Bridge) என்னுமிடத்தில் தோற்கடித்தார். இதைக் கேட்ட எட்வர்ட் ஒரு பெரிய சேனையுடன் சென்று கி. பி. 1298-ல் வாலஸ் வீரரைப் பால்கர்க் (Falkirk) என்னுமிடத்தில் முறியடித்தார். வாலஸ் போர்க்களத்திலிருந்து தப்பி ஓடிவிட்டார். பிறகு அவர் ஆங்கிலேயரால் கைதியாக்கப்பட்டு ராஜத் துரோகி எனக் கொல்லப்பட்டார். இவ்வாறு ஸ்காட்லாந்து ஆங்கில மன்னரால் இரண்டாம் தடவை ஜயிக்கப்பட்டது.

ஸ்காட்லாந்தியரின் கலகம்:-சுமார் எட்டு வருஷங்களாக ஸ்காட்லாந்து எட்வர்டின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. பிறகு

ஸ்காட்லாந்தியர்கள் தங்களது நாடு சுதந்தரம் பெறுவதற்காக ராபர்ட் புரூஸ் * என்பவரின் தலைமையின் கீழ் இருந்து போர் புரியத் தொடங்கினார்கள். இச் செய்தியைக் கேட்டதும் எட்வர்ட் ஸ்காட்லாந்தின்மீது படையெடுக்க ஒரு சேனையுடன் புறப்பட்டார். போகும் வழியிலேயே அவர் மூப்பினால் கி. பி. 1307-ல் மரணமடைந்தார்.

கேள்விகள்:—

1. முதலாவது எட்வர்டின் நோக்கங்கள் யாவை?
2. மாதிரிப் பார்லிமென்டைப்பற்றித் தெரிந்தவரையில் சுருக்கமாய் எழுதுக.
3. ஸைமனின் பார்லிமென்டுக்கும் எட்வர்டின் பார்லிமென்டுக்கும் உள்ள வித்தியாசம் யாது?
4. எட்வர்ட் ஸ்காட்லாந்தின் விஷயங்களில் பிரவேசித்ததற்குக் காரணங்கள் யாவை?
5. ஸ்காட்லாந்தியர்கள் எட்வர்டின் ஆட்சிக்கு விரோதமாய் ஏன் கலகம் செய்தார்கள்? அவை எவ்வாறு முடிந்தன?

---

## அத்தியாயம் 6.

### 12, 13-வது நூற்றாண்டுகளில் போது மக்களின் வாழ்க்கை.

வில்லியம் இங்கிலாந்தை ஜயித்து ஆளத் தொடங்கின பின், நார்மனியப் பிரபுக்கள் இங்கிலாந்தில் மிகத் தனவான்களாகவும் செல்வாக்குடையவர்களாகவும் ஆனார்கள். முதலாவது வில்லியம் ஆங்கிலேயருடைய நிலங்களைப் பிடுங்கி நார்மனியர்களுக்குக் கொடுத்ததால், அநேக ஆங்கிலேயர்கள் நார்மனிய நிலச் சொந்தக்காரர்களின் கீழ் குடியானவர்களாக

* இவர் பாலியலுக்குப் போட்டியாய் நின்ற புரூஸின் பேரர் ஆவர்.

இருக்க வேண்டியிருந்தது. சிறிது காலம் ஆங்கிலேயர்களுக்கும் நார்மனியர்களுக்கும் மனஸ்தாபத்தினால் சண்டை சச்சரவுகள் நேர்ந்து வந்தன. ஆயினும், காலம் செல்லச் செல்ல அவர்களுக்குள் ஏற்பட்டிருந்த விரோதம் ஒழிந்து சினேகத் தன்மை உண்டாகியது. நார்மனியர்களும் ஆங்கிலேயர்களும் விவாக சம்பந்தத்தாலும் நெருங்கின பழக்கத்தாலும் ஒரே வகுப்பினராக மாறிவிட்டார்கள்.

நார்மானியப் படையெழுச்சிக்குப் பின் பிரெஞ்சுப் பாஷை இங்கிலாந்தில் துரைத்தன பாஷையாக ஆயிற்று. சில ஆங்கில தனவான்கள் பிரெஞ்சுப் பாஷை பேசுவதைக் கௌரவம் என்று தவறாக எண்ணி அதைப் பேசிவந்தார்கள்.

அநேகமாக ஆங்கிலேயர்களில் பெரும்பான்மையோர் கிராமங்களிலேயே வசித்துவந்தனர். அவர்கள் தங்கள் நிலங்களை உழுது பயிரிட்டு வந்தார்கள். நிலம்தான் அவர்களுடைய முக்கியச் செல்வம். சில சிறிய மிராசுதார்கள் குதிரைச் சவாரி செய்வதையும் யுத்தப் பயிற்சியையும் கற்றுக்கொண்டு தொண்டு புரிந்து வந்தார்கள். அவர்களுக்கு “Knights” (குதிரைவீரத் தொண்டர்கள்) என்று பெயர். அவர்கள் போராயுதங்களைப் போட்டுக்கொண்டு குதிரைமீது சவாரி செய்துகொண்டு பலவிடங்களுக்குச் சென்று பொது ஜனங்களுக்கு உதவி செய்து வந்தார்கள். அரசர்களும் பிரபுக்களும்கூட ‘Knights’ ஆக ஆவது கண்ணியம் என்று நினைத்தார்கள். பெரிய மிராசுதார்களுக்கு நாட்டில் பலவிடங்களில் நிலங்கள் இருந்ததால், அவர்கள் அவைகளைச் சரிவரக் கவனிக்க முடியாமல் சிறிய பிரிவுகளாகப் பிரித்துக்கொண்டார்கள். ஒரே இடத்திலுள்ள நிலங்கள் சேர்ந்தது “Manor” என்று பெயர். ஒவ்வொரு நிலப்பிரிவிலும் குடியானவர்கள்

பயிர்த்தொழில் சரிவர செய்து வருகிறார்களா என்று நிலச் சொந்தக்காரருக்குப் பதிலாக ஒருவர் கவனித்து வந்தார். ஒவ்வொரு நிலப்பிரிவிலும்(Manor) அதன் நிலவிஸ்தீரணம், தான்ய வருமானம், சாகுபடி சம்பந்தமான கணக்குகள் இவை களைப் பற்றி ஒரு சிறிய உத்தியோகஸ்தர் கவனித்து வந்தார். ஒவ்வொரு பிரபுவின் நிலமும் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப் பட்டிருந்தது. அதில் ஒரு பிரிவை அச்சிறிய உத்தியோகஸ் தரே சாகுபடி செய்து தம் எஜமானருக்குத் தானியத்தைக் கொடுத்து வந்தார். இதர நிலங்களைப் பண்ணையாட்கள் குறிப்பிட்ட காலம் வரையில் ஒப்பந்தச் சீட்டின் பிரகாரம் பிரபுக்களின் ஆதரவின் கீழிருந்து அவர்களுடைய நிலங் களைப் பயிரிட்டு வந்தார்கள்.

சாகுபடி செய்யப்பட்ட ஒவ்வொரு நிலமும் மூன்று வருஷங்களுக்கு ஒரு தடவை தரிசாக விட்டு விடுவார்கள். நிலங்களில் பயிர்கள் நிற்கும் காலத்தில் அவைகளைச் சுற்றி வேலிகளைக் கட்டி வைப்பார்கள். தான்யம் அறுவடையான பின் வேலிகளை எடுத்துவிட்டு ஆடுமாடுகளை வயல்களில் மேயும்படி விடுவார்கள். கால் நடைகள் மேய்வதற்காக பெரிய புல்மைதானமும் உண்டு. ஒவ்வொரு மிராசுதாரும் தமது குடும்பத்திற்கு வேண்டிய தான்யத்திற்காக மட்டும் சாகுபடி செய்து வந்தார்கள். அக்காலத்தில் ஒரு ஜில்லாவி லிருந்து இதர ஜில்லாக்களுக்குத் தான்யங்களை அனுப்பி உள் நாட்டு வியாபாரம் வளர்வதற்கு வேண்டிய சாதனங்கள் இல்லை. நாணயங்கள் மிகக் கொஞ்சம். அரசரும் பெரிய பிரபுக்களும் தங்களுடைய பரிவாரங்களுடன் ஒவ்வொரு நிலப்பிரிவுக்கும் சென்று சிறிது காலம் தங்கிவிட்டுப் பிறகு வேறு ஒரு நிலத்தாக்குக்குச் செல்வார்கள். அக் காலத்தில் அறுவடையான தான்யங்களை அரசருடைய அல்லது

பிரபுக்களுடைய மாளிகைக்கு அனுப்புவது மிகவும் கஷ்டமான காரியமானதால் அவர்கள் இவ்வாறு செய்தார்கள். அவர்கள் ஓரிடத்தில் நிலைத்து வசித்து வராததால் தங்கள் மாளிகைகளில் அதிகச் சாமான்களைச் சேகரித்து வைத்துக் கொள்வதில்லை.

வியாபாரம் மிகக் குறைவு. நார்மனியப் படையெடுப்புக்குப் பிறகு இங்கிலாந்தில் ஏற்பட்ட அநேக பட்டணங்களில் வியாபாரம் நடந்து வந்தது. இங்கிலீஷ்காரர்கள் இடலி, ஜர்மனி முதலான அயல் நாடுகளுடன் வியாபாரம் செய்து வந்தார்கள். அக்காலத்தில் ஆங்கிலேயர்களுக்கு வியாபாரத்தில் அதிகச் சிரத்தையில்லை. யூதர்கள் அதிக பணக்காரர்கள்; ஏராளமான பணத்தை வட்டி சம்பாதிப்பதற்காக வியாபாரிகளுக்குக் கடன் கொடுத்து உதவி வந்தார்கள். அவர்கள் அதிக வட்டி வாங்கி வந்ததால் ஜனங்களுக்கு அவர்களிடம் அதிகப் பகை ஏற்பட்டது. இந்த யூதர்கள் தான் முதல் முதலில் இங்கிலாந்தில் கற்களால் வீடுகளைக் கட்டி வசித்து வந்தார்கள்.

பதினோராவது பன்னிரண்டாவது நூற்றாண்டுகளில் கல்வியைப் பரவச்செய்ய சர்வகலாசாலைகள் ஐரோப்பாவில் ஏற்படுத்தப்பட்டன. இங்கிலாந்தில் இரண்டாவது ஹென்றியின் காலத்தில் ஆச்ஸ்பர்டு நகரில் ஒரு சர்வகலாசாலை ஏற்படுத்தப்பட்டது. தவிர, மூன்றாவது ஹென்றியின் காலத்திற்கு முன்னமேயே கேம்பிரிட்ஜ் நகரிலும் உயர்தரப் படிப்பைப் பரவச்செய்ய வேறு ஒரு சர்வகலாசாலையும் ஏற்பட்டது.

---

# அத்தியாயம் 7.

## இரண்டாவது எட்வர்ட் (கி. பி. 1307—1327).

எட்வர்டும் காவ்ஸ்டனும் :—வேல்ஸ் இளவரசாராயிருந்த எட்வர்ட் கி. பி. 1307ல் இங்கிலாந்து மன்னரானார். தமது தந்தையின் திறமையை ஒத்த திறமை அவருக்குச் சிறிதேனு மில்லை. அவர் வெகு சுகமாகக் காலத்தைக் கழித்து வந்தாரே யொழிய இங்கிலாந்தைச் சரிவர அரசாளுவதில் அவருக்கு நோக்கம் இல்லை. அவர் காஸ்கனி மாகாணத்திலிருந்து இங்கிலாந்துக்கு வந்த பியர்ஸ் காவ்ஸ்டன் (Piers Gaveston) என்ற ஒரு பிரபுவின்மேல் பிரியம் வைத்து, அவருடைய் துராலோசனைகளைக் கேட்டுச் சில வருஷங்கள் ஆண்டுவந்தார். ஆகையால் ஆங்கிலப் பிரபுக்கள் காவ்ஸ்டனிடம் அதிக பொறாமையினால் பகைபாராட்டி, அவரை இங்கிலாந்திலிருந்து துரத்திவிடும்படி சூழ்ச்சி செய்தார்கள்.

பானக்பர்ன் சண்டை (கி. பி. 1314):—எட்வர்ட் சிம்மாசனமேறின பிறகு ராபர்ட் புரூஸ் ஸ்டர்லிங் (Stirling) கோட்டையைத் தவிர ஸ்காட்லாந்தில் ஆங்கிலேயரின் வசத்திலுள்ள இதர கோட்டைகள் யாவற்றையும் கைப்பற்றிக் கொண்டார். பிறகு, கி. பி. 1314ல், புரூஸ் ஸ்டர்லிங் கோட்டையையும் முற்றுகையிட்டார். ஆகையால் அதைக் கைப்பற்றுவதற்கு புரூஸுக்கு இடங்கொடுத்தல் கூடாது என்று எண்ணி, எட்வர்ட் ஒரு பெரிய சேனையுடன் ஸ்டர்லிங் கோட்டையை நோக்கிச் சென்றார். சென்றவர் பானக் (Bannock) என்ற ஓர் அருவி (Burn) யின் பக்கத்திலே தமது சேனையைப் போருக்குத் தயாராயிருக்கும்படி செய்தார். இதற்குள்ளாக புரூஸ், எட்வர்ட் தம்மைச் சேனையுடன் எதிர்க்க

வருவதைக் கேட்டு, பானக் அருவியின் வட கரையிலுள்ள ஒரு குன்றின் சரிவின்மீது தம்முடைய போர் வீரர்களை நிற்க வைத்திருந்தார். மேலும், அவர் தமது சேனைக்கும் அந்த அருவிக்கும் இடையிலே ஆழமான பள்ளங்களைத் தோண்டி அவற்றுள் மிகக் கூர்மையான கழிகளை நட்டு, அவை ஆங்கிலேயருக்குத் தெரியாவண்ணம் தழைகளையும் உலர்ந்த புற்களையும் மேலே பரப்பும்படி செய்திருந்தார். இதை அறியாத ஆங்கிலக் குதிரை வீரர்கள் வெகு வேகமாகச் சவாரி செய்து வருகையில் அப் படுகுழிகளில் விழுந்து மடிந்தார்கள். இவ்வாறு ஆங்கிலச் சேனை இச்சண்டையிலே தோல்வியடைந்தது. எட்வர்ட் மன்னர் போர்க் களத்தை விட்டு தம் உயிர் தப்ப எண்ணி ஓட்டமெடுத்தார். ஸ்காட்லாந்தியர்கள் இச் சண்டையில் அடைந்த வெற்றியால் தங்களது நாட்டின் சுதந்தர உரிமையை அடைந்தார்கள்.

எட்வர்ட் சிம்மாஸனத்தினின்று நீக்கப்படுதல்:—எட்வர்ட் பட்டத்துக்கு வந்ததுமுதல் இங்கிலாந்தைச் சரிவர ஆண்டு வராமல் காவ்ஸ்டனின் துராலோசனையைக் கேட்டு ஆண்டு வந்தார். ஸ்காட்லாந்தியருடன் புரிந்த போர் முடிந்தவுடன் எட்வர்ட் மன்னர் ஹூ டேஸ்பென்ஸர்கள் (Hugh Despensers) என்ற தகப்பனும், மகனுமாகிய இருவர்களின் துராலோசனையின்படி அரசாட்சி புரிந்து வந்தார். இதைக் கண்ட பிரபுக்கள் அனைவரும் கோபமடைந்து அரசரை எதிர்க்க ஆரம்பித்தார்கள். இச் சமயத்தில் பிரான்ஸூக்குச் சென்றிருந்த எட்வர்டின் மனைவியாரான இஸபெல்லா ஒரு சேனையுடன் இங்கிலாந்திற்கு வந்து இங்கிலீஷ் பிரபுக்களின் கட்சியில் சேர்ந்துகொண்டு தம் புருஷருடன் சண்டை செய்தார். பிறகு பிரபுக்கள் எட்வர்டைச் சிறைப்படுத்திப் பிறகு கொன்றுவிடும்படி செய்துவிட்டார்கள்.

கேள்விகள்:—

1. காஸ்டன் என்பவரைப்பற்றி உனக்கு என்ன தெரியும்?
2. பானக்பர்ன் சண்டையில் ஆங்கிலேயர்கள் தோல்வி அடைந்ததற்குக் காரணம் யாது?
3. எட்வர்ட் ஏன் சிங்காதனத்தினின்று நீக்கப்பட்டார்?

---

## அத்தியாயம் 8.

### மூன்றுவது எட்வர்ட் (கி. பி. 1327—1377.)

எட்வர்டும் **ஸ்காட்லாந்தும்:**—இரண்டாவது எட்வர்ட் சிம்மாசனத்திலிருந்து நீக்கப்பட்டவுடன், அவருடைய புதல்வரான எட்வர்ட் பட்டத்துக்கு வந்தார். அப்பொழுது அவருக்குப் பதினைன்கு வயது. அவருடைய தாயாரான இஸபெல்லா ராஜாங்கக் காரியங்களைக் கவனித்து வந்தாள். இவள் ஸ்காட்லாந்தியருடன் நார்தம்ப்டன் (Northampton) என்ற இடத்தில் ஒரு சமாதான உடன்படிக்கை செய்து கொண்டாள். அதன்படி ஸ்காட்லாந்தியரின் சுதந்தரம் ஆங்கிலேயரால் அங்கீகரிக்கப்பட்டது. கி. பி.1330-ல் எட்வர்ட் தாமே ராஜ்யத்தை ஆளத்தொடங்கினர்.

நூறு வருஷப் போரின் காரணங்கள் :—எட்வர்டின் ஆட்சியில் பிரான்ஸுக்கும் இங்கிலாந்துக்கும் ஒரு கடும்போர் கி. பி. 1337ல் ஆரம்பித்தது. பல ஆண்டுகளுக்குப் பிறகு கி. பி. 1453ல் முடிந்தது. இது நூறு வருஷங்களுக்கு மேற்பட்டு நடந்த போரானதால் இதற்கு நூறு வருஷப்போர் (The Hundred Years' War) என்று பெயர். இந்த யுத்தத்துக்கு அநேக காரணங்கள் உண்டு. ராபர்ட் புரூஸ் இறக்கவே, அவருடைய மகனை டேவிட் புரூஸ் (David Bruce)

ஸ்காட்லாந்து முடியை அபேக்ஷித்த எட்வர்ட் பாலியல் என்பவரால் ஆங்கிலேயர்களுடைய உதவியைக்கொண்டு துரத்தப்பட்டார். ஆகவே டேவிட் ஸ்காட்லாந்தில் பிரெஞ்சுக்காரர்




களுடைய உதவியை நாடினார். இவ்வாறு இங்கிலாந்தும் பிரான்ஸும் எதிர்க் கட்சிகளில் நின்று போர்புரிய நேரிட்டது. மேலும், இரண்டாவது ஹென்றி காலம் முதல் ஆங்கில

மன்னர்களின் வசத்தில் பிரான்ஸின் தென் பாகத்திலுள்ள காஸ்கனி என்ற மாகாணம் இருந்து வந்தது. அம் மாகாணத்தைப் பிரெஞ்சு மன்னராகிய பிலிப் கைப்பற்றி, அதிலிருந்து ஆங்கிலேயர்களைத் துரத்திவிடவேண்டும் என்று முயன்றார். ஆனால் ஆங்கில மன்னருக்கு அதை இழக்க மனமேயில்லை. இதுவும் நூறாண்டுப் போருக்கு ஒரு காரணமாகும்.

எட்வர்ட் பிரெஞ்சு மகுடத்திற்குப் பாத்தியங் கொண்டாடுதல் :—பிரெஞ்சு மன்னரான நான்காவது சார்ல்ஸ் சந்ததியின்றி கி. பி. 1328ல் மரணமடைந்தார். பிறகு பிரெஞ்சுக்காரர்கள் அவரது சிறிய தகப்பனாரின் குமாரரான பிலிப் (Philip) என்பவருக்கு முடி சூட்டிவைத்தார்கள். இதைக் கேட்ட எட்வர்ட் தமது தாய் இஸபெல்லா நான்காவது பிலிப்பின் பெண்ணாதலால், அவள் மூலமாய் பிரெஞ்சு மகுடத்திற்குத் தாமே உரிமை கொண்டாடினார். அக் காலத்தில் பிரெஞ்சு மகுடத்திற்கு ஒரு பெண்ணுக்கோ அல்லது பெண்ணின் சந்ததிகளுக்கோ பாத்தியம் கிடையாது என்ற கருத்துள்ள "ஸாலிக் லா" (Salic Law) என்ற ஒரு சட்டம் பிரான்ஸில் அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. அதனால்தான் எட்வர்ட் தம் தாயின் வழியாக பிரெஞ்சு மகுடத்துக்கு உரிமை பாராட்டியது நியாயமாகாது என்று பிரெஞ்சுக்காரர்கள் எண்ணினார்கள். ஆறுவது பிலிப் பட்டத்திற்கு வந்து சில வருஷங்கள் வரையில், எட்வர்ட் தமக்குப் பிரெஞ்சு முடி பாத்தியம் உண்டு என்பதைத் தெரிவிக்காமல் இருந்த விஷயம் குறிப்பிடத்தக்கது. பிரெஞ்சுக்காரர்கள் எட்வர்டின் உரிமையை அங்கீகரிக்க மறுத்தபோதிலும், அவர் போர் புரிந்து தமது உரிமையை ஸ்தாபித்துக்கொள்ளத் தீர்மானித்தார்.

எட்வர்ட் பிரெஞ்சு மகுடத்திற்குக் கொண்டாடிய உரிமையைக் காட்டும் வம்சாவளி.




க்ரேஸி சண்டை(1346):—ஸ்லூயிஸ் (Sluys) என்னும் துறைமுகத்துக்கு அருகில் ஒரு கடற்சண்டை கி. பி. 1340ல் நடந்தது. இதில் பிரெஞ்சுக் கப்பற்படை தோற்கடிக்கப் பட்டது. பிறகு எட்வர்ட் ஒரு பெரிய சேனையுடன் பிரான்ஸில் வந்து இறங்கினார். அவருடன் இளவரசராகிய எட்வர்ட் சென்றார். அவர் கருமை நிறமுள்ள கவசத்தைப் போட்டுக் கொண்டிருந்த காரணத்தால் "கருப்பு இளவரசர்" (Black Prince) என்று அழைக்கப்பட்டார். எட்வர்ட் தமது சேனையோடு கலே (Calais) நகரை நோக்கிச் செல்லும்பொழுது, பிரெஞ்சுக்காரர்கள் க்ரேஸி (Crecy) என்னும் ஒரு கிராமத்தின் அருகில் அவரை எதிர்த்தார்கள். இச்சண்டையிற் கருங் கவசம்பூண்ட இளவரசர் பிரெஞ்சுக்காரரைத் தோற்கடித்துப் புறங்காட்டி ஓடச்செய்தார். பிறகு எட்வர்ட் தம் சேனையுடன் கலே நகருக்குச் சென்று அதை முற்றுகை செய்தார். சுமார் ஒரு வருஷம் வரையில் கலே முற்றுகை நடந்தது. முடிவில் கலே நகரத்தை ஆங்கிலேயர்கள் கைப்பற்றிக்கொண்டார்கள். இந்நகரம் கி. பி. 1558 வரையில் ஆங்கிலேயர்களின் வசத்தில் இருந்தது.

பாய்ட்டியர்ஸ் சண்டை:—கலே நகரைக் கைப்பற்றிய பிறகு எட்வர்ட் இங்கிலாந்துக்குத் திரும்பிச் சென்றார். இச் சமயத்தில் இங்கிலாந்தில் கறுப்புக்கொள்ளை நோய் (Black Death) தோன்றியது. அதனால் லக்ஷக்கணக்கான ஜனங்கள் மாண்டுபோனதால் சுமார் எட்டு வருஷங்கள் வரையில் யாதொரு பெரிய சண்டையும் நடக்கவில்லை. கி. பி. 1356ல் கருங்கவச இளவரசர் பாரிஸ் நகரை நோக்கிச் செல்லுகையில், பாய்ட்டியர்ஸ் (Poitiers) என்னுமிடத்தில் ஒரு பிரெஞ்சுச் சேனையைச் சந்தித்துத் தோற்கடித்தார். இச் சண்டையில் பிரெஞ்சு மன்னரான ஜான் ஆங்கிலேயர்களால் சிறைப் படுத்தப்பட்டார்.

பிரிடிக்னி உடன்படிக்கை:-பிரிடிக்னி (Bretigny)என்னு மிடத்தில் ஒரு சமாதான உடன்படிக்கை கி.பி. 1360ல்செய்து கொள்ளப்பட்டது. அதன்படி ஆங்கில மன்னராகிய எட்வர்ட் பிரெஞ்சுச் சிங்காதனத்திற்கு உரிமை கொண்டாடுவதில்லை என்று ஒப்புக்கொண்டார். பிரெஞ்சுக்காரரும் காஸ்கனி, கயன் (Guienne), பாய்ட்டு (Poitou) என்ற மாகாணங் கள் அடங்கிய அக்விடயன் (Aquitaine) மாகாணத்திற்கு எட்வர்டைச் சிற்றரசர் என்று ஒப்புக்கொண்டனர். மேலும், கலே நகரம் ஆங்கிலேயரின் வசத்தில் இருக்கவேண்டியது என்றும் ஏற்பட்டது.

இந்த உடன்பாட்டிற்குப் பிறகு கருங்கவச இளவரசர் அக்விடயன் மாகாணத்தில் சிற்றரசராக ஆண்டு வந்தார். அவர் பிறகு வியாதியால் பீடிக்கப்பட்டு இங்கிலாந்துக்குத் திரும்பினார். எட்வர்டின் ஆளுகை முடிவதற்குள் ஆங்கி லேயருக்குப் பிரிடிக்னி உடன்பாட்டினால் கிடைத்த மாகா ணங்களைப் பிரெஞ்சு மன்னர் கைப்பற்றிக் கொண்டுவிட்டார்.

ஆனால் போர்டோ (Bordeaux), கலே என்ற இரண்டு நகரங்கள் மட்டும் ஆங்கிலேயர்களின் வசத்திலேயே இருந்தன.

(கறுப்புக் கொள்ளை நோய் :—நூறு வருஷப் போரினால் ஆங்கிலேயருக்குப் பெருங் கஷ்டம் ஏற்பட்டது. அச்சமயத்தில் கி. பி. 1349ல் இங்கிலாந்தில் ஒரு தொத்து வியாதி ஏற்பட்டது. இதைக் கறுப்புக் கொள்ளைநோய் (Black Death) என்று சொல்லுவார்கள். இந்த நோயினால் இங்கிலாந்தில் பத்தாயிரக்கணக்கான ஜனங்கள் மாண்டார்கள். ஆகையால் வயல்களில் நின்ற தான்யப் பயிர்களை அறுப்பதற்கும் மற்ற வேலைகளைச் செய்வதற்கும் கூலி வேலை செய்யப் போதுமான ஜனங்கள் கிடைக்கவில்லை. இக்கொள்ளை நோயினின்றும் பிழைத்த கூலியாட்களும் கொடிய பஞ்சத்தினால் கஷ்டப்பட்டார்கள். தான்ய விலையும் அதிகமாகிவிட்டதால் அவர்கள் அதிகம் கூலி கேட்டார்கள். மிராசுதார்கள் அதிகக் கூலி கொடுக்க மறுத்தார்கள்; வேலையாட்கள் அனைவரையும் வழக்கம்போல் கூலி வாங்கிக்கொண்டு வேலை செய்யும்படி கட்டாயப்படுத்தக்கூடிய சில சட்டங்களைப் பார்லிமெண்டு இயற்றியது. இவைகளுக்கு வேலையாட்களின் சட்டங்கள் (Statutes of Labourers) என்று பெயர். வேலையாட்களோ இச் சட்டங்களையும் மீறி நடக்கத் துணிந்தார்கள். அதனால் மிராசுதார் நிலச் சாகுபடி செய்வதையே நிறுத்திவிட்டார்கள்; ஆடுகள் மேய்வதற்கு வயல்களில் புல் வளர்க்கத் தொடங்கினார்கள்.

நல்ல பார்லிமெண்ட் :—முதலாவது எட்வர்ட் காலம் முதல் பார்லிமெண்டின் அதிகாரம் வளர்ந்து கொண்டே வந்தது. அவரது காலத்தில் பார்லிமெண்ட் சபை மகாசாஸனப் பத்திரத்தின் ஷரத்துக்களின்படி அரசர் ராஜாங்க விஷயங்களில் நடக்கவேண்டும் என்று கட்டாயப்படுத்தியது.

இரண்டாவது எட்வர்ட் தம் பிரியத் தோழர்களின் ஆலோசனையைக் கேட்டுச் சரிவர ஆட்சிபுரியாததால் பார்லிமெண்ட் அரசரிடம் அதிருப்தி அடைந்தது. மூன்றாவது எட்வர்ட் வியாதியஸ்தராகவும் பலஹீனராக ஆனாலும், அவர் சில கெட்ட குணங்கள் வாய்ந்த மந்திரிகளின் ஆலோசனையைக் கேட்டு வந்தார். கி. பி. 1376ல் ஒரு பார்லிமெண்ட் சபை கூடி ஜனங்களின் நன்மைக்காகப் பல காரியங்களைச் செய்தது. ஆகையால் அதற்கு "நல்ல பார்லிமெண்ட்" என்று பெயர். அது நாட்டிற்குக் கெடுதல்களைச் செய்து வந்த மந்திரிமார்களை விசாரிப்பதற்கு ஒரு முறையை அனுஷ்டித்தது. அதன்படி பொதுஜன சபையோர்கள் மந்திரிகளின் மீது குற்றம் சாட்டுவார்கள். இத்தகைய வழக்குகளைப் பிரபுக்கள் சபை விசாரித்தது. இவ்வாறு மந்திரிகள் மீது ஏற்பட்ட வழக்கை விசாரணை செய்யும் முறைக்கு ஆங்கிலத்தில் Impeachment என்று சொல்லுகிறோம். கருங்கவச இளவரசர் நல்ல பார்லிமெண்டின் சார்பாக இருந்து அநேக நல்ல காரியங்களைச் செய்யும்படி தூண்டிவந்தார். மூன்றாவது எட்வர்ட் காலத்தில் பார்லிமெண்ட் ராஜாங்க விஷயத்தில் சர்வ அதிகாரத்தையும் வகித்தது. அரசரும் பார்லிமெண்ட் சபையின் அபிப்பிராயப்படியே நடந்துவந்தார்.

தாய்ப் பாஷையின் அபிவிருத்தி:—நூறு வருஷப் போரினால் ஆங்கிலேயருக்குப் பிரெஞ்சுக்காரரிடம் பகை அதிகரித்தது. ஆகையால் ஆங்கிலேயர்கள் தங்களது தாய்ப் பாஷையைத் துரைத்தனப் பாஷையாகச் செய்துகொண்டனர். சாஸர் (Chaucer) என்னும் இங்கிலீஷ் கவி, காண்டர்பரி கதைகளை (Canterbury Tales) ஆங்கில பாஷையில் வெகு இனிமையான செய்யுள் நடையில் எழுதினார். இந்தக்

காலமுதல்தான் ஆங்கிலேயருக்குத் தேசாபிமானமும் தாய்ப் பாஷையில் அபிமானமும் ஏற்பட்டன.

கேள்விகள்:—

1. நார்த்தம்ப்டன் உடன்படிக்கை எப்படி முக்கியமானது?
2. நூறு வருஷப்போரின் காரணங்கள் யாவை?
3. எட்வர்ட் பிரெஞ்சு மகுடத்திற்குக் கொண்டாடிய உரிமையை வம்சாவளியின் மூலமாய்க் காட்டுக.
4. மூன்றாவது எட்வர்டின் காலத்தில் நடந்த நூறு வருஷப் போரின் சண்டைகள் யாவை?
5. பிரிடிக்னி உடன்பாட்டின்படி என்ன ஏற்பாடு ஆயிற்று?
6. கறுப்புக் கொள்ளை நோயினால் உண்டான நன்மைகள் தீமைகள் யாவை?

---

## அத்தியாயம் 9.

### இரண்டாவது ரிச்சர்ட் (கி. பி. 1377—1399)

ஆள்வரி விதிக்கப்பட்டது:—மூன்றாவது எட்வர்டுக்குப் பிறகு கறுங்கவச இளவரசரின் மைந்தரான ரிச்சர்ட் பட்டத்துக்கு வந்தார். அப்பொழுது அவருக்கு வயது பதினொன்று. ஆகையால் அவருடைய சிறிய தகப்பனார்களில் ஒருவராகிய ஜான் ஆவ் கான்ட் (John of Gaunt) ராஜ்ய பரிபாலனம் செய்துவந்தார். அவர் இங்கிலாந்திலுள்ள பதினைந்து வயதுக்கு மேற்பட்ட ஆண், பெண் யாவரும் தலைக்குப் பன்னிரண்டு பென்ஸ் வீதம் வரி கொடுக்கவேண்டும் என்று உத்தரவிட்டார். இந்த வரிக்கு ஆள்வரி அல்லது தலைவரி (Poll-tax) என்று பெயர். இந்த வரி வேலையாட்களுக்கு

அரசாங்கத்தார் மீது கோபம் உண்டாகும்படி செய்தது. அதனால் தொழிலாளர்கள் கலகம் செய்யத் தயாராய் இருந்தார்கள்.

வேலையாட்களின் கலகம் :—அப்பொழுது கென்ட் மாகாணத்தில் வாட் டைலர் (Wat Tyler) என்னும் ஒரு தொழிலாளி இருந்தான். அவனுடைய வீட்டுக்குத் தலை வரி வசூல் செய்பவர்களில் ஒருவர் சென்றார். சென்றவர் வாட் டைலர் வெளியிற் சென்றிருக்கிறான் என்பதைக் கேட்டு, அவன் சரியான காலத்தில் வரி செலுத்துவதில்லை என்று இழிவான வார்த்தைகளைக் கோபத்துடன் பேசினார். இதைக் கேட்டுக் கொண்டே வீட்டை நோக்கிவந்த வாட் டைலர் வரி வசூலிப்பவரைக் கொலை செய்துவிட்டான். மேலும், அவன் தொழிலாளர்களையும் பண்ணையாட்களையும் கலகம் செய்யும்படி தூண்டினான். அவர்கள் வாட் டைலரைத் தலைவனாகக் கொண்டு லண்டன் நகரை நோக்கிச் சென்றார்கள். போகும் வழியில் அவர்கள் செய்த அக்கிரமங்களை எடுத்து உரைத்தல் முடியாதகாரும். அவர்கள் பயிர்களை அழித்தும், ஜனங்களை ஹிம்சித்தும், வீடுகளை எரித்தும், இன்னும் பல அட்டூழியங்களைச் செய்தும் சென்றார்கள். அவர்கள் கான்ட் பிரபுவாகிய ஜானின் மாளிகையைக் கண்டதும் அதை இடித்துவிட்டார்கள். இக் கலகக்காரர்களை ரிச்சர்ட் சில உத்தியோகஸ்தர்களுடன் ஸ்மித்பீல்ட் (Smithfield) என்னுமிடத்தில் சந்தித்தார். அங்கே வாட் டைலர் ரிச்சர்ட் அரசனை வணங்க அருகிற் சென்றபோது லண்டன் நகர மேயர்* வாட் டைலரைக் கத்தியால் குத்திக் கொன்றுவிட்டார். இச் செய்தியை யறிந்த கலகக்காரர்கள் வெகு கோபமடைந்து ரிச்சர்டைச் சுற்றி வளைத்துக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

*மேயர் = நகர பரிபாலன சபையின் அக்ராசனாதிபதி.

இச்சமயத்தில் ரிச்சர்ட் ஒரு சிறுவராயிருந்த போதிலும் வெகு தைரியத்துடன் அக் கலகக்காரர்களைப் பார்த்து, "என்னுடைய அருமைக்குடிகளே, ஏன் கோபங்கொள்ளுகிறீர்கள்? உங்கள் தலைவன் கொல்லப்பட்டானுகையால் நானே உங்களுக்கு இனி தலைவனாக இருக்கிறேன்" என்று சொன்னார். இதைக் கேட்ட (கென்ட்) வேலையாட்கள் மிகத் திருப்தியடைந்து, தங்களுடைய குறைகளைத் தீர்க்கவேண்டுமென வேண்டினார்கள். அதற்கு அரசர் அவர்களுடைய வேண்டுகோள்களை அளிப்பதாக உறுதிமொழி கூறினார். இதைக் கேட்டு அவர்கள் தங்களது மாகாணத்திற்குச் சந்தோஷமாய்த் திரும்பிவிட்டார்கள். ஆனால் வேலையாட்களின் குறைகளை நீக்குவதற்குப் பார்லிமெண்ட் சம்மதிக்கவில்லை. அதனால் பண்ணைக்குடிகள் சுதந்தரம் அடைய முடியவில்லை.

ரிச்சர்டின் ஆட்சி:—ரிச்சர்ட் கி. பி. 1388ல் தேச ஆளுகையை ஒப்புக்கொண்டார். கொஞ்ச காலம் வரையில் அவர் சரிவர ஆண்டுவந்தார். அவர் பிரெஞ்சு அரசரின் குமாரத்தியாகிய இஸபெல்லாவை விவாகம் செய்துகொண்டார். பிறகு அவர் இங்கிலாந்தைத் தமது இஷ்டப்படி ஆளத்தொடங்கினார். அதனால் பிரபுக்கள் அனைவரும் ரிச்சர்டைச் சிம்மாஸனத்தினின்று நீக்கிவிடவேண்டுமென எனத் தீர்மானித்தார்கள்.

ரிச்சர்ட் ஆங்கில மகுடத்தை இழந்தல்:—அச்சமயத்தில் ரிச்சர்ட் அகாரணமாய்ச் சில ஆங்கிலப் பிரபுக்களைத் தேசப்பிரஷ்டம் செய்துவிட்டார். அவர்களுள் லங்காஸ்டர் கோமகனார் (Duke of Lancaster) குமாரரான ஹென்றி என்பவர் ஒருவர். அவர் ரிச்சர்டின் சிறிய தகப்பன் மகனுவர். (69ம் பக்கத்திலுள்ள வம்சாவளியைப் பார்க்க). அவர் இங்கிலாந்திலிருந்து துரத்தப்பட்ட பிறகு அவரது பிதா

வான ஜான் இறந்தார். உடனே ரிச்சர்ட் அவருடைய சொத்துக்களைப் பேராசையால் பறிமுதல் செய்துவிட்டார். இதைக் கேள்விப்பட்டவுடனே லங்காஸ்டர் கோமகனான ஹென்றி ஒரு சிறிய படையுடன் ஹம்பர் நதியின் முகத்துவாரத்திற்கு அருகிலுள்ள ராவன்ஸ்பூர் (Ravenspur) என்னுமிடத்தில் ஒரு சைன்யத்துடன் வந்திறங்கினார். அவர் தமது தந்தையின் சொத்துக்களை மீட்க வந்தாரே அன்றி ஆங்கில முடியை உத்தேசித்து வரவில்லை. ரிச்சர்டின் அநீதியான செயல்களைக் கண்டு சகியாத பிரபுக்கள் அவரது கட்சியில் சேர்ந்துகொண்டார்கள். ரிச்சர்ட் ஒரு சண்டையில் தோல்வியடைந்து சிறையாக்கப்பட்டார். பிறகு பார்லிமெண்ட் சபையார் லங்காஸ்டர் கோமகனான ஹென்றிக்கே முடிசூட்டி வைத்தனர். இத்துடன் ப்ளாண்டாஜினட் வம்சத்தாரது அரசாட்சி இங்கிலாந்தில் முடிவுபெற்றது. லங்காஸ்டர் வம்சத்து அரசர்கள் கி. பி. 1399ல் இங்கிலாந்தை ஆளத் தொடங்கினார்கள். சிறையில் அடைபட்ட ரிச்சர்டும் அவ்வருஷத்திலேயே இறந்துவிட்டார்.

ஜான் விக்லிப்பும் லாலார்டுகளும்:—யார்க் ஷயரைச் சேர்ந்த ஜான் விக்லிப் (John Wycliffe) என்ற கலைஞர் ஆக்ஸ்பர்டு நகரில் மத நூல்கள் சம்பந்தமான பல அருமையான உபந்நியாசங்களைச் செய்து பெருங் கியாதி பெற்றார். அவர் குருமார்கள் மத நூல்களில் அதிக ஞானமில்லாதவர்களாயும் ராஜ்ய விஷயங்களில் கலந்துகொண்டும் பொருளைச் சேகரிப்பதிலேயே பெரு நோக்கமுள்ளவர்களாயும் இருந்து வருவதைக் கண்டார். அதனால் அவர் போப்புக்கும் அவர்களுக்கும் கீழ்ப்படிய வேண்டியது அவசியமில்லை என்று பிரசங்கம் செய்துகொண்டு வந்தார். இங்கிலாந்தில் போப்பின் அதிகாரம் செல்லாது என்றும், சர்ச்சுகளுக்குச் சொத்துக்

கள் தேவையில்லை என்றும், அவைகளின் சொத்துக்களைப் பறிமுதல் செய்யவேண்டும் என்றும் சொன்னார். கடைசியில் அவர் சில கிறிஸ்தவ மதக் கொள்கைகள் ஒத்துக்கொள்ளக் கூடாதவை என்றும், அவைகளை மாற்றவேண்டும் என்ற நூதன அபிப்பிராயத்தை வெளியிட்டார். அவரது பிரசங்கங்களைக் கேட்டவர்களில் பலர் அவருடைய அபிப்பிராயங்களை ஒத்துக்கொள்ளச் சம்மதிக்கவில்லை. தவிர, ஜான் விக்லிப் ஒவ்வொரு ஆங்கிலேயனும் அறிந்துகொள்ளும்படி ஆங்கில பாஷையிலேயே சில பிரசுரத் துண்டுகளையும் வெளியிட்டார். அவர் ஆங்கிலப் பாஷையில் மொழி பெயர்த்து அதில் கண்டபடிதான் ஆங்கிலேயர்கள் நடக்கவேண்டுமே தவிர, போப்பின் உத்தரவுப்படி நடக்கவேண்டியதில்லை என்று தெரிவித்தார். அவரது சிஷ்யர்களுக்கு லாலார்டுகள் என்று பெயர். சர்ச்சு அதிகாரிகள் அவரது அபிப்பிராயங்களைக் கண்டித்தார்கள்; விக்லிப் ஆக்ஸ்பர்டு நகரில் பிரசங்கங்கள் செய்ய முடியாமல் ஏற்பாடு செய்தார்கள். ஆகையால் விக்லிப் தம் கிராமத்திற்குச் சென்று சில காலம் வசித்து வந்தார். கி. பி. 1384ம் வருஷத்தில் அவர் இறந்துபோனார்.

கேள்விகள்:—

1. வேலையாட்கள் கலகம் எக்காரணங்களால் ஏற்பட்டது?
2. அக்கலகத்தின் வரலாற்றைப் பற்றிச் சுருக்கமாய் எழுதுக.
3. தொழிலாளர்களைத் திருப்தியுடன் திரும்பும்படி ரிச்சர்ட் எப்படி செய்தார்?
4. ரிச்சர்ட் செய்த அநீதியான காரியங்கள் யாவை?
5. லங்காஸ்டர் சோமகனான ஹென்றி இங்கிலாந்திற்கு எதற்காக வந்தார்?
6. ஆங்கிலேயர்கள் ரிச்சர்ட் மன்னரைச் சிங்காதனத்தினின்று ஏன் நீக்கிவிட்டார்கள்?

| முக்கிய நிகழ்ச்சிகள். | வருஷங்கள். |
|---|---|
| க்ளாரண்டன் சட்டங்கள் | கி. பி. 1164 |
| பெக்கட் கொலையுண்டது | ,, 1170 |
| மகா சாஸனப்பத்திரம் | ,, 1215 |
| ஆக்ஸ்பர்ட் ஷரத்துகள் | ,, 1258 |
| ஸைமன் கூட்டிய பார்லிமெண்ட் | ,, 1265 |
| மாதிரிப் பார்லிமெண்ட் | ,, 1295 |
| பால்கர்க் சண்டை | ,, 1298 |
| பானக்பர்ன் சண்டை | ,, 1314 |
| நார்தம்ப்டன் உடன்பாடு | ,, 1330 |
| க்ரெஸிச் சண்டை | ,, 1346 |
| கறுப்புக் கொள்ளைநோய் | ,, 1347 |
| பாய்ட்டியர்ஸ் சண்டை | ,, 1356 |
| பிரிடிக்னி உடன்படிக்கை | ,, 1360 |
| வேலையாட்களின் கலகம் | ,, 1381 |
| ரிச்சர்ட் முடியை இழத்தல் | ,, 1399 |

# VI. லங்காஸ்டர் யார்க் அரசர்களின் காலம் (கி. பி. 1399—1484)

## அத்தியாயம் 1.

### நான்காவது ஹென்றி (கி. பி. 1399—1413) யும் ஐந்தாவது ஹென்றி (கி. பி. 1413—1422) யும்

பார்லிமெண்டின் அதிகாரப் பெருக்கு:—லங்காஸ்டர் வம்சத்தில் உதித்து இங்கிலாந்தை ஆண்ட அரசர்கள் மூவரில் நான்காவது ஹென்றிதான் முதல் அரசர். அவர் பார்லிமெண்டின் அபிப்பிராயப்படி ஆட்சிபுரியச் சம்மதித்த

தின்பேரில் ஆங்கிலச் சிங்காதனம் பெற்றார். ஆகையால் அவர் பார்லிமென்டின் அபிப்பிராயத்தை ஒத்து ஆட்சிபுரிந்து வந்தார். லங்காஸ்டர் வம்சத்தரசர்களின் காலத்தில் பார்லிமென்டுக்கு அதிகச் செல்வாக்கும் அதிகாரமும் ஏற்பட்டன.

ஹென்றி கலகங்களை அடக்குதல்:—அவரது ஆட்சிக் காலத்தில் நாட்டில் அநேக கலகங்கள் உண்டாயின. வெல்ஸ் ஜாதியாரும், நார்தம்பர்லாந்து பிரபுவும் சேர்ந்துகொண்டு அநேக கலகங்களைச் செய்தார்கள். இக் கலகங்களை ஹென்றி பார்லிமென்ட் சபையின் உதவியால் அடக்கிவிட்டார். மேலும், அவர் போப்பின் அதிகாரத்தை இங்கிலாந்தில் வளரும்படி செய்ய எண்ணி, விக்லிப் கட்சியைச் சேர்ந்தவர்களை எதிர்த்து பார்லிமென்ட் சபையில் ஒரு கொடிய சட்டத்தை இயற்றும்படி செய்தார். அதன்படி லாலார்டுகள் சர்ச் கொள்கைகளை ஒத்துக்கொள்ளாததற்கு உயிருடன் வைத்து எரிக்கப்பட்டார்கள். இதற்குப் பின் லாலார்டுகளின் தொந்தரவு அடியோடு அழிந்துவிட்டது. இப்படி, நான்காவது ஹென்றி நாட்டில் தோன்றிய பிரபுக்களின் கலகங்களையும் மதக்கிளர்ச்சிகளையும் அடக்கி, வெகு திறமையுடன் இங்கிலாந்தை ஆண்டுவிட்டு கி. பி. 1413ல் இறந்தார்.

ஐந்தாவது ஹென்றி:—நான்காவது ஹென்றிக்குப்பிறகு அவருடைய புதல்வரான ஐந்தாவது ஹென்றி ஆங்கிலச் சிங்காதனம் பெற்றார். அவரது காலத்தில் நூறு வருஷப் போர் மறுபடியும் ஆரம்பித்தது. ஐந்தாவது ஹென்றி பிரெஞ்சு மகுடத்தைப் பெறுவதற்குத் தமக்குப் பாத்தியம் உண்டு என்று கூறினார். அவ்வாறு அவர் பிரெஞ்சு மகுடத்திற்குப் பாத்தியம் கொண்டாடியது சரியல்ல.

## லங்காஸ்டர் யார்க் அரசர்களின் வம்சாவளி.

எட்வர்ட் III (கி. பி. 1327—1377)

- கருங்கவச இளவரசர்
  - ரிச்சர்ட் II
- லயோனல்
  - (பெ) பிலிப்பா
    - ரோஜர்
      - ஆண் மார்ட்டிமர் (பெ) = கேம்பிரிட்ஜ் பிரபு
        - ரிச்சர்ட் யார்க் கோமகனர்
          - எட்வர்ட் IV (1461-1483)
            - எட்வர்ட் V
            - ரிச்சர்ட்
            - எலிஸபெத் = ஹென்றி VII
          - ஜார்ஜ் (க்ளாரன்ஸ் கோமகனர்)
            - எட்வர்ட் (வார்விக் பிரபு)
          - ரிச்சர்ட் (1483-1485)
- எட்மண்ட் யார்க் கோமகனர்
- ஜான் ஆப் காண்ட் லங்காஸ்டர் கோமகனர்
  - ஹென்றி IV (1399-1413)
    - ஹென்றி V (1414-1422)
      - ஹென்றி IV (1422-1461)
  - ஸாமர்ஸெட் பிரபு
    - ஸாமர்ஸெட் கோமகனர்
      - மார்கரட் (பெ) = எட்மண்ட் ட்யூடர்
        - ஹென்றி VII

விடுவித்தாள். அதனால் அவளுக்கு ஆர்லியன்ஸ் கன்னி (Maid of Orleans) என்ற பெயர் வழங்கிவந்தது. இதற்குப் பிறகு அவள் ரீம்ஸ் (Reims) நகரிலுள்ள கிறிஸ்தவ ஆலயத்தில் பிரான்ஸ் இளவரசராகிய சார்ல்ஸுக்கு மகுடாபிஷேகம் நடத்திவைத்தாள். பிறகு அவள் ஆங்கிலேயர்களது கையில் அகப்பட்டுக்கொண்டாள். அவர்கள் அவளைப் பிடித்து ஒரு சூனியக்காரி என நினைத்து, ரூவன் கடைத் தெருவிலே கி. பி. 1431ல் உயிருடன் எரித்துவிட்டார்கள்.

நூறு வருஷப்போரின் முடிவு:—சிலகாலம் சென்ற பிறகு ஆங்கிலேயர்கள் நூறு வருஷப் போரில் தோல்வியடைய ஆரம்பித்தனர். அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. பெட்பர்டைப்போல வெகு தைரியமுள்ள தளகர்த்தர்கள் இங்கிலாந்தில் இல்லை என்பது ஒன்று. பர்கண்டியக் கட்சியினருக்கும் ஆங்கிலேயருக்கும் ஏற்பட்டிருந்த சிநேகத்தன்மை அறுந்துவிட்டது மற்றொன்று. இவற்றால் ஆங்கிலேயர்கள் ஜயித்துக்கொண்ட மாகாணங்கள் எல்லாவற்றையும் இழந்துவிட்டார்கள். நூறு வருஷப் போர் கி. பி. 1451ல் முடிவடையும் பொழுது ஆங்கிலேயர்களுக்குக் கலே நகரம் ஒன்றுதான் இருந்தது.

ரோஜாப்பூப் போர்களின் காரணங்கள் :—ஹென்றி சாத்விகக் குணமுடையவர். இவருக்கு இங்கிலாந்தை ஆட்சி புரியத் தகுந்த தேக வலிமையும், மனோதிடமும் கிடையா. இவரது மனைவியாகிய மார்கரெட் ஆங்கிலேயரின் மனதில் வெறுப்பு உண்டாகும்படியான பல காரியங்களைச் செய்தாள். மேலும், நூறு வருஷப் போரில் ஆங்கிலேயர்கள் தோல்வியடைந்த செய்தி எங்கும் பரவியது. இக் காரணங்களால் ஆங்கிலேயர்கள் ஹென்றியைச் சிம்மாசனத்தினின்று நீக்க எண்ணினார்கள். இந்த நிலைமையில் கி. பி. 1453ல்

ஹென்றிக்குச் சித்தப் பிரமை உண்டாகியது. ஆகவே ஜனங்கள் யார்க் கோமகனான ரிச்சர்ட் (Richard, Duke of York) என்பவரை அரசருக்குப் பதிலாக இங்கிலாந்தை ஆட்சி புரியும்படி வேண்டிக் கொண்டார்கள். அவர் மூன்றாவது எட்வர்டின் இரண்டாவது குமாரரான லயோனல் (Lionel) சந்ததியில் உதித்த ஆன் (Anne) என்ற பெண்ணின் புதல்வராவர். மேலும், அவர் எட்வர்டின் ஐந்தாவது குமாரரும், யார்க் கோமகனுமான எட்மண்ட் என்பவருடைய பேரன். ஆகையால் அவர் லயோனல் சந்ததியையும் எட்மண்ட் சந்ததியையும் சேர்ந்தவர். அக்காலத்திலுள்ள ஆங்கிலப் பிரபுக்களில் செல்வத்திலும் செல்வாக்கிலும் சிறந்தவர் ரிச்சர்ட். அவரிடத்தில் ஜனங்களுக்கு அதிகப் பிரியமும் நம்பிக்கையும் உண்டு. ஆகையால்தான் ஆங்கிலப் பிரபுக்கள் அவரைத் தேசரக்ஷகராக (Protector) இருக்கும்படி வேண்டிக்கொண்டார்கள். கொஞ்சகாலமானபின் ஆறாவது ஹென்றிக்குச் சித்தப் பிரமை தெளிந்தது. உடனே ஹென்றி ரிச்சர்டை நீக்கிவிட்டுத் தாமே ஆளத் தொடங்கினர். ரிச்சர்டுக்கு இப்பொழுது கொஞ்சம் மனத் தாங்கல் ஏற்பட்டது. பிறகு அவர் தமக்குத்தான் ஆறாவது ஹென்றியைக் காட்டிலும் இங்கிலாந்தின் சிம்மாசனத்திற்கு அதிகப் பாத்தியம் உண்டென்று கூறினர். அவர் கொண்டாடிய பாத்தியம் நியாயமானது எனத் தோன்றுகிறது. ஏனெனில் ரிச்சர்ட் மூன்றாவது எட்வர்டின் இரண்டாவது குமாரரான லயோனலின் வம்சத்தைச் சேர்ந்தவர். ஆனால் ஆறாவது ஹென்றியோ மூன்றாவது எட்வர்டின் மூன்றாவது புதல்வரான ஜானின் வம்சத்தில் உதித்தவர்.

ரோஜாப்பூப் போர்கள் (கி. பி. 1455–1485):—ரிச்சர்ட் ஆங்கில மகுடம் தமக்கு உரியதென்று கொண்டாடிக்கொண்டு

கி. பி. 1455ல் ஒரு சேனையைக் கூட்டினர். ஹென்றியும் ஒரு படையைச் சேர்த்துரிச்சர்டுடன் போர் புரியத் தயாராய இருந்தார். ஆங்கிலப் பிரபுக்களிற் சிலர் லங்காஸ்டர் வம்சத்து ஹென்றியையும், சிலர் யார்க் வம்சத்து ரிச்சர்டையும்




சார்ந்து நின்றனர். இந்த உள்நாட்டுப் போரிலும் பிரபுக்கள் கலந்து சண்டை செய்தார்கள். யார்க் கட்சியார் வெள்ளை ரோஜாப்பூ (White Rose) வைத் தங்களது அறிகுறியாக

அணிந்துகொண்டனர். லங்காஸ்டர் கட்சியார் சிவப்பு ரோஜாப் பூ (Red Rose) வைத் தங்களது அறிகுறியாக அணிந்து கொண்டனர். இக்காரணத்தினால் இந்த உள்நாட்டுப் போரை ரோஜாப்பூப் போர்கள் (The Wars of the Roses) என்று ஜனங்கள் பிற்காலத்தில் அழைத்தார்கள். இந்த யுத்தம் லங்காஸ்டர் வம்சத்தாருக்கும் யார்க் வம்சத்தாருக்கும் ஆங்கில சிங்காதனத்தைக் குறித்து ஏற்பட்டு முப்பது ஆண்டுகள் நடந்தது.

ஹென்றி முடியை இழத்தல்:—ஸேன்ட் ஆல்பன்ஸ் (St Albans) என்ற இடத்தில் கி. பி. 1455ல் ஒரு சண்டை நடந்தது. இதில் யார்க் வம்சத்து ரிச்சர்டுக்கு வெற்றி ஏற்பட்டது. இதற்குப் பிறகு அவர் ஆங்கில மகுடத்தைப் பெற முயற்சி செய்தார். ஹென்றியின் மனைவியாகிய மார்கரெட் வட இங்கிலாந்தில் ஒரு படையைச் சேகரித்து கி. பி. 1460ல் போர் செய்யத் தயாராய் இருந்தாள். ரிச்சர்ட் இச் செய்தியைக் கேட்டு தமது சேனையை வடக்கே நடத்திச் சென்றார். வேக்பீல்டு (Wakefield) என்ற இடத்தில் கி. பி. 1460ல் ஒரு பெரிய சண்டை நடந்தது. இதில் யார்க் கட்சியார் தோல்வி அடைந்தனர். ரிச்சர்ட் போர்க்களத்தில் மடிந்தார். ஆனால் அவருடைய மூத்த குமாரரான எட்வர்ட், ஒரு சேனையுடன் வெகு வேகமாய் வந்து டௌடன் (Towton) என்ற இடத்தில் லங்காஸ்டர் கட்சியாரைத் தோற்கடித்தார். இச் சண்டையில் தோல்வியடைந்த மார்கரெட் பிரான்ஸுக்கு ஓடிவிட்டாள்; ஹென்றியும் சிறையில் இடப்பட்டார். இத்துடன் லங்காஸ்டர் வம்சத்தாருடைய ஆட்சி முடிவடைந்தது. யார்க் வம்சத்தினரே கி. பி. 1461ல் இங்கிலாந்தில் ஆள ஆரம்பித்தனர்.

கேள்விகள்:—

1. ஜோன் ஆவ் ஆர்க் கண்ட கனவு யாது? அவள் எவ்வாறு தனது தேசத்தைக் காப்பாற்றினாள்?
2. நூறு வருஷப் போரில் ஆங்கிலேயர்கள் தோல்வியடைந்ததற்குக் காரணங்கள் யாவை?
3. நூறு வருஷப்போர் முடியும் காலத்தில் ஆங்கிலேயர்களின் வசம் மீதியிருந்தது யாது?
4. 'ரோஜாப்பூப் போர்கள்' என்ற பெயர் ஏன் வழங்கலாயிற்று?
5. அப்போர் எக்காரணங்களால் ஏற்பட்டது?
6. 'யார்க்' கோமகனான ரிச்சர்ட் ஆங்கில மகுடத்தை அடைவதற்கு உள்ள உரிமையை வம்சாவளியின் மூலமாய்க் காட்டுக.
7. ஆறாவது ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் நடந்த ரோஜாப்பூப் போர்களின் முக்கிய சண்டைகள் யாவை? அவைகள் எவ்வாறு முடிந்தன?

---

## அத்தியாயம் 3.

---

### நான்காவது எட்வர்ட் (கி. பி. 1461—1483)

எட்வர்டும் வார்விக் பிரபுவும்:—டௌடன் சண்டையில் வெற்றியடைந்த யார்க் வம்சத்து எட்வர்ட் இங்கிலாந்தின் மன்னரானார். இவருக்குச் சிங்காதனம் கிடைக்குமாறு நெவில் (Neville) குடும்பத் தலைவரும் வார்விக் பிர (Earl of Warwick)வுமான ரிச்சர்ட் பெருதவி புரிந்தார். அவர் எட்வர்டின் ஆட்சியில் சர்வ அதிகாரங்களையும் பெற்றிருந்தார். சிலகாலஞ்சென்றபின் எட்வர்டுக்கும் வார்வி

பிரபுவுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டது. ஆகையால் வார்விக் பிரபு பிரான்ஸுக்குச் சென்று ஹென்றியின் மனைவியாகிய மார்காட்டுடன் சமாதானம் செய்துகொண்டார்.

வார்விக் பிரபு லங்காஸ்டர் கட்சியைச் சேருதல்:—இவ்வாறு வார்விக் பிரபு லங்காஸ்டர் கட்சியில் சேர்ந்துவிட்டார். பிறகு அவர் இங்கிலாந்திற்கு ஒரு பெரிய சேனையுடன் வந்து, ஆறுவது ஹென்றியை விடுவித்து, அவரை மறுபடியும் ஆங்கில வேந்தராகச் செய்து வைத்தார். எட்வர்டை கி. பி. 1461ல் ஆங்கில மன்னராகச் செய்தவரும் இந்த வார்விக் பிரபுவே. ஆனதுபற்றி வார்விக் பிரபுவுக்கு அரசாராக்குவோர் (King-Maker) என்ற பெயர் வழங்கலாயிற்று.

லங்காஸ்டர் கட்சியின் தோல்வி:—வார்விக் பிரபு தமக்கிழைத்த தீமையை நினைக்க நினைக்க எட்வர்ட் வருத்தத்தையும் கோபத்தையும் அடைந்தார். அவர் ஒரு பெரிய சேனையுடன் சென்று, வார்விக் பிரபுவின் தலைமையின் கீழிருந்த படையைப் பார்னட் (Barnet) என்றவிடத்தில் தாக்கினர். இச்சண்டையில் வார்விக் மடிந்தார். பிறகு மார்காட் மற்றொரு படையுடன் ட்யூக்ஸ்பரி (Tewkesbury) என்னுமிடத்தில் எட்வர்டை எதிர்த்தாள். இப் போரில் மார்காட் தோல்வியடைந்து பிரான்ஸுக்குத் திரும்பிச் சென்றாள். உடனே வயதுசென்ற ஹென்றி அரசரின் கட்டளைப்படி கொல்லப்பட்டார்.

எட்வர்டின் ஆட்சி:—நான்காவது எட்வர்ட் பத்து வருஷங்கள் லங்காஸ்டர் கட்சியினரோடு போர் புரிந்தார். பிறகு அவர் இங்கிலாந்தைத் தமதிஷ்டப்படி பன்னிரண்டு ஆண்டுகள் வரையில் ஆட்சி புரிந்தார். அவர் பார்லிமெண்டைத் தமக்கு அடங்கியிருக்கும்படி செய்தார்; பிரபுக்களின் அதி

காரத்தைக் குறைத்தும் வந்தார். மேலும், அவர் பெருந் தொகையைத் தமக்குக் கடனாகக் கொடுத்து உதவி செய்யும்படி பொது ஜனங்களைக் கட்டாயப்படுத்தினார். இதற்குக் கட்டாயக் கடன்கள் (Forced Loans) என்று பெயர். இதைத் தவிர, அவர் பொது ஜனங்களிடமிருந்து ஏராளமான தொகையை அவர்களுடைய நன்மைக்கே உபயோகப்படுத்துவதாகக் கூறி வசூல் செய்தார். இவ்வாறு அவர் இங்கிலாந்தில் தம்மிஷ்டப்படி ஆட்சிபுரிந்துவிட்டு கி. பி. 1483 ல் மரணமடைந்தார்.

கேள்விகள்:—

1. வார்விக் பிரபுவுக்கு 'அரசராக்குவோர்' என்ற பட்டம் எப்படித் தகுதியுள்ளதாகும்?
2. நான்காவது எட்வர்டின் ஆட்சிக்காலத்தில் நடந்த ரோஜாப்பூப்போரின் முக்கிய சண்டைகள் யாவை?

---

## அத்தியாயம் 4.

### மூன்றாவது ரிச்சர்ட் (கி. பி. 1483—1485)

இரண்டு இளவரசர்கள் சிறையில் அடைபட்டது:— நான்காவது எட்வர்ட் இறந்தவுடன், அவருடைய பதின்மூன்று வயதுள்ள மூத்த புதல்வர் ஐந்தாவது எட்வர்ட் என முடிசூட்டப்பட்டார். ஆனால் அவருடைய சிறிய தகப்பனாரான ரிச்சர்ட் ரிஜண்டாக இருந்து நாட்டை ஆண்டுவந்தார். அவர் ஐந்தாவது எட்வர்டையும், அவரது இளைய சகோதரரையும் சிறையிலிடும்படி செய்தார். கொஞ்ச காலத்திற்கெல்லாம் அவ்விருவர்களும் இரகசியமாகக் கொல்லப்பட்டார்கள். ரிச்சர்ட் இதில் சம்பந்தப்பட்டவர் என்று நமக்கு நிச்சயமாகத் தெரியாது. ஆனால் அவருடைய உத்தரவின்பேரில்தான்

இளவரசர்கள் கொல்லப்பட்டார்கள் என்று அக்காலத்தில் எல்லோரும் நினைத்தார்கள். ரிச்சர்ட் இரண்டு வருஷங்கள் மட்டும் ஆண்டார். அவரது ஆட்சிக்காலத்தில் ஜனங்களுக்கு அனேக சங்கடங்கள் ஏற்பட்டன. ஜனங்கள் இரண்டு இளவரசர்களும் கொலை செய்யப்பட்டதற்கு ரிச்சர்ட்டே காரண புருஷர் என்று எண்ணி அவரை வெறுத்தார்கள்.

பாஸ்வர்த் சண்டை (கி பி. 1485) :-ரிச்சர்ட் அக்காலத்தில் ஆங்கில மகுடத்திற்கு உரிமையாளர் ஒருவருமில்லை என்று நினைத்துக்கொண்டிருந்தார். ஆனல் ரிச்மண்ட் பிரபு (Earl of Richmond)வாகிய ஹென்றி தம்மை லங்காஸ்டர் வம்சத்தினர் என்று சொல்லிக்கொண்டு ஆங்கில மகுடத்திற்குப் பாத்தியம் கொண்டாடினர். அவருடைய தாயாரான மார்கரட் காண்ட் பிரபுவான ஜானின் இரண்டாவது குமாரருடைய பேத்தி. ஆகையால் தான் ஹென்றி தம்மை லங்காஸ்டர் வம்சத்தினர் என்று சொல்லிக் கொண்டார். (110ம் பக்கத்திலுள்ள வம்சாவளியைப் பார்க்க). ரிச்மண்ட் பிரபுவான ஹென்றி ஒரு பெரிய சேனையுடன் பாஸ்வர்த் (Bosworth) என்னுமிடத்தில் கி. பி. 1485ல் ரிச்சர்டை எதிர்த்துச் சண்டை செய்தார். ரிச்சர்ட் இச் சண்டையில் தோல்வியடைந்ததுடன் மாண்டார். இத்துடன் ரோஜாப்பூப் போர்கள் முடிந்தன. யார்க் வம்சத்தின் ஆட்சியும் இங்கிலாந்தில் முடிந்தது. லங்காஸ்டர் வம்சத்தைச் சேர்ந்த ரிச்மண்ட் பிரபு ஏழாவது ஹென்றியென இங்கிலாந்தின் மன்னரானர்.

கேள்விகள்:—

1. மூன்ருவது ரிச்சர்டின் ஆட்சியைப்பற்றிச் சுருக்கமாய் எழுதுக.
2. ரிச்மண்ட் பிரபு எவ்வாறு ஆங்கிலமகுடத்தைப் பெற்ருர்?

## அத்தியாயம் 5.

### நவீன காலத் தோடக்கம்.

பதினைந்தாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் ரோஜாப்பூப் போரினாலும் நூறாண்டுப் போரினாலும் அமைதி கெட்டுப் போய்விட்டது. பிரபுக்கள் சுயநலம் பாராட்டி வந்தார்கள். பிரபுக்கள் ரோஜாப்பூப் போர்களில் கலந்து ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டு வந்தார்கள். சர்ச்சின் நிலைமை சீர்குலைந்து இருந்தது. சித்திரவேலை, கல்வி முதலானவைகள் அதிக ஆதரவைப் பெறவில்லை.

ஏழாவது ஹென்றி சிங்காதன மேறினதும் நாட்டில் ஒரு பலம் பொருந்திய ராஜாங்கத்தை ஏற்படுத்தினார். அதன் பின் நாட்டின் வியாபாரம் பெருகிற்று. இங்கிலீஷ் மிராசுதார்கள் பிளாண்டர்ஸ் (Flanders) முதலான நாடுகளுடன் உரோம வியாபாரம் செய்து அதிக லாபத்தை அடைந்தார்கள். பட்டினங்களின் வியாபாரம் அதிகரித்தது. ஜனங்கள் மிகவும் நேர்த்தியான வீடுகளைக் கட்டிக்கொண்டு வெகு சுகமாய் வாழலானார்கள்.

இக்காலத்தில் கி. பி. 1453 ல் துருக்கியர்கள் கான்ஸ்டான்டிநோபில் (Constantinople) என்னும் நகரைக் கைப்பற்றிக் கொண்டார்கள். ஆகையால், அங்கு வசித்து வந்த அனேக கிறிஸ்தவக் கலைஞர்கள் தம்மிடமிருந்து கிரீக், லத்தீன் பாஷைகளில் எழுதப்பட்டுள்ள ஏட்டுச் சுவடிகளை எடுத்துக்கொண்டு மேற்கு ஐரோப்பாவிலுள்ள நாடுகளுக்கு ஓடிவிட்டார்கள். பிறகு அவர்கள் மத நூல்களை அநேகருக்குக் கற்பிக்கத் தொடங்கினார்கள். ஆதலால் ஐரோப்பியர்களுக்குக் கல்வியில் அதிக ஊக்கம் உண்டாயிற்று. இதனையே கல்வி

இஷ்டப்படி நாட்டை ஆண்டபோதிலும், அவர்கள் பொது ஜனங்களின் நன்மையைக் கருதிய பல காரியங்களைச் செய்தார்கள். இக்காரணத்தினாலும் பொதுஜனங்கள் ட்யூடர் மன்னர்களின்மீது ஒரு குறையும் சொல்லிக்கொள்ள இடமில்லாமல் இருந்தது. ட்யூடர் அரசர்களின் காலத்தில் வரிகளை விதித்தும், சட்டங்களை இயற்றியும், அரசாட்சியில் உள்ள குறைகளை பார்லிமெண்ட் அரசர்க்கு எடுத்துக் காட்டியும் வந்தது. ட்யூடர் அரசர்கள் வசூலான பணத்தைச் செலவிட்டும், தேசச் சட்டங்களை அமுலுக்குக் கொண்டு வந்தும் ஆட்சி புரிந்து வந்தார்கள். அநேகமாய்ப் பார்லிமெண்ட் மகா சபை ட்யூடர் மன்னர்களின் அபிப்பிராயத்திற்கு இணங்கியே நடந்துவந்தது. ஆனால் ட்யூடர் வம்சத்தரசர்கள் பார்லிமெண்டின் அபிப்பிராயம் தமது இஷ்டத்திற்கு மாறாக இருப்பதாகத் தெரிந்துகொண்டால் அதன் அபிப்பிராயப்படி நடப்பார்கள்.

அரசர்க்கு ராஜீய காரியங்களில் ஆலோசனைகூற அநேக மந்திரிகள் இருந்தார்கள். ஆனால் அவருடைய இரண்டு காரியதரிசிகளுந்தான் அரசாங்க சம்பந்தமான சகல காரியங்களையும் கவனித்து வந்தார்கள். மேலும், ட்யூடர் மன்னர்களுக்கு ராஜீயக் காரியங்களில் ஆலோசனை கூறுவதற்காக ஒரு மந்திரி சபையும் உண்டு. இச்சபையில் ஏறக்குறைய இருபது மெம்பர்கள் இருந்தார்கள். அரசர்கள் அடிக்கடி இச் சபையைக் கலந்து ஆலோசனை கேட்டு வந்தபோதிலும் தங்கள் இஷ்டப்படியே காரியங்களைச் செய்து வந்தார்கள். இச் சபையோர்களும் ட்யூடர் அரசர்களின் அபிப்பிராயத்திற்கு மாறாக ஒன்றும் செய்வதேயில்லை.

ட்யூடர் மன்னர்கள் நாட்டின் பாதுகாப்பிற்காக ஒரு நிலைத்த சைன்யமும் வைத்துக் கொள்ளவில்லை. சேனையின்

உதவியின்றி அவர்கள் நாட்டின் அமைதியை நிலவச் செய்தார்கள். நாட்டின் பாதுகாப்பிற்காகச் சேனையின் உதவி வேண்டிய காலங்களில் அவர்கள் போர்த் தொழிலை அறிந்த குடிகள் போர்வீரர்களாக சேனையில் அமர்ந்து போர் புரியும் படி செய்துவந்தார்கள். சேனையைத் தவிர, இங்கிலாந்தின் பாதுகாப்பிற்கு ஒரு கப்பற்படையும் அவசியம் வேண்டும் என்பதை ட்யூடர் மன்னர்கள் தங்களது அதிபுத்தி நுட்பத்தினால் உணர்ந்தார்கள். எட்டாவது ஹென்றியின் ஆளுகையில் அழிக்கப்பட்ட சன்னியாசி மடங்களின் சொத்தைக் கொண்டு 'Great Harry' என்ற ஒரு பெரும் போர்க் கப்பல் கட்டப்பட்டது. இங்கிலாந்தின் கடற்கரை நாடுகளில் கப்பல் கட்டும் தொழில் மேன் மேலும் அபிவிருத்தி யடைந்து வந்தது. எலிசபெத் மகாராணியாரின் காலத்தில் இங்கிலாந்திற்குச் சொந்தமாய் அநேக போர்க்கப்பல்கள் இருந்தன. ஹாக்கின்ஸ், ட்ரேக் முதலான சிறந்த மாலுமிகள் இருந்தார்கள். ஆகையால்தான் ஸ்பானிஷ் ஆர்மடாவினால் இங்கிலாந்திற்கு ஆபத்து நேர்ந்த காலையில், ஆங்கிலேயர்கள் தங்களது கப்பற்படையின் உதவியால் தங்களுடைய நாட்டையும், பிராடெஸ்டெண்ட் மதத்தையும் பாதுகாத்துக் கொண்டார்கள்.

வர்த்தகம்:—ஆர்மடாப் போரில் ஆங்கிலேயர்களுக்கு வெற்றி உண்டானதால் இங்கிலாந்திற்கு கடல் ஆதிக்கம் ஏற்பட்டது. கடல் வலிமை உண்டானவுடன் ஆங்கில மாலுமிகள் கடல் மார்க்கமாய் அயல் நாடுகளுக்குச் சென்று வியாபாரம் செய்யவும், அவைகளில் குடியேறவும் தொடங்கினார்கள். கி. பி. 1600-ல் லண்டன் நகரத்தின் வியாபாரிகள் சிலர் இந்தியாவுடன் வியாபாரம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் ஒரு வர்த்தகச் சங்கத்தை ஏற்படுத்திக் கொண்டனர். அதற்குக் கிழக்கு இந்தியாக் கம்பெனி என்று

பெயர். அக்கம்பெனி வியாபாரிகள் பெரிய கப்பல்களைக் கட்டிக்கொண்டும் சிறந்த மாலுமிகளின் உதவியைக் கொண்டும், இந்தியாவின் மேல்கடற்கரையிலும், கிழக்கிந்தியத் தீவுகளிலும் வியாபாரம் செய்து வந்தார்கள். தவிர, ருஷ்யாவுடன் வியாபாரம் செய்வதற்கு ஆங்கிலேயர்கள் ஒரு வர்த்தகச் சங்கத்தை ஏற்படுத்திக் கொண்டார்கள். அக்காலத்தில் மாஸ்கோவி என்ற பட்டணம் ருஷ்யாவின் தலைநகராக இருந்ததால் அதற்கு 'மஸ்கோவி' கம்பெனி என்று பெயர் வந்தது.

கல்வி:- எட்டாவது ஹென்றியின் காலத்தில் ஐரோப்பாவிலும் இங்கிலாந்திலும் கிரீக், லத்தின் என்ற பாஷைகளில் அதிகத் தேர்ச்சி பெற்ற கலைஞர்கள் இருந்தார்கள். அவர்களுள் இராஸ்மஸ், மோர், ஜான் காலட் முக்கியமானவர்கள். பதினைந்தாவது நூற்றாண்டிலேயே புத்தகங்கள் அச்சிடும் முறை கண்டுபிடிக்கப்பட்டதால் அநேக புத்தகங்கள் கொஞ்ச காலத்தில் வெளியிடுவதற்கு முடிந்தது. ஸர் தாமஸ் மோர் 'யுட்டோபியா' (Utopia) என்ற ஒரு புத்தகத்தை எழுதினார். பிறகு பைபிள், ஜெபப் புத்தகம் முதலானவை ஆங்கிலப் பாஷையில் மொழி பெயர்த்து எழுதப்பட்டன. எலிஸபெத் ராணியாரின் ஆளுகையில் ஆங்கிலக் கலைஞர்கள் அநேக புத்தகங்களைச் செய்யுள் நடையில் இயற்றினார்கள். எட்மென்ட் ஸ்பென்ஸர் என்ற ஆங்கிலேயர் 'Fairy Queen' என்ற புத்தகத்தைச் செய்யுள் நடையில் வெளியிட்டார். அப்புத்தகத்தால் அவருக்கு என்றும் மழியாத கீர்த்தி உண்டாகியது. மேலும், எலிஸபெத்தின் காலத்தில் மார்லோ, வில்லியம் ஷேக்ஸ்பியர் என்ற இரண்டு நாடகக்காரர்களும் அநேக நாடகங்களையும் காவியங்களையும் இயற்றினார்கள். அநேக நாடகசாலைகளும் இங்கிலாந்தில் பலவிடங்களில் கட்டப்பட்டன. அவைகளில் Globe Theatre முக்கியமானது. டாமி



லென் என்பவரைப்பற்றி கிரிஸ்தபர் மார்லோ கி. பி. 1587-ல் ஒரு நாடகம் எழுதியுள்ளார். ஷேக்ஸ்பியரை ஆங்கில நாடகக் கவிகளுள் முதன்மையானவர் (கவிச் சக்கரவர்த்தி) என்று பலர் கருதுகின்றனர். அவரால் ஆங்கிலப் பாஷையில் எழுதப்பட்டுள்ள நாடகங்கள் உயர்தரக் கலாசாலைகளில் பாடமாக வைக்கப்பட்டு வருகின்றன. அதே காலத்தில் ஸர் பிரான்ஸிஸ் பேக்கன் என்ற ஓர் ஆங்கிலேயர் அநேக அருமையான வியாசங்களை இனிமையாயும் தெளிவாயும் உள்ள நடையில் எழுதியிருக்கிறார். அவ்வியாசங்களை ஆங்கிலேயர்கள் மிக அருமையானவை என்று கருதுகிறார்கள். மகாராணியாரின் காலத்தில் எழுதப்பட்டுள்ள புத்தகங்கள் எல்லாம் வசனநடையில் இருந்தாலும் சரி, செய்யுள் நடையில் இருந்தாலும் சரி, அவைகள் ஆங்கிலேயர்களுடைய தைரியத்தையும் விடாமுயற்சியையும் தேச அபிமானத்தையும் நன்கு தெரிவிக்கின்றன.

கேள்விகள்:—

1. ட்யூடர் மன்னர்களின் ஆட்சி முறையைப்பற்றித் தெரிந்த வரையில் எழுதுக.
2. இங்கிலாந்தின் வாணிபம் எலிஸபெத்தின் காலத்தில் மேன்மேலும் பெருகினதற்கு என்ன காரணம்?
3. எலிஸபெத் மகாராணியாரின் காலத்தில் வெகு சிறப்புடன் விளங்கின கவிகளும் கலைஞர்களும் யாவர்?

* *

| முக்கிய நிகழ்ச்சிகள். | | வருஷங்கள், |
|---|---|---|
| நட்சத்திர அறை நியாயஸ்தலம் | ,, | 1487 |
| உல்ஸி சான்ஸலர் பதவியை அடைந்தது | ,, | 1514 |
| பொன்னுடைச் சமவெளிச் சந்திப்பு | ,, | 1520 |
| உல்ஸியின் மரணம் | ,, | 1529 |

| | | |
|---|---|---|
| சர்ச் தலைமைச் சட்டம் | ,, | 1534 |
| கலே நகர் இழக்கப்பட்டது | ,, | 1558 |
| சர்ச் தலைமைச் சட்டம் இரண்டாம் முறை பிறப்பிக்கப்பட்டது | ,, | 1559 |
| மேரியின் சரணம் | ,, | 1568 |
| மேரியின் மரணம் | ,, | 1587 |
| ட்ரேக் ஸ்பானிஷ் போர்க் கப்பல்களைக் காடிஸ் துறைமுகத்தில் எரித்து விடுதல் | ,, | 1588 |
| ஆர்மடாப் போர் | ,, | 1588 |

---

# VIII. ஸ்டூவர்ட் அரசர்களின் காலம்
(கி. பி. 1603—1625)

---

## அத்தியாயம் 1.

---

### முதலாவது ஜேம்ஸ் (கி. பி. 1603—1625)

**ஜேம்ஸ் இங்கிலாந்தின் மன்னராதல்:—** எலிஸபெத்துக்குப் பிறகு ஸ்காட்லாந்து அரசியாயிருந்த மேரியின் புதல்வரான ஜேம்ஸ் ஆங்கில மகுடத்திற்கு நெருங்கின பாத்தியஸ்தரானதால் அவரே ஆங்கில வேந்தரானார். அவர் ஸ்டூவர்ட் வம்சத்தைச் சேர்ந்தவர். அவர் ஏற்கனவே ஸ்காட்லாந்தில் ஆட்சி புரிந்துவந்தார். இவ்வாறு ஸ்காட்லாந்தும் இங்கிலாந்தும் ஒரே அரசரின் ஆட்சிக்கு உட்பட்டன. ஆனால் இவ்விரு தேசங்களின் பார்லிமென்ட்களும், சர்ச்சுகளும், சட்டங்களும் வெவ்வேறாக இருந்துவந்தன. அவர் ஸ்காட்லாந்தில் ஆறாவது ஜேம்ஸ் என்றும், இங்கிலாந்தில் முதலாவது ஜேம்ஸ் என்றும் அழைக்கப்பட்டார்.

ஜேம்ஸின் குணாதிசயங்கள்:—ஜேம்ஸ் கல்வியில் மிகத் தேர்ச்சியுள்ளவராயினும் விவேகி அல்லர். அவர் தமது இஷ்டப்படி நாட்டையாள விரும்பினார். ஆனால் அவருக்கு நாட்டை ஆளும் திறமை கொஞ்சமேனுமில்லை. அவருக்கு மூர்க்கத்தனமும் பிடிவாதமும் அதிகம். மேலும், அவர் சுயநலம் பாராட்டுபவர். இத்தகைய குணங்கள் வாய்ந்த ஜேம்ஸ் மன்னர் பொதுமக்களின் அன்பை எவ்வாறு அடையக்கூடும்?

வெடிமருந்து சதி (கி. பி. 1605):—ஜேம்ஸ் கத்தோலிக் மதத் தலைவியான மேரியின் புதல்வரானதால் தங்களுக்குச் சாதகமாக மத மாறுபாடுகளைச் செய்வாரென்று ஆங்கில கத்தோலிக்குகள் எண்ணியிருந்தார்கள். ஆனால் அவர் எலிஸபெத்தின் மத நிர்ணய ஏற்பாட்டையே அனுஷ்டிப்பதென்று தீர்மானம் செய்துவிட்டார். ஆகையால் சில கத்தோலிக்குகள் அதிருப்தியால் ஒரு சதியைச் செய்ய எண்ணினார்கள். அவர்கள் பிரபுக்கள் சபை கூடும் மாளிகையின் கீழுள்ள அறைகளை வாடகைக்கு வாங்கி, அவைகளில் வெடிமருந்து நிறைந்த பீப்பாய்களைக் கொண்டுபோய் நிரப்பினார்கள். பார்லிமெண்ட் கூடும் தினத்தில் வெடிமருந்துக்குத் தீ வைத்து ஜேம்ஸையும், பார்லிமெண்டின் அங்கத்தினர்களையும் ஒழிக்க கத்தோலிக்குகள் ஏற்பாடு செய்திருந்தார்கள். கை பாக்ஸ் (Guy Fawkes) என்ற ஒரு போர்வீரன் வெடிமருந்துக்குத் தீ வைப்பது என்று ஏற்பாடாயிருந்தது. இச் சதியில் சம்பந்தப்பட்ட ஒரு கத்தோலிக், தன் உறவினரும் பிரபுக்கள் சபையின் மெம்பருமான மாண்டேகல் பிரபுக்கு பார்லிமெண்ட் மீட்டிங்குக்குப் போகவேண்டாம் என்று ஒரு கடிதம் எழுதினான். அதனால் பார்லிமெண்ட் கூடும் தினத்தில் (கி. பி. 1605 நவம்பர் 5உ) வெடிமருந்துச் சதி (Gun

powder plot) வெளியாகிவிட்டது. கை பாக்ஸ் வெடி மருந்துக்குத் தீ வைக்கப்போகும் சமயத்தில் கைதியாக்கப் பட்டான். அதில் சம்பந்தப்பட்ட எல்லா கதோலிக்குகளும் தண்டிக்கப்பட்டார்கள். இதற்குப் பிறகு ஜேம்ஸ் கதோலிக்கு களுக்கு விரோதமாய் அநேக கடுமையான சட்டங்களைப் பிறப்பித்தார்.

அல்ஸ்டர் மாகாணத்தில் ஆங்கிலேயர்கள் குடியேறுதல்:- முதலாவது ஜேம்ஸ் சிங்காதனமேறினபொழுது அயர்லாந்து ஆங்கில வேந்தரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. ஆயினும், அயர்லாந்தியர்கள் ஆங்கில அரசாங்கத்தாரிடம் விரோதம் பாராட்டிவந்தார்கள். ஆகையால் இங்கிலாந்து மன்னர் தம் சேனையின் பலத்தினால் அயர்லாந்தியர்களை அடக்கி ஆண்டு வந்தார். கி. பி. 1609-ல் டைரோன் பிரபு அயர்லாந்தில் ஒரு கலகம் செய்தார். அது ஆங்கிலேயர்களால் அடக்கப் பட்டவுடன் அப்பிரபு அயர்லாந்திலிருந்து ஓடிவிட்டார். அரசாங்கத்தார் உடனே அவருடைய நிலங்களைப் பிடுங்கி அயர்லாந்தில் குடியேற விரும்பின இங்கிலீஷ் பிராடெஸ்டெண்ட் களுக்குக் கொடுத்தார். ஆனதுபற்றி அநேக இங்கிலீஷ் பிராடெஸ்டெண்ட்கள் அயர்லாந்தின் வடபாகத்திற்குச் சென்று கி. பி. 1611-ல் குடியேறத் தொடங்கினார்கள். அயர்லாந்தின் இதர பாகங்களில் உள்ளவர்கள் கதோலிக் மதத்தினர்கள் ஆகையால் அவர்களுக்கும் வட அயர்லாந்திலே அல்ஸ்டரில் குடியேறின இங்கிலீஷ் பிராடெஸ்டெண்ட்களுக்கும் அடிக்கடி சண்டைகள் ஏற்பட்டு வந்தன.

ப்யூரிட்டன் யாத்திரிகள்:—இம்மாதிரி கதோலிக்குகள் கஷ்டப்படுகையில், ப்யூரிட்டன்கள் 'ஜேம்ஸ் பிராடெஸ்டெண்ட் நாடான ஸ்காட்லாந்திலிருந்து வந்தபடியால் அவர் ப்யூரிட்

டன் சட்சிக்குச் சாதகமாய்ச் சில மத மாறுபாடுகளைச் செய்வார்'' என்று எண்ணினார்கள். ஆனால் ஜேம்ஸ் ஆங்கிலிகன் கட்சியிற் சேர்ந்துகொண்டார். இதைக்கண்ட ஆங்கில ப்யூரிட்டன்களில் அநேகர் தம்மிஷ்டப்படி தெய்வ ஆராதனை செய்யச் சுதந்தரம் கிடைக்காது என்று எண்ணி, இங்கிலாந்தை விட்டு வேறு நாடுகளுக்குச் செல்வதென்று தீர்மானித்தனர். ஆகையால் சில ப்யூரிட்டன்கள் ஹாலந்துக்குப் போய் சிறிது காலம் தங்கி, பிறகு அங்கிருந்து மேப்ளவர் (Mayflower) என்ற ஒரு கப்பலில் ஏறிக்கொண்டு அட்லாண்டிக் சமுத்திரத்தைக் கடந்து வட அமெரிக்காவின் கிழக்கரைப் பிரதேசத்தில் குடியேறினார்கள். இவ்வாறு வட அமெரிக்காவிற்குச் சென்று குடியேறினவர்களே ப்யூரிட்டன் யாத்திரிகள் (Pilgrim Fathers) என்ற பெயர் பெற்றார்கள்.

ஜேம்ஸும் பார்லிமென்டுகளும்:--ஜேம்ஸ் பட்டத்திற்கு வந்ததுமுதல், அவருக்கும் அவரது பார்லிமென்டுகளுக்கும் அநேக விவாதங்கள் நேரிட்டுக்கொண்டே இருந்தன. இதற்குப் பல காரணங்கள் உண்டு. ஜேம்ஸ் பார்லிமெண்டின் அனுமதியின்றித் தமதிஷ்டப்படி வரிகளைப் போட்டும், தம் விரோதிகளை விசாரணையின்றிச் சிறையிலிட்டும் வந்தார். மேலும், அவர் தமக்கு இதமாகப் பேசுவோரின் சொற்களைக் கேட்டு ஆண்டுவரலானார். அவர்களுள் முக்கியமானவர் பக்கிங்காம் பிரபு (Duke of Buckingham) வாகிய ஜார்ஜ் வில்லியர்ஸ் (George Villiers) என்பவர். மேலும், ஜேம்ஸ் 'கடவுள் உரிமை' என்ற ஒரு விநோதமான கொள்கையைப் பின்பற்றி வந்தார்; அஃது 'அரசர் தெய்வத்தன்மை வாய்ந்தவர்; அவர் தமது இஷ்டப்படியே ஆட்சியை நடத்தலாம்; அவரது அதிகாரத்தை ஒருவரும் மறுக்கக்கூடாது' என்பது. இக் கொள்கையைப் பார்லிமென்ட் சபையோர் ஒத்துக்

கொள்ளவில்லை. ஆனதுபற்றி ஆங்கிலேயர்கள் ஜேம்ஸ் மன்னரை வெறுத்தார்கள்.

ஜேம்ஸும் முப்பது வருஷப் போரும்:—கி. பி. 1618-ல் ஜர்மனி தேசத்தில் கதோலிக்குகளுக்கும் பிராடஸ்டண்ட்களுக்கும் முப்பது வருஷப் போர் (Thirty Years' War) ஆரம்பித்தது. ஜர்மனியக் கதோலிக்குகள் ஜேம்ஸின் மாப்பிள்ளையான பிரேடரிக் (Frederick) என்பவரைப் பாலடிநேட் (Palatinate) என்ற அவருடைய மாகாணத்தை ஜயித்துக்கொண்டு துரத்திவிட்டார்கள். அவர் ஜேம்ஸைத் தமக்கு உதவி புரியும்படி வேண்டினார். ஆனால் ஜேம்ஸ் ஜர்மனியக் கதோலிக்குகளுக்கு விரோதமாய்த் தமது மாப்பிள்ளைக்கு உதவி செய்தால், ஸ்பெயின் அரசரின் கோபம் ஏற்படும் என்று எண்ணிச் சும்மாயிருந்து விட்டார். இதைக் கண்ட ஆங்கிலப் பார்லிமெண்ட் கோபமடைந்தது. இஃது இவ்வாறிருக்கையில், ஜேம்ஸ் ஸ்பெயின் மன்னரின் சிநேகத்தை அடைய விரும்பி தமது மூத்த புதல்வரான சார்ல்ஸுக்கு ஸ்பானிஷ் ராஜகுமாரத்தியை விவாகம் செய்துகொள்வதற்கு முயற்சிகள் செய்தார். சார்ல்ஸ் இளவரசரும் தம் தோழரான ஜார்ஜ் வில்லியர்ஸுடன் ஸ்பெயினுக்குச் சென்றார். ஸ்பெயின் மன்னர் இங்கிலாந்தில் கதோலிக் மதத்தை முக்கிய மதமாகச் செய்ய ஜேம்ஸ் இஷ்டப்பட்டால் விவாக ஏற்பாட்டிற்குச் சம்மதிப்பதாகச் சொன்னார். இதற்கு ஜேம்ஸ் இணங்கக் கூடவில்லை.

கேள்விகள் :—

1. முதலாவது ஜேம்ஸுக்கு ஆங்கில மகுடத்திற்கு உள்ள உரிமையை வம்சாவளியின் மூலமாய்க் காட்டுக.
2. ப்யூரிடன் பாத்திரிகள், பக்கிங்காம் பிரபு இவர்களைப் பற்றித் தெரிந்த வரையில் எழுதுக.

3. வெடிமருந்துச் சதி எக்காரணத்தால் உண்டாகியது? அஃது எவ்வாறு முடிந்தது?
4. ஜேம்ஸுக்கும் பார்லிமெண்டுகளுக்கும் எக்காரணங்களால் விவாதங்கள் உண்டாயின?

---

## அத்தியாயம் 2.

### முதலாவது சார்ல்ஸ் (கி. பி. 1625—1649.)

சார்ல்ஸும் பக்கிங்காம் பிரபுவும்:—முதலாவது ஜேம்ஸ் கி. பி. 1625ல் இறக்கவே, அவருடைய புதல்வரான சார்ல்ஸ் பட்டத்திற்கு வந்தார். அவர் தமது தோழரான பக்கிங்காம் பிரபுவின் சொற்களைக் கேட்டு ஆண்டு வந்ததால் பார்லிமெண்டுக்கு அவரிடம் விரோதம் உண்டாகியது. ஆனால் சார்ல்ஸ், தாம் ஸ்பெயினுடன் தொடுத்த போரின் செலவிற்குப் பணம் வேண்டியிருந்ததால் பார்லிமெண்டைக் கூட்டினார். அது சொற்பப் பணத்தைச் செலவு செய்ய அனுமதி கொடுத்தது. பிறகு சார்ல்ஸ் பார்லிமெண்டின் அனுமதியின்றித் தம் இஷ்டப்படி குடிகளின்மேல் வரி விதித்துப் பணத்தை வசூல் செய்தார். பார்லிமெண்டார் அதிகக் கோபமடைந்து, மறுமுறை சார்ல்ஸ் பணம் கேட்கும் போது "பக்கிங்காம் பிரபுவின் நேசத்தை ஒழித்தால் வேண்டிய அளவு பணம் கொடுத்தல் கூடும்" என்று சொன்னார்கள். சார்ல்ஸ் இதற்கு உடன்படவில்லை. ஆனதுபற்றி அவர் அதிகக் கோபத்துடன் பார்லிமெண்டைக் கலைத்துவிட்டார்.

உரிமை விண்ணப்பம் (கி. பி. 1628) :—அதற்குப் பிறகு சார்ல்ஸ் பிரான்ஸுடன் போர்புரிய வேண்டியிருந்தது.

இதற்கு வேண்டிய பணத்தைப் பெறும்பொருட்டு சார்லஸ் கி. பி. 1628ல் மூன்றாம் தடவை பார்லிமென்டைக் கூட்டினார். அச்சபை, அரசர் தமது இஷ்டப்படி குடிகளின் மேல் வரி விதித்ததைக் கண்டு கோபமடைந்து, உரிமை விண்ணப்பம் (Petition of Right) ஒன்றை எழுதி அவரிடம் கொடுத்து அதை அங்கீகரிக்கும்படி செய்தது. அதில் கண்ட நிபந்தனைகளாவன:—"(1) பார்லிமென்டின் அனுமதியின்றி எவ்வித வரியையும் அரசர் தமதிஷ்டப்படி குடிகளின்மீது விதித்தல் கூடாது. (2) அரசர் சரியான விசாரணையின்றி எவரையும் தமது இஷ்டப்படி சிறையிலிடுவது கூடாது. (3) அரசர் போர் வீரர்களைக் குடிகளின் வீடுகளில் பலவந்தமாய் வைத்துப் பயமுறுத்தல் கூடாது." சார்லஸ் இந்த நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு அப் பத்திரத்தில் கையொப்பமிட்டார்.

கப்பற் பணம்:-மறுவருஷமே சார்லஸ் உரிமை விண்ணப்பத்தின் நிபந்தனைகளை மீறி நடக்கத் தொடங்கினார். அவர் பார்லிமென்டைக் கூட்டாமலே பதினொரு (கி.பி. 1629-1640) ஆண்டுகள் தமது இஷ்டப்படி ஆட்சி புரிந்தார். அவர் இங்கிலாந்திலுள்ள ஒவ்வொரு நகரமும் தமக்குக் கப்பற் பணம் (Ship Money) கொடுக்கவேண்டும் என்று உத்தரவிட்டார். இந்த வரி பார்லிமென்டின் அனுமதியைப் பெறாமல் அரசரால் விதிக்கப்பட்டது. ஆகையால் ஜனங்களில் அநேகர் இவ்வரியை விதித்தது நியாயமல்ல என்று கருதி வெகு தைரியத்துடன் அதைக் கொடுக்க மறுத்தனர். அவ்வாறு ஆண்மையுடன் மறுத்தவர்களில் ஜான் ஹாம்ப்டன் (John Hampden) என்ற பக்கிங்காம் ஷயரைச் சேர்ந்த ஆங்கிலேயர் ஒருவர். அதுபற்றி சார்லஸ் அவரை கப்பற் பணம் என்ற வரி கொடாததற்காகச் சிறையிலிடும்படி செய்தார்.

சார்லஸின் துன்மந்திரிகள் :—சார்லஸ் பார்லிமெண்டின் உதவியின்றிப் பதினொரு வருஷகாலம் நடந்து இப்படி அரசாளுவதற்கு உதவி புரிந்தவர்கள் இரண்டு மந்திரிமார்கள். அவர்களில் ஒருவரான வெண்ட்வர்த் (Wentworth) ராஜ்ய விஷயங்களிலும், மற்றொருவரான வில்லியம் லாட் (William Laud) என்னும் காண்டர்பரி ஆர்ச்பிஷப் மத விஷயங்களிலும் அநீதியான காரியங்களைச் செய்து வந்தார்கள். வெண்ட்வர்த் சேனையின் உதவியால் குடிகளைப் பயமுறுத்தி அரசனின் அதிகாரத்தை அதிகப்படுத்தினார். ஸ்காட்டிஷ் (ஸ்காட்லாந்திய) சர்ச்சுகளில் பிஷப்புகள் நியமனம் செய்யப்படவேண்டுமென்றும் அவர்களை மதவிஷயங்களில் அதிகாரிகளாகச் செய்யவேண்டுமென்றும் லாட் முயன்றார். அதனால் அந்நாட்டினர் சார்லஸின் மீது போர் செய்யத் தொடங்கினர். இந்தப் போருக்கு "பிஷப்புகள் போர்" (Bishops' War) என்று பெயர். இதில் சார்லஸ் தோல்வியடைந்தார்.

நீடித்த பார்லிமெண்ட் (கி. பி. 1640):—இப் போருக்கு வேண்டிய பணத்தைப் பெறுவதற்கு சார்லஸ் கி. பி. 1640ல் பார்லிமெண்டைக் கூட்டினார். இச் சபைக்கு நீடித்த பார்லிமெண்ட் (Long Parliament) என்று பெயர். ஏனென்றால் இச் சபை இருபது வருஷகாலம் (கி. பி. 1640—1660) அதிகாரம் பெற்றிருந்தது. இந்தப் பார்லிமெண்டைவிட அதிகப் புகழ்பெற்ற பார்லிமெண்ட் இதுவரையில் இங்கிலாந்தில் கூடினதே இல்லை. இச் சபை அரசர் குடிகளிடமிருந்து கப்பற்பணம் வசூலித்தது தேசச்சட்டத்திற்கு விரோதம் என்று தீர்மானம் செய்தது. இது வெண்ட்வர்த், லாட் என்ற இரண்டு துன்மந்திரிகளையும் முதலில் சிறையிலிட்டு, பிறகு அவர்களைக் கொலை செய்துவிடும்படி செய்தது. மேலும், இது

நட்சத்திர அறை நீதிஸ்தலம், ஹைகமிஷன் கோர்ட் இவைகளை ஸ்டூவர்ட் அரசர்கள் சுயநலத்திற்கு உபயோகித்துக் கொண்டதால் அழிந்துவிட்டது. சார்ல்ஸ் மறுபடியும் பார்லிமெண்டைக் கூட்டாமல் தமது இஷ்டப்படி ஆளமுடியாமற் செய்ய எண்ணி, பார்லிமெண்ட் மூன்று வருஷத்திற்கு ஒரு தரம் தவறாமல் கூட்டப்பட வேண்டும் என்ற ஒரு சட்டத்தையும் நீடித்த பார்லிமெண்ட் இயற்றியது.

மகா எச்சரிக்கைப் பத்திரமும் பார்லிமெண்டின் ஐந்து மெம்பர்களை அரசர் சிறையிலிட முயன்றதும்:- மேற்கூறியவைகளைத் தவிர, சார்ல்ஸ் பட்டத்திற்கு வந்தது முதல் அவர் செய்த அடாத செயல்களை எல்லாம் எடுத்து பார்லிமெண்ட் கண்டனம் செய்தது. சார்ல்ஸின் அடாத செய்கைகள் எழுதப்பட்டுள்ள பத்திரத்திற்கு 'மகா எச்சரிக்கைப் பத்திரம்'(The Grand Remonstrance) என்று பெயர். சார்ல்ஸ் இதைக் கேட்டு அதிகக் கோபமடைந்து, அப்பத்திரத்தை எழுதும்படி செய்தவர்களில் ஐந்து பேர்களைச் சிறையிலிட உத்தேசித்து, ஒரு பெரிய படையுடன் பார்லிமெண்ட் கூடும் இடத்திற்கு வந்தார். இதையறிந்த ஐவர்களும் அரசர்க்குப் பயந்து ஓடிவிட்டனர். சார்ல்ஸ் வந்ததும், அவர்களைக் காணாது திகைத்து நின்று, "அப் பட்சிகள் பறந்துவிட்டனவே?" என்று கூறிவிட்டுத் திரும்பிச் சென்றார். இந்தச் செய்தியைக் கேட்ட லண்டன் நகரவாசிகள் அரசனை வெறுத்தார்கள். உடனே பார்லிமெண்ட் கூடி, தேசத்தின் சேனை எல்லாம் தனது அதிகாரத்திற்கு உட்பட்டது என்ற ஒரு சட்டம் பிறப்பித்தது. இதற்குப் பிறகு சார்ல்ஸ் லண்டனை விட்டு ஓடிவிட்டார்.

உள்நாட்டுப் பெரும்போர் (கி. பி. 1642—1647):—இங்கிலாந்தின் வடபாகத்திலும் மேற்குப் பாகத்திலும் உள்ள

ஜனங்கள் அரசர் கட்சியில் சேர்ந்துகொண்டார்கள். ஆனால் இங்கிலாந்தின் தென்பாகத்திலும் கிழப்பாகத்திலும் உள்ள ஜனங்கள் [illegible] பார்லிமெண்டின் கட்சியிற் சேர்ந்தார்கள்; பிரபுக்களில் அநேகர் அரசரது கட்சியில் சேர்ந்தனர். ஆனால் பட்டணங்களில் வசித்துவந்த சாமானிய ஜனங்களும் கிராமவாசிகளும் பார்லிமெண்டின் கட்சியில் சேர்ந்து கொண்டார்கள். ஆங்கிலிகன்கள் அரசரின் கட்சியிலும் ப்யூரிட்டன்கள் பார்லிமெண்டின் கட்சியிலும் சேர்ந்துகொண்டார்கள். இவ்வாறு இங்கிலாந்தில் அரசரின் கட்சியென்றும் பார்லிமெண்டின் கட்சி யென்றும் இரண்டு பெரிய கட்சிகள் ஏற்பட்டு, இவ்விரு கட்சியினர்களுக்கும் போர் நடந்தது. இதைத் தான் உள்நாட்டுப் பெரும்போர் (Civil War) என்று சொல்லுகிறோம். இந்தப் போர் "ராஜீய விஷயங்களில் அரசர்க்கு அதிகாரம் அதிகமா? பார்லிமெண்டிற்கு அதிகாரம் அதிகமா?" என்பதைத் தீர்மானம் செய்ய வேண்டியிருந்தது. அரசர் கட்சியினர் குதிரை வீரர் (Cavalier) என்றும், பார்லிமெண்டின் கட்சியினர் உருண்டைத் தலையர் (Roundhead) என்றும் அழைக்கப்பட்டனர்.

**எட்ஜ்ஹில், சால்க்ரோவ் சண்டைகள்:**—சார்லஸ் கி.பி. 1642ல் ஆக்ஸ்பர்டில் கொஞ்சகாலம் தங்கியிருந்து ஒரு சேனையுடன் லண்டன் நகரைக் கைப்பற்ற வந்தார். அப்பொழுது எட்ஜ்ஹில் (Edgehill) என்னுமிடத்தில் அரசரின் சேனையும் பார்லிமெண்டின் படையும் சந்தித்துப் போர் புரிந்தன. அதில் எந்தக் கட்சி ஜயம் பெற்றது என்பதை நிச்சயமாய்ச் சொல்ல முடியவில்லை. மறு வருஷத்தில் சால்க்ரோவ் (Chalgrove) என்னுமிடத்தில் ஒரு பெரிய சண்டை நடந்தது. இச் சண்டையில் பார்லிமெண்டின் சேனைத் தலைவரான ஹாம்ப்டன் *வெகு

* இவர்தான் கப்பற்பணம் கொடுக்க மறுத்தவர்.

ஆண்மையுடன் போர் புரிந்து இறந்தார். ஆனால் இச் சண்டையில் எந்தக் கட்சியார் வெற்றியடைந்தார் என்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடவில்லை.

பார்லிமெண்ட் ஸ்காட்லாந்தியர்களுடன் உடன்பாடு செய்து கொள்ளுதல்:—பார்லிமெண்ட் ஸ்காட்லாந்துடன் கி.பி. 1644-ல் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டது. அதன்படி ஸ்காட்லாந்தியர் பார்லிமெண்டுக் கட்சிக்கு உதவி புரிவது என்றும், அதற்குப் பதிலாக ஆங்கிலேயர்கள் தங்களுடைய சர்ச்சை ஸ்காட்லாந்திலுள்ள பிரஸ்பிடேரியன் சர்ச்சைப் போலச் செய்வதும் என்றும் ஏற்பட்டது. பிறகு ஸ்காட்லாந்தியர்கள் ஒரு பெரிய சேனையை இங்கிலாந்துக்கு அனுப்பினார்கள்.

ஆலிவர் க்ராம்வெல்லும் புதுமாதிரிப் படையும்:—இச் சமயத்தில் இந்த பார்லிமெண்டில் கேம்பிரிட்ஜ் நகரின் பிரதிநிதியாக ஆலிவர் க்ராம்வெல் என்ற ஒரு வீரர் இருந்தார். அவர் எட்டாவது ஹென்றியின் ஆலோசனைத் தலைவரா யிருந்த தாமஸ் க்ராம்வெல்லினுடைய வெல்ஷ் மருமகனின் சந்ததியைச் சேர்ந்தவர். அவர் இங்கிலாந்தின் கிழக்குப் பாகத்திலுள்ள ஜில்லாக்களில் 'கீழ் நாட்டார்களின் சங்கம்' ஒன்றை ஸ்தாபித்து நடத்தி வந்தார். அவர் ப்யூரிட்டன் கட்சியைச் சேர்ந்தவர். அவர் ஒரு சிறந்த தளகர்த்தர். அவர் தேக வலிமையுள்ளவர்களைப் பொறுக்கி அவர்களுக்கு நல்ல யுத்தப் பயிற்சி கொடுக்கும்படி ஏற்பாடு செய்தார். ஆலிவர் க்ராம்வெல்லின் சேனையிலுள்ள போர்வீரர்கள் சிகப்புக் கவசம் பூண்டார்கள். இச் சைன்யத்தையே "புது மாதிரிப் படை" (New Model Army) என்று சொல்லுகிறோம். இங்கிலாந்தின் கிழக்குதிசை மாகாணங்களிலிருந்து தமது புது மாதிரிப் படையுடன் க்ராம்வெல் வட திசையை நோக்கிச்

3. நீடித்த பார்லிமெண்டின் செய்கைகள் யாவை?
4. உள்நாட்டுப் பெரும்போர் எக்காரணங்களால் ஏற்பட்டது? அப்போரில் நிகழ்ந்த முக்கிய சண்டைகள் யாவை?
5. உள்நாட்டுப் பெரும்போரில் யாருக்கு வெற்றி ஏற்பட்டது? ஏன்?

---

## அத்தியாயம் 3.

### இங்கிலாந்தில் குடியரசு ஏற்பட்டது (கி. பி. 1649—1660)

ரம்ப் குடியரசை ஸ்தாபித்தல்:—உள் நாட்டுப் போர் முடிந்தவுடன், நீடித்த பார்லிமெண்டின் அங்கத்தினர்களுடைய சங்கியை குறைந்துகொண்டே வந்தது. எஞ்சிய சுயர்கள் அடங்கின பார்லிமெண்ட் ரம்ப் (Rump) பார்லிமெண்ட் என்று அழைக்கப்பட்டது. அது பிரபுக்கள் சபையை ஒழித்துவிட்டு, க்ராம்வெல்லின் உதவியால் இங்கிலாந்தில் குடியரசை (Commonwealth) ஸ்தாபித்தது. பிறகு ரம்ப் இங்கிலாந்தை நான்கு வருஷங்கள் (கி. பி. 1649-1653) ஆண்டு வந்தது.

அயர்லாந்தியர்கள் குடியரசை ஒப்புக்கொள்ளல்:—இங்கிலாந்தில் ஏற்படுத்தப்பட்ட குடியரசை அயர்லாந்தியர் ஒப்புக்கொள்ளாததால், க்ராம்வெல் ஒரு பெரிய சேனையுடன் அயர்லாந்தில் வந்திறங்கினார். அவர் கதோலிக்குகளையும் அரசர் கட்சியினரையும் தோற்கடித்து, ட்ரோகிடா (Drogheda), வெக்ஸ்பர்ட் (Wexford) என்ற இரண்டு இடங்களையும் முற்றுகை செய்து கைப்பற்றிக்கொண்டார். அயர்லாந்தியர்கள் குடியரசை ஒப்புக்கொண்டனர். இதற்குப் பின் அயர்லாந்தில் கதோலிக்குகளுக்குக் கஷ்டம் அதிகரிக்கவே அநேகர் தமது நாட்டை விட்டு அன்னிய தேசங்களுக்குச்

இதில் க்ராம்வெல் ஸ்காட்லாந்தியர்களுடைய உதவியாலும் தம்முடைய சேனையின் திறமையாலும் அரசர் கட்சியாரைத் தோற்கடித்தார். மறு வருஷத்தில் க்ராம்வெல்லின் புது மாதிரிப் படை அரசருடைய சேனையை நேஸ்பி (Naseby) என்னுமிடத்தில் சந்தித்துத் தோற்கடித்தது. பிறகு சார்ல்ஸ் வேறொரு சேனையைத் திரட்ட முடியாததால் ஸ்காட்லாந்தியர்களிடம் தஞ்சம் புகுந்தார்.

சார்ல்ஸ் கொலை செய்யப்படல் (கி. பி. 1649) :—பிறகு ஸ்காட்லாந்தியர்கள் சார்ல்ஸ் மன்னரை ஆங்கில ப்யூரிட்டன்களிடம் ஒப்படைத்தனர். இச்சமயத்தில் பார்லிமெண்டில் இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. ஒரு கட்சியாருக்கு இண்டிபெண்டன்ட்கள் (Independents) என்று பெயர். இக்கட்சித் தலைவர் ஆலிவர் க்ராம்வெல். மறு கட்சியாருக்கு பிரெஸ்பிடீரியன்கள் என்று பெயர். சார்ல்ஸ் இவ்விரு கட்சிகளுக்கும் உள்ள பகைமையை அதிகப்படுத்த முயன்றார். இதை யறிந்த இண்டிபெண்டன்ட்கள் அரசரைக் கொன்றுவிடத் தீர்மானித்தார்கள். ஆகையால் அரசர் செய்த குற்றங்களை விசாரிக்க ஒரு நீதி பரிபாலனச் சபை ஏற்படுத்தப்பட்டது. சார்ல்ஸ் அச்சபையாரின் கேள்விகளுக்குச் சரியான விடை கொடாததால், அவரது தலையை வெட்டி விடும்படி அச்சபை உத்தரவிட்டது. அதன்படி சார்ல்ஸ் தம் சொந்த அரண்மனைக்கு வெளியில் கி. பி. 1649-ல் சிரச்சேதம் செய்யப்பட்டார்.

கேள்விகள் :—

1. உரிமை விண்ணப்பத்தை ஏன் ஆங்கிலேயர் முக்கியமானதாகக் கருதுகின்றனர்? அதன் ஷரத்துக்கள் யாவை?
2. ஜான் ஹாம்ப்டன், வில்லியம் லாட், வென்ட்வர்த் இவர்களைப்பற்றித் தெரிந்தவரையில் எழுதுக.

3. நீடித்த பார்லிமெண்டின் செய்கைகள் யாவை?
4. உள்நாட்டுப் பெரும்போர் எக்காரணங்களால் ஏற்பட்டது? அப்போரில் நிகழ்ந்த முக்கிய சண்டைகள் யாவை?
5. உள்நாட்டுப் பெரும்போரில் யாருக்கு வெற்றி ஏற்பட்டது? ஏன்?

---

## அத்தியாயம் 3.

### இங்கிலாந்தில் குடியரசு ஏற்பட்டது (கி. பி. 1649—1660)

**ரம்ப் குடியரசை ஸ்தாபித்தல்:**—உள் நாட்டுப் போர் முடிந்தவுடன், நீடித்த பார்லிமெண்டின் அங்கத்தினர்களுடைய சங்கியை குறைந்துகொண்டே வந்தது. எஞ்சிய நபர்கள் அடங்கின பார்லிமெண்ட் ரம்ப் (Rump) பார்லிமெண்ட் என்று அழைக்கப்பட்டது. அது பிரபுக்கள் சபையை ஒழித்துவிட்டு, க்ராம்வெல்லின் உதவியால் இங்கிலாந்தில் குடியரசை (Commonwealth) ஸ்தாபித்தது. பிறகு ரம்ப் இங்கிலாந்தை நான்கு வருஷங்கள் (கி. பி. 1649-1653) ஆண்டு வந்தது.

**அயர்லாந்தியர்கள் குடியரசை ஒப்புக்கொள்ளல்:**—இங்கிலாந்தில் ஏற்படுத்தப்பட்ட குடியரசை அயர்லாந்தியர் ஒப்புக்கொள்ளாததால், க்ராம்வெல் ஒரு பெரிய சேனையுடன் அயர்லாந்தில் வந்திறங்கினார். அவர் கத்தோலிக்குகளையும் அரசர் கட்சியினரையும் தோற்கடித்து, ட்ரோகீடா (Drogheda), வெக்ஸ்பர்ட் (Wexford) என்ற இரண்டு இடங்களையும் முற்றுகை செய்து கைப்பற்றிக்கொண்டார். அயர்லாந்தியர்கள் குடியரசை ஒப்புக்கொண்டனர். இதற்குப் பின் அயர்லாந்தில் கத்தோலிக்குகளுக்குக் கஷ்டம் அதிகரிக்கவே அநேகர் தமது நாட்டை விட்டு அன்னிய தேசங்களுக்குச்

சென்றனர். க்ராம்வெல் கத்தோலிக்குகளுடைய நிலங்களைப் பிடுங்கி அவைகளை ப்யூரிட்டன்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார். அதனால் அவர்கள் வெகு காலம் வரையில் ஆங்கிலேயர்களை வெறுத்தார்கள்.

ஸ்காட்லாந்தியர்கள் குடியரசை ஒப்புக்கொள்ளல்:—க்ராம்வெல் அயர்லாந்திலிருந்து திரும்பி வந்தவுடன், அவர் ஒரு பெரிய சேனையோடு ஸ்காட்லாந்தின்மீது படையெடுத்தார். ஏனெனில் அவர்கள் சார்ல்ஸ் இளவரசரை வரவழைத்து இரண்டாவது சார்ல்ஸ் என முடிசூட்டினார்கள். க்ராம்வெல் ஸ்காட்லந்திய சேனையைச் சந்தித்து டன்பார் (Dunbar) என்னுமிடத்தில் கி. பி. 1650ல் முறியடித்தார். ஆனால் சார்ல்ஸ் இளவரசர் ஒரு சேனையுடன் வட இங்கிலாந்தின்மீது படை யெடுத்தார். குடியரசை வெறுத்த ஆங்கிலேயர்கள் தம்முடைய கட்சியில் சேர்ந்துகொள்வார்கள் என்று அவர் எண்ணினார். அவர் நினைத்தபடி ஆங்கிலேயர்கள் அவரது கட்சியில் சேரவில்லை. க்ராம்வெல் வூர்ஸ்டர் (Worcester) என்னுமிடத்தில் கி. பி. 1651ல் இளவரசரது சேனையைச் சந்தித்துத் தோற்கடித்தார். இதன்பின் சார்ல்ஸ் மாறுவேஷம் பூண்டு ஐரோப்பாவிற்கு ஓடிப்போய்விட்டார். க்ராம்வெல், இச் சண்டையில் அடைந்த வெற்றிக்காக வருஷா வருஷம் 4000 பவுனையும், அவர் ஆயுட்காலம் வரையில் வசிக்கும்படி ஹாம்ப்டன் கோர்ட் மாளிகையையும் பார்லிமெண்ட் அவருக்கு அளித்தது. க்ராம்வெல் போர்க்களத்தில் மடிந்த போர்வீரர்களைப் பார்த்தவுடன் பச்சாதாபம் அடைந்து, தாம் இனிமேல் போர் புரிவதில்லை என்று சபதம் செய்தார்.

க்ராம்வெல் டச்சுக்காரருடன் போர் புரிதல்:—இவ்வாறு ஸ்காட்லாந்தும் அயர்லாந்தும் குடியரசை ஏற்றுக்கொண்ட பிறகு இங்கிலாந்துக்கும் ஹாலந்துக்கும் ஒரு பெரிய யுத்தம்

நடந்தது. பதினேழாவது நூற்றாண்டின் முன் பாதியில் டச்சுக்காரர்கள் அன்னிய தேசங்களோடு வியாபாரம் செய்து அதிக லாபத்தை அடைந்து வந்தார்கள். மேலும், அவர்கள் பிற நாட்டுச் சாமான்களைச் சமுத்திர மார்க்கமாய் எடுத்துச் சென்று அதற்காகக் கூலியையும் அடைந்தார்கள். இதைக்



ஆலிவர் க்ராம்வெல்.

கண்ட ஆங்கில தளகர்த்தரான க்ராம்வெல் ஆங்கில வியாபாரத்தை விருத்தியடையச் செய்யவேண்டும் என்றும், ஆங்கில கப்பற்படைக்குச் சிறப்பும் வலிமையும் உண்டாக்கவேண்டுமென்றும் எண்ணினார். டச்சுக்காரரும், ஆங்கிலேயரும் பிராடஸ்டன்ட் மதத்தினர்களாய் இருந்தபோதிலும், வியாபாரப் போட்டியால்தான் அவர்களுக்குள் இப்போர் ஏற்பட்டது.

ஆகையால் க்ராம்வெல், டச்சு வியாபாரத்தை அழிக்க எண்ணி கி. பி. 1651-ல் ரம்ப் பார்லிமெண்டைக் கொண்டு ஒரு சட்டத்தை இயற்றும்படி செய்தார். அச் சட்டத்திற்குக் 'கப்பற் போக்குவரத்துச் சட்டம்' (Navigation Act) என்று பெயர். அதன்படி ஆங்கிலேயர்கள் தங்கள் கப்பல்களிலாவது, அல்லது எந்த நாடுகளிலிருந்து சாமான்கள் இங்கிலாந்துக்கு தருவிக்கப்படுகின்றனவோ அந் நாடுகளின் கப்பல்களிலாவது சாமான்களைப் பிறநாடுகளுக்கு அனுப்ப வேண்டுமென்றும் அவைகளிலிருந்து அடைய வேண்டுமென்றும் விதிக்கப்பட்டது. இதற்குப் பிறகு டச்சு வியாபாரம் குறைய ஆரம்பித்தது. டச்சுக் கப்பல்களுக்குச் சமுத்திர மார்க்கமாய் எடுத்துச் செல்ல சாமான்கள் இல்லாமற்போயின. ஆகையால் டச்சுக்காரர்கள் வியாபாரத்தினால் ஏற்படும் லாபத்தையும், சாமான்களைக் கடல் மார்க்கமாய் எடுத்துச் செல்வதனால் கிடைக்கும் கூலியையும் இழந்தார்கள். இதனால் அவர்களின் கடல் வலிமையும் தொலைந்து விடும்போல் தோன்றியது. இந்தக் காரணங்களால் டச்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் கி. பி. 1652ல் போர் ஆரம்பித்தது. க்ராம்வெல், பிளேக் (Blake) என்ற மாலுமியை ஆங்கில கப்பற்படைத் தலைவராக (Admiral) நியமனம் செய்தார். பிளேக் டச் அட்மிரலான வான் ட்ராம்ப் (Van Tromp) என்பவரை ஒரு கடற் சண்டையில் தோற்கடித்தார். இந்தப் போரினால் இங்கிலாந்துக்குக் கடல் வலிமை ஏற்பட்டது.

க்ராம்வெல்லும் இதர நாடுகளும்:—பிறகு க்ராம்வெல் கி. பி. 1653ல் ஸ்பெயின் நாட்டாருடன் போர் செய்தார். ஸ்பெயின் ஒரு கத்தோலிக் நாடானபடியால், ப்ராடெஸ்டென்ட் மதஸ்தரான க்ராம்வெல் அந்நாட்டாருடன் போர் செய்து மேற்கிந்தியத்தீவுகளில் ஒன்றாகிய ஜமெய்க்காவை ஜயித்தார்.

மேலும், அவர் பிரான்ஸ் அரசரான பதினன்காவது லூயி யுடன் போர் புரிந்து டங்கர்க் (Dunkirk) நகரையும் அடைந் தார். இங்கிலாந்து பிரான்ஸுடன் போர் புரிவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. பதினன்காவது லூயி ஒரு கதோலிக் மத அபிமானியாதலால் பிராடெஸ்டென்ட்களைக் கொடூரமாய் நடத்திவந்தார் என்பது முதல் காரணம். லூயி சார்ல்ஸ் இள வரசர்க்கு உதவிசெய்து அவரை ஆங்கில மன்னராக்கமுயன் ருர் என்பது மற்றொரு காரணம். க்ராம்வெல் தமது விரோதி களைச் சண்டையில் தோற்கடித்தும் கலகங்களை அடக்கியும் இங்கிலாந்தை உயர்ந்த நிலைமைக்குக் கொண்டு வந்தார்.

ரம்ப் பார்லிமென்ட் கலைக்கப்பட்டது:—க்ராம்வெல் ரம்ப் பார்லிமென்டைக் கலைத்துவிட்டு ஒரு புதிய பார்லி மென்டைக் கூட்ட விரும்பினர். ஒரு நாள் அவர் சில போர் வீரர்களுடன் சபா மண்டபத்துக்குள் சென்று, ரம்ப் பார்லி மென்டின் அங்கத்தினர்களைப் பார்த்து "வெளியிற் செல்லுங் கள். உங்களைக் காட்டிலும் தகுதியுள்ளவர்களுக்கு நீங்கள் இடம் கொடுக்கவேண்டும்" என்று வெகு கோபத்துடன் சொன்னர். பிறகு அவர் பார்லிமென்டின் அக்கிரசனுதிபதி (Speaker) யைச் சுட்டிக்காட்டி 'அவரைக் கீழே இறங்கி வரும்படி செய்யுங்கள். அவர் கையிலுள்ள செங்கோலைப் பிடுங்கி எறியுங்கள்' என்று தம் போர்வீரர்களிடம் கோபத் துடன் கூறவே, அச் சபையார் நடுநடுங்கி ஒருவர்பின் ஒருவராக வெளியே சென்றனர். பிறகு க்ராம்வெல் கதவைப் பூட்டித் தம் சட்டைப் பையில் சாவியைப் போட்டுக்கொண்டார். இச்செய்தியைக் கேட்ட ஒரு பிரெஞ் சுக்காரர், "ஒரு நாய்கூடக் குரைக்கவில்லை. இச்சபாமண்ட பத்தைச் சாமான்கள் அன்னியில் வாடகைக்கு விட்டுவிட லாம்" என்று பரிகசித்தாராம்.

க்ராம்வேல் தேசரக்ஷகப் பிரபுவாதல்:—இவ்வாறு ரம்ப் பார்லிமென்டைக் கலைத்துவிட்டு, க்ராம்வெல் பார்லிமென்டின் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும்படி செய்தார். இப்புதிய பார்லிமென்டில் 460 அங்கத்தினர்கள் இருந்தார்கள். இச் சபைக்கு அயர்லாந்திலிருந்து முப்பது பிரதிநிதிகள் அனுப்பப்பட்டார்கள். இம்மாதிரி க்ராம்வெல் பிரிட்டிஷ்த் தீவுகள் முழுவதுக்கும் ஒரே பார்லிமென்ட் இருக்கும்படி செய்தார். இச் சபை, க்ராம்வெல்லைத் தேச ரக்ஷகப் பிரபு என்ற பட்டத்துடன் இங்கிலாந்தைச் சர்வ அதிகாரத்தோடு ஆண்டு வரும்படி செய்தது. ஆனால் சில காலஞ் சென்றபின் அவர் பார்லிமென்டு சபையுடன் சண்டை போட்டு அதையும் கலைத்து விட்டார். இதற்குப் பிறகு க்ராம்வெல் பார்லிமென்டைக் கூட்டாமல் தமது இஷ்டப்படி சேனையின் பலத்தினாலேயே இங்கிலாந்தை ஆண்டு வந்தார். முதலாவது சார்ல்ஸ் பார்லிமென்டின் இஷ்டப்படி நடக்காததால் அவரைச் சிரச்சேதம் செய்யும்படி ஏற்பாடு செய்த அந்தக் க்ராம்வெல் என்பவரே பார்லிமென்டின் இஷ்டப்படி நடக்கச் சம்மதியாமல் அதைக் கலைத்துவிட்டுச் சேனையின் உதவியால் ஆண்டு வரலானார் என்ற விஷயம் இங்கு குறிப்பிடத் தக்கது!

க்ராம்வேல்லின் **ஆட்சி**:—க்ராம்வெல் இங்கிலாந்தைப் பத்து ஜில்லாக்களாகப் பிரித்து, ஒவ்வொன்றுக்கும் மேஜர் ஜெனரல் (Major-General) என்னும் ஒரு ராணுவ அதிகாரியை ஏற்படுத்தி ஆண்டுவரும்படி செய்தார். ஆனதுபற்றி இந்த ஆட்சியை ஒருவகையில் இராணுவ ஆட்சி என்று கூறலாம். அவர் ப்யூரிட்டன் ஆகையால் கதோலிக்குகளும் ஆங்கிலிகன்களும் அவர் அவர்களது இஷ்டப்படி கடவுளைத் துதிக்க இடங்கொடுக்கவில்லை. ஆனால் ப்யூரிட்டன்கள் மட்டும் எல்லா விஷயங்களிலும் சுதந்தரம் பெற்றார்கள்.

க்ராம்வெல்லின் மரணம்:—இவ்வாறு க்ராம்வெல் பிரிட்டிஷ்த் தீவுகளைச் சர்வ அதிகாரத்துடன் ஆண்டுவிட்டு கி. பி. 1658ல் மரணமடைந்தார். அவரது புதல்வரான ரிச்சர்ட் தேசரக்ஷகப் பிரபுவானார். அவருக்குச் சிறிதும் திறமை இல்லாததால், ப்யூரிட்டன் சேனை அவருக்கு அடங்காமல் இருந்தது. பிறகு அது ரிச்சர்டை நீக்கிவிட்டு, ரம்ப் பார்லிமெண்டைக் கூட்டி அதற்குச் சர்வ அதிகாரத்தையும் கொடுத்தது. கொஞ்ச காலத்திற்குப் பிறகு சேனைக்கும் ரம்ப் பார்லிமெண்டுக்கும் சண்டை உண்டாயிற்று. இவ்வாறு இங்கிலாந்தில் ஓர் அரசரில்லாமல் குழப்பம் ஏற்பட்டு, இங்கிலாந்தை ரம்ப் பார்லிமெண்ட் அரசாளுவதா அல்லது ராணுவம் அரசாளுவதா என்று ஒருவழியும் புலப்படாமல் ஆங்கிலேயர்கள் தவித்துக்கொண்டிருந்தார்கள்.

மீட்சி:—இச்சமயத்தில் க்ராம்வெல்லினால் ஸ்காட்லாந்தில் முன்பு வைக்கப்பட்டிருந்த ஒரு சேனையின் தலைவராகிய மங்க் (Monk) தமது சேனையுடன் லண்டன் நகருக்கு வந்தார். பிறகு அவர் நீடித்த பார்லிமெண்டைக் கூடும்படி செய்து அதைக் கலைத்துக்கொள்ளும்படி செய்தார். பிறகு மங்க், கன்வென்ஷன் (Convention) என்ற ஒரு சபையைக் கூட்டி, அதன் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு சார்ல்ஸ் இளவரசரை ஆங்கில மன்னராக வேண்டுமென வேண்டிக்கொண்டார். சார்ல்ஸ் ஆங்கிலேயரின் வேண்டுகோளுக்கு இணங்கி கி. பி. 1660ல் டோவர் (Dover) நகரில் தம்முடைய பரிவாரங்களுடன் வந்து இறங்கினார். இவ்வாறு ஸ்டூவர்ட் வம்சத்தைச் சேர்ந்த சார்ல்ஸூம் ஆங்கில மன்ன

* கன்வென்ஷன்—பொது ஜனங்களின் பிரதிநிதிகள் அடங்கிய சபை.

பார்லிமெண்ட்-அரசரால் அழைக்கப்படும் பிரதிநிதிகள் சபை.

ராஞர். குடியரசு ஒழிந்தது. இவ்வாறு குடியரசு ஒழிந்து ஸ்டுவர்ட் வம்சத்தவர்கள் இங்கிலாந்தில் மீண்டும் அதிகாரம் பெற்றதை மீட்சி (Restoration) என ஆங்கிலேயர் கூறுவர்.

குடியரசு ஆட்சிக்காலத்திய கல்வி:—முதலாவது சார்ல்ஸ் தம் சிரஸை இழந்தபின், இங்கிலாந்தில் அரச குடும்பத்தாரிடம் குடிகளுக்கு இரக்கம் உண்டாயிற்று. ரம்ப் பார்லிமென்ட் இங்கிலாந்தில் ஆளத்தொடங்கினதும், ஜான் மில்டன் என்ற ஒருவர் ராஜாங்க சபைக் காரியதரிசியாக இருந்தார். அவர் லண்டன் நகரத்து ஒரு வியாபாரியின் புதல்வர். அவர் ஒரு பெரிய கவி; பியூரிட்டன் மதத்தில் அபிமானமுள்ளவர். அவர் Paradise Lost, Paradise Regained, Samson Agonistes முதலிய செய்யுட்களை இயற்றியவர். ராஜாங்க முறையைப் பற்றி அவர் அநேக துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டார். ஸ்டுவர்ட் வம்சத்து அரசர்கள் கி. பி. 1660ல் இங்கிலாந்தை மீண்டும் ஆளத்தொடங்கினதும், மில்டன் தம் கண் பார்வையை இழந்ததாலும் குடும்பத் தொந்தரவுகளாலும் பொதுஜன வாழ்க்கையில் கலக்கவில்லை. ஆனால் அவர் இப்பொழுதுதான் Paradise Lost என்ற பெரிய காவ்யத்தை எழுதினர்.

இரண்டாவது சார்ல்ஸின் காலத்தில் இங்கிலாந்தில் ட்ரைடன் (Dryden) என்ற ஒரு கவி சிறப்புற்று விளங்கினர். அதே காலத்தில் பாப்டிஸ்ட் வகுப்பைச் சேர்ந்த ஒரு மதப்பிரசங்கி ராஜாங்க முறையைக் கண்டித்து கிளர்ச்சி உண்டாக்கியதால் பெட்பர்ட் என்ற விடத்திலுள்ள சிறைச்சாலையில் பன்னிரண்டு வருஷங்கள் அடைக்கப்பட்டார். அவரது பெயர் ஜான் பன்யன். அவர் சிறைச்சாலையில் தாம் கைதியாக இருக்கும் காலத்தில் தேசாந்திரியின் யாத்திரை

(Pilgrim's Progress) என்ற பிரசித்தி பெற்ற ஒரு புத்தகத்தை எழுதினர்.

கேள்விகள் :—

1. 'ரம்ப்' குடியரசை இங்கிலாந்தில் எவ்வாறு ஸ்தாபித்தது?
2. க்ராம்வெல் அயர்லாந்தியரையும் ஸ்காட்லாந்தியரையும் குடியரசை ஒப்புக்கொள்ளும்படி எவ்வாறு செய்தார்?
3. ஆங்கிலேயருக்கும் டச்சுக்காரருக்கும் எக்காரணத்தினல் போர் உண்டாயிற்று? அஃது எவ்வாறு முடிந்தது?
4. க்ராம்வெல்லின் காலத்தில் ஆங்கிலேயருக்கும் இதர நாட்டார்களுக்கும் உள்ள சம்பந்தம் எப்படி?
5. க்ராம்வெல் 'ரம்ப்' பார்லிமெண்டை எவ்வாறு கலைத்தார்?
6. க்ராம்வெல் ரக்ஷகப்பிரபுவாயிருந்து எவ்வாறு இங்கிலாந்தில் ஆட்சிபுரிந்தார்?
7. இங்கிலாந்தில் 'மீட்சி' எக்காரணத்தினல் ஏற்பட்டது? எவ்வாறு?
8. குடியரசு மீட்சிக் காலங்களில் சிறப்புடன் விளங்கின இங்கிலீஷ்க் கவிகள் யாவர்?

---

## அத்தியாயம் 4.

### இரண்டாவது சார்ல்ஸ் (கி. பி. 1660—1685.)

சார்ல்ஸின் குணதிசயங்கள்:—சார்ல்ஸ் ஆங்கிலேயரின் வேண்டுகோளுக்கு இணங்கி கி. பி. 1660ல் ஆங்கிலச் சிங்காதன மேறினர். அவர் ஸ்டுவர்ட் வம்சத்து அரசர்களுள் மிகவும் கெட்டிக்காரர். ஆனல் அவர் சுயநலம் பாராட்டிக் கொண்டும் சிற்றின்பங்களிலேயே காலத்தைக் கழித்துக் கொண்டும் இருந்தார்; இங்கிலாந்தை நன்றாக அரசாள வேண்டுமென்ற கருத்தில்லை.

மீட்சியின் பயன்கள்:—தாம் பட்டத்திற்கு வந்தவுடன், சார்ல்ஸ் தமது தந்தைக்கு விரோதமாய்ப் போர் செய்தவர்களில் அநேகரை மன்னித்தார். பிறகு அவர் க்ராம்வெல்லினால் ஏற்படுத்தப்பட்ட சேனையைக் கலைத்துவிட்டார்; ஆனால் இரண்டொரு படைகளை மட்டும் இங்கிலாந்தின் பாதுகாப்புக்காக வைத்துக்கொண்டார். இது முதல் இங்கிலாந்தின் பாதுகாப்புக்காக நிலையான ராணுவம் (Standing Army) ஏற்பட்டது. இன்னும், சார்ல்ஸ் ஸ்காட்லாந்தும் அயர்லாந்தும் தனித்தனியே பார்லிமென்ட் சபையை வைத்துக்கொள்ள உத்தரவிட்டார். ஆகவே, க்ராம்வெல் செய்த காரியங்களெல்லாம் ரத்துசெய்யப்பட்டன. மேலும், சார்ல்ஸ் சர்ச்சுகளில் பிஷப்புகளை நியமனம் செய்து, எலிஸபெத்தின் காலத்தில் இங்கிலாந்தில் சர்ச்சு எந்த நிலைமையில் இருந்ததோ அதே நிலைமையில் இருக்கும்படி செய்தார்.

ப்யூரிட்டன்களின் சங்கடம்:—இந்த மத ஏற்பாடுகள் ப்யூரிட்டன்களுக்கு அதிருப்தியையும் கோபத்தையும் உண்டாக்கின. ஆகையால் அவர்கள் ஆங்கிலிகன் சர்ச்சிலிருந்து விலகிக்கொண்டு, தாங்கள் தெய்வ ஆராதனை செய்வதற்காகச் சிறிய கோவில்களைக் கட்டிக்கொண்டார்கள். இவர்களுக்கு டிஸ்ஸெண்டர்கள் (Dissenters) இணங்காதவர்கள் என்பது பெயர். சார்ல்ஸ் அவர்களைத் தண்டிக்க எண்ணி சில கொடிய சட்டங்களைப் பிறப்பித்தார். இவைகளுக்கு மீறி நடந்த ப்யூரிட்டன்களில் அநேகர் சிறையில் அடைக்கப்பட்டனர். அவர்களில் "தேசாந்திரியின் தீர்த்த யாத்திரை" என்ற மிகப் பிரசித்தி பெற்ற புத்தகத்தை எழுதின ஜான் பன்யன் (John Bunyan) ஒருவர். ஆயிரக்கணக்கான ப்யூரிட்டன்கள் இங்கிலாந்தில் தமதிஷ்டப்படி தெய்வ ஆராதனை செய்ய முடியாமையால் அமெரிக்காவிற்குக் குடியேறச் சென்றார்கள்.

சார்ல்ஸூம் பதினான்காவது லூயியும்:—சார்ல்ஸ் இளம் பிராயத்தில் பிரான்ஸில் வளர்ந்து வந்ததால், அவர் பிரெஞ்சு மன்னரின் சிநேகத்தை அடைந்திருந்தார். பதினான்காம் லூயி ஐரோப்பா முழுவதையும் ஜயித்து ஆளவேண்டுமென்ற பேராசையுள்ளவர். இவர் கத்தோலிக் மத வீரராகையால் டச்சுக்காரர்கள் பேரில் போர் புரிந்தார். இச் சமயத்தில் லூயியின் பலத்தைக் குறைக்க ஆங்கிலேயர்கள் மற்ற பிராடெஸ்டண்ட் நாடுகளுடன் சிநேக உடன்பாடுகளைச் செய்துகொண்டார். ஆனால், சார்ல்ஸ் பார்லிமெண்டுக்குத் தெரியாமல் லூயியுடன் இரகசியமாக டோவர் நகரில் ஒரு சிநேக உடன்பாடு (Secret Treaty of Dover) செய்து கொண்டார். இதன்படி சார்ல்ஸ் தாம் கத்தோலிக் மதத்தைத் தழுவுவதாயும், அம்மதம் இங்கிலாந்தில் ஓங்கி வளர இடங்கொடுப்பதாயும் வாக்களித்தார். க்ராம்வெல்லினால் கைப்பற்றப்பட்ட டங்கர்க் நகரை லூயியிடம் சார்ல்ஸ் சொற்பப் பணத்தைப் பெற்றுக்கொண்டு விற்றுவிட்டார். இவ்விஷயங்களை அறிந்த ஆங்கிலேயர்கள் தங்களது அரசனை வெறுத்தார்கள்.

சார்ல்ஸூம் டச்சுக்காரர்களும்:—ஜேம்ஸ் I ஸ்பானிஷ்காரர்களின் நட்பைப் பெரிதாகப் பாராட்டினதால் அவரது ஆட்சிக் காலம் முதல் டச்சுக்காரர்கள் ஆங்கிலேயரின் முக்கிய விரோதிகளாக இருந்துவந்தார்கள். கப்பற் போக்குவரத்துச் சட்டத்தினால் டச்சுக்காரர்களின் வியாபாரம், செல்வாக்கு, அதிகாரம் எல்லாம் குறைந்துகொண்டே வந்தன. சார்ல்ஸ் பட்டத்திற்கு வந்த பிறகு கி. பி. 1665ல் அவர்கள் இங்கிலாந்தின் பேரில் படை யெடுத்தார்கள். பார்லிமெண்ட் அவர்களுடன் போர் புரிய சார்ல்ஸூக்கு அதிகப் பணம் கொடுத்தது. டச்சுக்காரர்கள் தங்களுடைய கப்பல்களில்

தேம்ஸ் நதியின் வழியாகச் சென்று, மூன்று பெரிய ஆங்கிலப் போர்க்கப்பல்களை எரித்துவிட்டார்கள். ஆதலால் இங்கிலாந்துக்கு அவமானமும் பொருள் நஷ்டமும் ஏற்பட்டன.

சோதனைச் சட்டம் (கி. பி. 1673):—டோவர் இரகசிய உடன்பாட்டுக்குப் பிறகு சார்லஸ் ஆங்கிலக் கத்தோலிக்குகளிடம் அன்பு பாராட்டி வருவதைக் கண்டு, பார்லிமெண்ட் சோதனைச்சட்டம் (Test Act) ஒன்றை இயற்றி சார்லஸ் மன்னரை அதற்குச் சம்மதிக்கும்படி செய்தது. அதன்படி கத்தோலிக்குகளுக்குத் துரைத்தன உத்தியோகங்கள் இல்லையென்று ஏற்பட்டது. சார்லஸின் இளைய சகோதரரும் யார்க் கோமகனுமான ஜேம்ஸ் இச் சட்டத்திற்குச் சம்மதிக்காததால் அட்மிரல் பதவியை ராஜிநாமா செய்துவிட்டார். அவரைப்போல் இன்னும் மற்ற கத்தோலிக்குகளும் தங்களுடைய உத்தியோகங்களை ராஜிநாமா கொடுத்தார்கள்.

ஹேபியஸ் கார்ப்பஸ் ஆக்ட்:—மந்திரிப் பதவியில் இருந்து வந்த டான்பி பிரபுவின் அதிகாரம் கி. பி. 1678ல் ஒழிந்தது. மறு வருஷத்தில் கூடின பொதுஜன சபையில் ஷாப்ட்ஸ்பரி பிரபு முதன்மை பெற்று விளங்கினார். அவர் குற்றங்கள் செய்த ஆங்கிலேயர்களை அரசர் தமது இஷ்டப்படி சிறையில் அடைக்கவும் இதர தண்டனைகளை விதிக்கவும் கூடாமற் செய்ய நினைத்து பொதுஜன சபையில் ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார். அதற்கு ஆங்கிலப் பாஷையில் ஹேபியஸ் கார்ப்பஸ் ஆக்ட் (Habeas Corpus Act) என்று பெயர். அதன்படி தீமைகள் இழைத்துவந்த ஆங்கிலேயர்கள் நியாயஸ்தலத்திற்குக் கொண்டுவரப்பட்டு விசாரணை செய்யப்படவேண்டும் என்று ஏற்பட்டது. இந்

மசோதாவைப் பொதுஜன சபையும் பிரபுக்கள் சபையும் அங்கீகரித்துவிட்டன. அரசரும் அதில் கையொப்பமிட்டார். இவ்வாறு அந்த மசோதா சட்டமாகிவிட்டது. இது முதற்கொண்டு ஆங்கில வேந்தர், தமது விரோதிகளை நீதி ஸ்தலங்களில் சரியான விசாரணை செய்யப்படாமலும், அவர்கள்மீது உள்ள வழக்கு விசாரிக்கப்படுகையில் அவர்கள் நீதிஸ்தலத்துக்குக் கொண்டு வரப்படாமலும், தம்மிஷ்டப்படி தண்டனை விதிப்பதற்கு முடியாமற் போயிற்று. பொது ஜனங்களின் சுயேச்சையைக் காக்கக் கூடிய ஒரு சட்டமானதால், இது ஆங்கிலப் பார்லிமெண்டாரால் இயற்றப்பட்டுள்ள சட்டங்களுக்குள் முக்கியமானதாகும்.

**விலக்கு மசோதாவும், ராஜ்யக் கட்சிகள் பிறந்ததும் (கி. பி. 1683):**—சார்ல்ஸுக்குப் புதல்வரில்லை யாதலால் அவருடைய தம்பியான ஜேம்ஸ்தான் பட்டத்திற்கு உரியவராய் இருந்தார். இதையறிந்த ஆங்கில பிராடெஸ்டண்ட்கள் அவர் கத்தோலிக் மதாபிமானியானதால் ஆங்கிலிகன் மதத்தை ஒழித்து விடுவார் என்று அஞ்சினார்கள். ஆனதுபற்றி அவர்கள் ஜேம்ஸை ஆங்கிலப் பட்டத்துக்கு வரவொட்டாமல் தடுக்க, ஷாப்ட்ஸ்பரி பிரபுவைப் பார்லிமெண்டில் ஒரு மசோதாவைக் கொண்டு வரும்படி செய்தார்கள். அதற்கு விலக்கு மசோதா (Exclusion Bill) என்று பெயர். சார்ல்ஸ் தம்மால் இயன்றவரையில் அம்மசோதா சட்டமாகாதபடி முயற்சி செய்தார். பொதுஜன சபை அம்மசோதாவை அங்கீகரித்த போதிலும் பிரபுக்கள் சபை அதைத் தள்ளிவிட்டது. ஆயினும் அம்மசோதாவைப் பார்லிமெண்டில் கொண்டுவந்த பிறகுதான் அச்சபையில் இரண்டு ராஜியக் கட்சிகள் ஏற்பட்டன. அந்த மசோதாவை ஆதரித்த கட்சிக்கு விக் (Whig)

என்றும், அதை எதிர்த்த கட்சிக்கு டோரி (Tory) என்றும் பெயர்கள் வழங்கப்பட்டன.

கொடிய ப்ளேக் நோயும் பயங்கரமான தீயும்:-சார்ல்ஸின் ஆட்சியில் இரண்டு துக்ககரமான செய்திகள் நடந்தன. அவைகள் ப்ளேக் நோயும் பயங்கரமான தீயும் ஆகும். ப்ளேக்



ஸெண்ட் பால்ஸ் சர்ச் தீப்பற்றி எரிதல்.

நோய் லண்டன் நகரில் கி. பி. 1665ல் பரவிற்று. அதனால் லக்ஷக்கணக்கான ஜனங்கள் மாண்டார்கள். மறு வருஷத்தில் ஒரு கொடிய தீ அந்நகரில் எங்கும் பரவி ஆயிரக்கணக்கான வீடுகளையும் தேவாலயங்களையும் எரித்துவிட்டது. இவ்வாறு தீயினால் அழிந்த கோவில்களில் ஸெண்ட் பால்ஸ் கோவில் (St. Paul's Cathedral) ஒன்றாகும். இத்தீயினால் ஜனங்களுக்கு ஏற்பட்ட கஷ்டத்திற்கும் பொருட் சேதத்திற்கும் ஓர் எல்லை கிடையாது. ஆயினும், இப் பயங்கரமான தீயினால்,

ப்ளேக் பூச்சிகள் மடிந்துவிட்டதால் ப்ளேக் நோய் முற்றிலும் ஒழிந்தது. பழய மரவீடுகள் இருந்த இடங்களில் அழகான செங்கற் கட்டடங்கள் கட்டப்பட்டன.

கேள்விகள்:—

1. மீட்சியின் பயன்கள் யாவை?
2. எக்காரணங்களால் லூயியிடம் ஆங்கிலேயர்களுக்கு விரோதம் உண்டாயிற்று?
3. சோதனைச் சட்டம் ஏன் பிறப்பிக்கப்பட்டது? அதன்படி என்ன ஏற்பட்டது?
4. ராஜ்யக் கட்சிகள் இங்கிலாந்தில் எவ்வாறு ஏற்பட்டன? அவை யாவை?
5. பயங்கரமான தீயினால் உண்டான நன்மை தீமைகள் யாவை?
6. ஹேபியஸ் கார்ப்ஸ் ஆக்ட் எக்காரணத்தினால் ஒரு முக்கியமான சட்டம் ஆகும்?

---

## அத்தியாயம் 5.

---

### இரண்டாவது ஜேம்ஸ் (கி. பி. 1685—1688).

ஜேம்ஸ் சிங்காதனம் ஏறுதல்:—சார்ல்ஸுக்குப் பிறகு அவரது தம்பியான ஜேம்ஸ் சிங்காதனம் ஏறினார். அவர் கத்தோலிக் மதப்பிரியர். டோரிக் கட்சியார்கள் இவ்வரசரின் பட்சத்தில் இருந்தார்கள். அக் கட்சியினர் பார்லிமென்டில் வலிமையுள்ளவராததால் அச்சபை ஜேம்ஸுக்கு வாழ்நாள் முழுவதும் செலவிற்கு வைத்துக்கொள்ளும்படி ஏராளமான பணத்தைக் கொடுத்தது. அதற்குப் பதிலாக ஜேம்ஸ் சர்ச் உரிமைகளைப் பாதுகாப்பதாக வாக்களித்தார். அதனால் அவர்

தமது இஷ்டப்படி கதோலிக் மதத்தைத் தழுவுவதற்கு அனுமதி பெற்றார்.

மான்மத் கலகம்:—ஜேம்ஸ் சிங்காதனமேறின வருடத்திலேயே இரண்டாவது சார்ல்ஸின் கள்ள மனைவியின் புதல்வரான மான்மத் கோமகனார் ஆங்கில மகுடத்துக்கு உரிமை கொண்டாடிக்கொண்டு ஒரு சைன்யத்துடன் வந்து இறங்கினார். அச் சேனை பிரிஸ்டல் நகரை நோக்கிச் சென்றது. பிறகு ஆங்கில வேந்தரின் சைன்யம் அதை ஸெட்ஜ்மோர் என்ற விடத்தில் தோற்கடித்தது. மான்மத் கோமகனார் ஓடி ஒளிந்துகொண்டார். பிறகு அவர் தமது விரோதிகளால் பிடிக்கப்பட்டு சிரசாக்கினை செய்யப்பட்டார். இக் கலகத்தில் சம்பந்தப்பட்டவர்கள் அனைவரும் ராஜத் துரோகிகள் எனக் கருதப்பட்டு அதிகக் கடுமையான தண்டனைகளைப் பெற்றார்கள். இக் கொடிய தண்டனைகளைக் கலகக்காரர்களின் மீது விதித்தவர் ஜெப்ரீஸ் (Jeffreys) என்ற ஒரு நியாயாதிபதி. அவர் அரசாங்க விரோதிகளின்மீது கொடிய தண்டனைகளை விதித்ததால் அரசருடைய அன்பை அடைந்ததோடு பிரபுப் பட்டத்தையும் பெற்றார்.

ஜேம்ஸ் கதோலிக்குகளை ஆதரித்தல்:—ஜேம்ஸ் கதோலிக் மதத்தில் அபிமானம் உள்ளவரானதால், சோதனைச் சட்டத்தை ரத்து செய்து கதோலிக்குகளுக்கு உயர்ந்த பதவிகளை அளிக்க முயன்றார். ஆனால் பார்லிமெண்ட் அச் சட்டத்தை ரத்து செய்யச் சம்மதிக்கவில்லை. ஆகையால் ஜேம்ஸ் கதோலிக்குகளுக்கு உத்தியோகங்கள் கொடுக்க வேறு வழி தேடினார். அவர் பார்லிமெண்டினால் பிறப்பிக்கப்பட்ட எந்தச் சட்டத்தையும் அமுலுக்குக் கொண்டு வராதபடி செய்யவும், சில காலத்திற்கு ரத்து செய்யவும் தமக்கு அதிகாரமுண்டு

என்று கூறினர். இவைகளை ஆங்கில பாஷையில் Suspending and Dispensing Powers என்பார்கள். பார்லிமெண்டார் இதைக்கேட்டு வியந்தார்கள். இவ்வதிகாரங்களின்படி ஜேம்ஸ் சோதனைச் சட்டத்திற்கு விரோதமாய்க் கதோலிக்குகளை உயர்ந்த பதவிகளுக்கு நியமனம் செய்தார். அவர் பிராடஸ்டண்ட் சர்ச்சுகளிலும் சர்வகலாசாலைகளிலும் கதோலிக்களுக்கு பெரும் பதவிகளைக் கொடுத்தார்.

பொறுமை விளம்பரமும் ஏழு பிஷப்புக்களும்:—இவ்வாறு ஜேம்ஸ் கதோலிக்குகளை ஆதரித்த பிறகு டிஸ்ஸெண்டார்கள் தங்களது இஷ்டப்படி தெய்வ ஆராதனை செய்தால் அதைத் தாமே பொறுத்துக்கொள்வதாக அவர் ஒரு விளம்பரம் செய்தார். இதற்குப் "பொறுமை விளம்பரம்" (Declaration of Indulgence) என்பது பெயர். டிஸ்ஸெண்டார்களின் அன்பை அடையவேண்டும் என்பது ஜேம்ஸின் நோக்கம். இந்த விளம்பரம் பிராடஸ்டண்ட்களுக்கு அநுகூலமாய் இருந்தபோதிலும், அவர்கள் அதைப் பார்லிமெண்டினால் பிறப்பிக்கப்படாதது என்று கூறி அங்கிகரிக்க மறுத்தார்கள். என்றாலும், ஜேம்ஸ் 'இந்த அறிக்கை எல்லா ஆலயங்களிலும் ஆராதனை நடக்கும்பொழுது வாசிக்கப்பட வேண்டும்" என்று ஆக்ஞாபித்தார். ஸான்க்ராப்ட் (Sancroft) என்னும் காண்டர்பரி ஆர்ச்பிஷப்பும், இன்னும் ஆறு பிஷப்புக்களும் இதற்குச் சம்மதிக்கவில்லை. அரசர் உடனே கோபமடைந்து அவர்களைச் சிறைச்சாலையில் அடைக்கும்படி செய்தார். பிறகு ஜேம்ஸ் அவர்களை ராஜத் துரோகிகள் என்று விசாரணை செய்யும்படி ஏற்பாடு செய்தார். நான்கு நியாயதிபதிகள் இவ் வழக்கை விசாரணை செய்து, 'இந்த ஏழு பிரபுக்களும் குற்றவாளிகள் அல்லர்' என்று தீர்ப்பு அளித்தார்கள். அதனால் ஆங்கிலேயர்களுக்கு அளவிலா மகிழ்ச்சி உண்டாகியது.

ஜேம்ஸ் இங்கிலாந்தை விட்டு ஓடுதல்:—ஜேம்ஸ் அநீதியான காரியங்களைச் செய்ததால், பிராடஸ்டன்ட் குடிகள் அவரை வெறுத்தார்கள். ஆனால் அவர்கள் ஜேம்ஸுக்குப் பிறகு அவருடைய புதல்வியும் பிராடஸ்டன்ட் மதத்தைச் சார்ந்தவளும் ஆன மேரியே பட்டத்திற்கு உரியவள் என்று நினைத்து கலகம் செய்யாது சும்மாயிருந்தார்கள். இச் சமயத்தில் ஜேம்ஸுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. இச் செய்தியைக் கேட்டவுடன் பிராடஸ்டன்ட்கள், ஜேம்ஸைப்போல அவரது குழந்தையும் கதோலிக்காக இருந்து இங்கிலாந்தை ஆண்டால் தங்களது கஷ்டத்திற்கு முடிவில்லாமற் போய் விடும் என்று எண்ணினார்கள். ஆகையால் பார்லிமென்டார் மேரியின் கணவரும் ஹாலந்து மன்னரும் ஆன வில்லியம் என்பவரை இங்கிலாந்திற்கு வந்து ஆங்கில மகுடத்தை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினார்கள். அவர் பார்லிமென்டின் விருப்பத்திற்கு இணங்கி இங்கிலாந்தில் ஒரு சேனையுடன் வந்திறங்கினார். இதை யறிந்த இரண்டாவது ஜேம்ஸ் தம் மனைவி, குழந்தையுடன் லண்டன் நகரை விட்டு பிரான்ஸுக்குச் சென்றார்.

புகழ் பெற்ற புரட்சி:—பிறகு பார்லிமென்ட் கூடி, ஜேம்ஸ் பிரான்ஸுக்கு ஓடிவிட்டதால் ஆங்கிலச் சிம்மாசனம் காலியாய்விட்டது என்று அறிக்கை யிட்டது; பிராடஸ்டன்ட் மதத்தையும், ஆங்கிலேயரது உரிமைகளையும் பாதுகாப்பேன் என்று வில்லியம் வாக்களித்ததன் பேரில் அவரும் அவரது மனைவியாகிய மேரியும் சேர்ந்து இங்கிலாந்தை அரசாளும்படி பார்லிமென்ட் மகா சபை அவர்களை வேண்டிக்கொண்டது. அவர்கள் அதற்கு இணங்கி இங்கிலாந்தை ஆளத் தொடங்கினார்கள். இவ்வாறு பார்லிமென்ட் தன் ஆணையை மீறி நடந்த ஜேம்ஸைச் சிம்மாசனத்தினின்று நீக்கி அவரது

மாப்பிள்ளையும் ஹாலந்து வேந்தருமான வில்லியம் என்பவரை அங்கில வேந்தராகச் செய்த இச் சம்பவத்தைப் புகழ் பெற்ற புரட்சி (Glorious Revolution) என்று சரித்திரகாரர்கள் அழைக்கின்றனர். ஏனெனில் இச் சம்பவத்தால் யாதொரு சண்டையும் கலகமும் இங்கிலாந்தில் இல்லாமல் அரசியல் முறையில் மாறுதல் அடைந்தது.

கேள்விகள்:—

1. ஜேம்ஸ் எவ்வாறு கதோலிக்குகளை ஆதரித்து வந்தார்?
2. பொறுமை விளம்பரத்தை ஜேம்ஸ் எந்த நோக்கத்துடன் வெளியிட்டார்? அதில் அடங்கிய விஷயம் யாது?
3. ஏழு பிஷப்புக்கள் ஏன் விசாரணை செய்யப்பட்டார்கள்? அஃது எவ்வாறு முடிந்தது?
4. இரண்டாவது ஜேம்ஸ் தமது மகுடத்தை இழந்ததற்குக் காரணங்கள் யாவை?
5. 'புகழ்பெற்ற புரட்சி' என்பது யாது? அது இங்கிலாந்தில் எவ்வாறு ஏற்பட்டது?

---

## அத்தியாயம் 6.

---

### மூன்றாவது வில்லியமும் மேரியும் (கி. பி. 1688—1702)

**உரிமைகள் மசோதா (கி. பி. 1689):**—வில்லியமும் மேரியும் இங்கிலாந்தை ஆளத்தொடங்கியதும், பார்லிமென்ட் மன்னர் பொதுஜனங்களின் நன்மையைக் கவனியாமல் தமது இஷ்டப்படி அரசாளுவதைத் தடுக்கக்கூடிய சில சீர்திருத்தங்களைச் செய்தது. அவைகளில் உரிமைகள் சட்டம் (Bill of Rights) என்பது ஒன்றாகும். அது மன்னரின் உரிமைகளைக் குறைத்ததுமன்றி குடிகளின் உரிமைகளையும் ஸ்தாபித்தது.

அதின் முக்கிய ஷரத்துக்களாவன:—1. பார்லிமென்டைக் கூட்டாமல் அரசர் தமது இஷ்டப்படி அரசாளக் கூடாது. 2. பார்லிமென்டின் சம்மதமின்றி அரசர் புதிய வரிகளை விதித்தல் கூடாது. 3. சரியான விசாரணையின்றி எவரையும் அரசர் சிறையிலிடக்கூடாது. 4. கதோலிக்குகளும் அம் மதத்தைத் தழுவின பெண்களை மணம் புரிந்தவர்களும் பட்டத்திற்கு வரலாகாது. 5. அமைதிக் காலத்தில் நிலைத்த சேனையை வைத்துக்கொண்டு அரசர் தம் குடிகளைப் பய முறுத்தல் கூடாது. இதிற்கண்ட சில ஷரத்துக்கள் மகா சாஸனப் பத்திரத்தில் இருக்கின்றன என்பது குறிப்பிடத் தக்கது.

இதர சீர்திருத்தங்கள்:—இதைத்தவிர, பார்லிமென்ட் "பிராடஸ்டன்ட்களில் எந்த வகுப்பைச் சேர்ந்தவராய் இருந்தபோதிலும் ஆங்கிலேயர்கள் தங்கள் இஷ்டப்படி கடவுளைத் தொழலாம்" என்று ஒரு சட்டத்தைப் பிறப்பித்தது. மேலும், அச் சபை கி. பி. 1695-ல் மூன்று வருஷத்திற்கு ஒரு முறை பார்லிமென்ட் தேர்தல் நடைபெறவேண்டும் என்ற ஒரு சட்டத்தையும் இயற்றியது.

கட்சித் துரைத்தனத்தின் ஆரம்பம்:—இரண்டாவது சார்ல்ஸின் காலத்தில் பார்லிமென்டில் இரண்டு ராஜீயக் கட்சிகள் ஏற்பட்டன என்பது ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. சில வேளைகளில் "விக்" கட்சியினர் வலிமையுள்ளவராகவும், சில சமயங்களில் டோரிக் கட்சியினர் பார்லிமென்டில் பெரும்பான்மையோராகவும் இருந்தனர். வில்லியம் பட்டத்திற்கு வந்ததும் "விக்" கட்சி பார்லிமென்டில் அதிகாரம் பெற்றது. வில்லியம் பார்லிமென்டின் இஷ்டப்படி அரசாளவேண்டியதாக இருந்தது. இல்லாவிடில், பார்லி

மெண்ட் அவருக்கு அளித்துவந்த பொருளுதவியை நிறுத்திவிடும். மேலும், அவருக்குப் பார்லிமெண்டில் பெரும்பான்மைக் கட்சியிலிருந்து தம்முடைய மந்திரிகளை நியமித்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இன்றேல், அரசாட்சி தடைப்படும். ஆகையால், பெரும்பான்மைக் கட்சியிலிருந்து அரசர் தமது மந்திரிகளை நியமித்துக்கொள்ள வேண்டும் என்ற வழக்கம் வில்லியமின் காலத்தில் முதல் முதலில் ஏற்பட்டது. இவ்வழக்கம் இன்றைக்கும் அனுஷ்டானத்தில் இருந்து வருகிறது. இத்தகைய கொள்கைகளுடன் கூடிய ஆட்சிமுறையை கட்சித் துரைத்தனம் (Party Government) என்று சொல்லுகிறோம்.

வில்லியம் கலகங்களை அடக்குதல்:—அயர்லாந்திலுள்ள கத்தோலிக்குகள் வில்லியமின் ஆட்சியை அங்கீகரிக்காமல் இரண்டாவது ஜேம்ஸையே இன்னும் தங்களது அரசராகப் பாவித்து வந்தார்கள்; ஜேம்ஸ் அயர்லாந்துக்குச் சென்று கொஞ்ச காலம் தங்கியிருந்தார். வில்லியம் ஒரு பெரிய சைன்யத்துடன் கி. பி. 1660-ல் அந்நாட்டிற்குச் சென்று பாய்ன் (Boyne) நதிக்கரையில் ஜேம்ஸைத் தோற்கடித்தார். ஜேம்ஸ் உடனே பிரான்ஸுக்குச் சென்றுவிட்டார். இவ்வாறு வில்லியம் ஐரிஷ்க் கலகத்தை அடக்கினார்.

தென் ஸ்காட்லாந்திலுள்ள பிராடெஸ்டெண்ட்கள் வில்லியமின் ஆட்சியை ஏற்றுக்கொண்டார்கள். ஆயினும், வட ஸ்காட்லாந்திலுள்ள ஜனங்கள் (ஹைலாந்தியர்கள்) வில்லியமின் ஆட்சியை ஏற்றுக்கொள்ளாமல் ஜேம்ஸின் சார்பாகக் கிளர்ச்சி செய்து வந்தார்கள். ஆகையால் வில்லியம் ஒரு பெரிய சேனையுடன் ஸ்காட்லாந்திற்குச் சென்று, கில்லிகிராங்கி (Killiecrankie) என்னுமிடத்தில் கலகக்காரர்களைத்

தோற்கடித்துத் தமது ஆட்சியை ஏற்றுக்கொள்ளும்படி செய்தார்.

பிரேஞ்சுக்காரருடன் நடந்த போர்:—வில்லியம் இங்கிலாந்து மன்னராவதற்கு முன்னமேயே பிரெஞ்சு மன்னரான பதினான்காவது லூயிக்கும் அவருக்கும் தீராப்பகை உண்டு. ஏனெனில் லூயி, பிராடெஸ்டண்ட் நாடாகிய ஹாலந்தை ஜயித்துத் தமது ஆட்சிக்கு உட்படுத்த முயன்றார். வில்லியம் ஆங்கிலச் சிங்காதனமேறினவுடன் லூயியின் பகை அதிகரித்தது. ஆகையால் லூயி தம்மிடம் அடைக்கலம் புகுந்த ஜேம்ஸை ஆங்கில மன்னராக்க முயன்றார். இக்காரணங்களால் வில்லியமுக்கும் லூயிக்கும் கி. பி. 1680-ல் ஒரு யுத்தம் ஆரம்பித்தது. சண்டைகள் நீரிலும் நிலத்திலும் நடந்தன. ஆங்கிலக் கப்பற்படை லா ஹோக் (La-Hogue) என்றவிடத்திற்கு அருகில் நடந்த ஒரு கடற் சண்டையில் கி. பி. 1692ல் வெற்றியடைந்தது. கடைசியில், கி.பி. 1697ல், ரைஸ்விக் (Ryswick) என்னுமிடத்தில் லூயி இங்கிலீஷ்காரர்களுடன் சமாதானம் செய்துகொண்டார். அதன்படி வில்லியம் ஆங்கில வேந்தரென லூயி ஒப்புக் கொண்டதோடு ஜேம்ஸுக்கு எவ்விதத்திலும் உதவி புரிவதில்லை என்றும் வாக்களித்தார்.

வார்ஸ் நிர்ணயச் சட்டம்:—பார்லிமெண்ட் கி.பி. 1701ல் வார்ஸ் நிர்ணயச் சட்டம் (Act of Succession) என்பதைப் பிறப்பித்தது. அதன்படி வில்லியம் சந்ததியின்றி இறந்து போனால் ஜேம்ஸின் இரண்டாவது புதல்வியான ஆன் (Anne) ஆங்கில அரசியாக வேண்டியது என்றும், ஆனும் சந்ததியின்றி இறந்துபோனால் முதலாவது ஜேம்ஸின் பேத்தியாகிய ஸோபயா (Sophia)வும் அவளுடைய குழந்தைகளும், பிரா

டெஸ்டண்ட் மதத்தினர்களாயிருந்தால், ஆங்கிலப் பட்டத்திற்கு உரியவர்கள் என்றும் ஏற்பாடாயிற்று.

**ஸ்டூவர்ட் வம்சாவளி**

ஜேம்ஸ் I (1603—1625)




**வில்லியமின் மரணம்:**—பிரெஞ்சு மன்னரான லூயியுடன் மறுபடியும் கி. பி. 1702-ல் போர் தொடங்கவேண்டியிருந்தது. இங்கிலீஷ் கதோலிக்குகள் இரண்டாவது ஜேம்ஸை ஆங்கில மன்னராக்க முயன்றார்கள். வில்லியம் எல்லாக் கலகங்களையும் அடக்கிவிட்டு லூயியுடன் போர் புரிய எத்தனித்துக்கொண்டிருக்கையில் கி. பி. 1702-ல் திடீரென மரணமடைந்தார்.

**கேள்விகள்:—**

1. பார்லிமெண்ட் உரிமைகள் மசோதாவை என் பிறப்பித்தது? அதன் ஷரத்துக்கள் யாவை? அதை எக் காரணத்தினல் ஆங்கிலேயர்கள் முக்கியமானது எனக் கருதுகிறார்கள்?
2. வில்லியமின் ஆட்சியில் பிறப்பிக்கப்பட்ட இதர சட்டங்கள் யாவை?

3. 'கட்சித் துரைத்தனம்' என்பது யாது?
4. வில்லியம் ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலும் உண்டான கிளர்ச்சிகளை எப்படி அடக்கினார்?
5. வில்லியமுக்கும் லூயிக்கும் எக்காரணங்களால் போர் நடந்தது? அது எவ்வாறு முடிந்தது?

---

## அத்தியாயம் 7.

### ஆன் அரசியார். (கி. பி. 1702—1714).

மார்ல்பரோ பிரபு:—வில்லியம் சந்ததியின்றி இறந்தவுடன், வார்ஸ் நிர்ணயச் சட்டப்படி ஜேம்ஸின் இரண்டாவது புதல்வியாகிய ஆன் ஆங்கில அரசியானார். அவர் வெகு நல்ல சுபாவமுள்ளவர். அவருக்கு ராஜீய விஷயங்களில் ஆலோசனை கூறி உதவி செய்தவர் மார்ல்பரோ பிரபு (Duke of Marlborough) அவர் ஆன் அரசியாரின் அருமைத் தோழியாகிய ஸாரா ஜேன்னிங்ஸ் (Sarah Jennings) என்பவளின் கணவர். ஆனதுபற்றி அவருக்கு அதிகச் செல்வாக்கும் அதிகாரமும் ஆன் அரசியாரின் ஆட்சியில் ஏற்பட்டது. மேலும், அவருக்குப் போர்த்திறமை அதிகமானதால் அவர் இங்கிலீஷ் சேனையின் தலைவராயிருந்து போர்களை நடத்தினார்.

ஸ்பெயின் வார்ஸுப் போர் (கி. பி. 1702—1713):—ஸ்பெயின் மன்னரான இரண்டாவது சார்ல்ஸ் சந்ததியின்றி இருந்தார். ஆகையால் அவருக்குப் பிறகு ஸ்பெயின் முடியை யார் அடைவது என்ற கேள்வியைத் தீர்மானம் செய்ய வேண்டியிருந்தது. அவருடைய ஒரு சகோதரி பிரெஞ்சு மன்னரான லூயியையும் மற்றொரு சகோதரி ஆஸ்டிரியா வேந்தரான லியப்பால்டு என்பவரையும் விவாகம்

செய்து கொண்டிருந்தார்கள். ஸ்பெயின் மகுடத்திற்கு அதிக உரிமை யுள்ளவர்கள் லூயியின் பௌத்திரனான பிலிப் (Philip)பும் லியப்பால்டின் பௌத்திரனான ஜோசப் (Joseph)பும் ஆவர். லூயி தமது பேரனை ஸ்பெயின் மன்னராக்கி, ஸ்பெயினையும் பிரான்ஸையும் ஓர் ஆட்சியின்கீழ்க் கொண்டுவர யத்தனித்தார். இப்படிச் செய்தால் பிரெஞ்சு மன்னரின் பலமும் கௌரவமும் அதிகரித்துவிடும் என்று




எண்ணி, இங்கிலாந்து, ஆஸ்டிரியா, ஹாலந்து தேசங்கள் ஒன்றுகூடி லூயியின் எண்ணத்தை நிறைவேறவிடாமல் ஒரு பங்குப் பிரிவினை ஏற்பாட்டைச் (Partition Treaty) செய்து கொண்டன. அதன்படி ஜோஸப் ஸ்பெயின் வேந்தராவது என்றும் லூயிக்கு சில நாடுகளைக் கொடுத்து விடுவதென்றும் ஏற்பாடாயின. ஆனால் ஜோஸப் கி. பி. 1699-ல் மரணமடைந்தார். ஆகவே, லூயியின் பேரனான பிலிப்தான் ஸ்பெயின் மகுடத்திற்கு உரிமை உள்ளவராயிருந்தார். மேலும், சார்ல்ஸ் தமது மரணத் தருவாயில் லூயியின் பேரனான பிலிப்தான் தம்முடைய வார்ஸ் என்று கூறிவிட்டு, கி. பி. 1700-ல் இறந்தார். ஆகையால் லூயி தமது பேரனை ஸ்பெயின் மன்னராக்க அனுப்பினார். ஸ்பெயின் நாட்டினரும் பிலிப்பையே தங்களது மன்னரென ஏற்றுக்கொண்டார்கள். இதை யறிந்த

மூன்றுவது வில்லியமும் ஆஸ்டிரியா வேந்தரான லியபபாடும் பதினுன்காவது லூயியை பங்குப் பிரிவினை ஏற்பாட்டின்படி நடக்கவேண்டு மென்றூர்கள். அதற்கு லூயி சம்மதிக்காத தால் இங்கிலாந்தும், ஆஸ்டிரியாவும் ஒன்று சேர்ந்து பிரான் ஸின்மீது போர் தொடுத்தது. இவ்வாருக ஸ்பெயின் வார் ஸூப் போர் கி. பி. 1702-ல் தொடங்கியது.

மார்ல்பரோவின் வெற்றிகள்:—இந்தப் போரில் இங்கி லாந்து, ஹாலந்து, ஆஸ்டிரியா ஆகிய மூன்று தேசங்களும் ஒரு கட்சி; ஸ்பெயினும் பிரான்ஸும் மற்றொரு கட்சி; ஆங்கி லத் தளகர்த்தரான மார்ல்பரோ, பெல்ஜியத்தில் பிரெஞ்சுப் படை ஆஸ்டிரியாவின் தலைநகராகிய வியன்ன (Vienna)வைப் பிடிக்கச் செல்வதைக் கேட்டார். ஆகையால் அவர் உடனே தமது சேனையை வெகு வேகமாய் நடத்திச்சென்று ப்ளேன்ஹிம் (Blenheim) என்னும் கிராமத்திற்கு அருகில் பிரெஞ்சுப் படையை கி.பி.1704-ல் முறியடித்தார். இதுதான் மார்ல்பரோவின் முதல் வெற்றி. இவ்வெற்றி அவருக்குப் பெருங்கீர்த்தியை உண்டாக்கியது. அதே வருஷத்தில் ஆங் கில கப்பற்படைத் தலைவர் ஒருவர் ஜிப்ரால்டர் (Gibralter) என்ற கோட்டையைப் பிடித்துக்கொண்டார். இதற்குப் பின் நெதர்லாந்துகளில் ராமில்லீஸ், ஊடனர்ட், மால்பளகட் என்ற விடங்களிலும் மார்ல்பரோ பிரெஞ்சுக்காரர்களுடன் போர் புரிந்து வெற்றியடைந்தார்.

யூட்ரேக்ட் உடன்படிக்கை (கி. பி. 1713):—இந்தப் போர் கி. பி. 1713-வரைக்கும் நடந்து, பிறகு யூட்ரேக்ட் (Utrecht) என்னுமிடத்தில் நிகழ்ந்த உடன்பாட்டினல் முடிவடைந்தது. இதன்படி பிலிப் ஸ்பெயின் வேந்தரென ஒப்புக்கொள்ளப்பட்டபோதிலும் அவர் பிரான்ஸின் முடிக்கு

உரிமையுடையவர் அல்லர் என்பதும் ஏற்பட்டது. மேலும், மைனோர்க்கா (Minorca), ஜிப்ரால்டர் (Gibralter), நியூ பவுண்ட்லந்து (Newfoundland) முதலியன ஆங்கில அரசாங்கத்தாரின் ஆதீனத்தில் வந்தன.

கட்சித் துரைத்தனம்:-ஆன் அரசியார் சிங்காதன மேறின வுடன் டோரிக்கட்சியினர் அரசியலில் அதிக அதிகாரம் பெற்றிருந்தனர். அக் கட்சியைச் சேர்ந்த மார்ல்பரோ பிரபுவும் கொடால்பின் பிரபுவும் சேர்ந்து ராஜ்யக் காரியங்களைக் கவனித்து வந்தார்கள். அக்காலத்தில் ஸ்பானிஷ் வார்ஸ்ப் போர் நடந்ததால் மார்ல்பரோ இங்கிலாந்தின் போர்களை நடத்துவது என்றும் கொடால்பின் துரைத்தன விவகாரங்களைக் கவனிப்பது என்றும் ஒரு ஏற்பாடு செய்துகொள்ளப் பட்டது. இம்மாதிரியாக இந்த இரண்டு டோரிக் கட்சித் தலைவர்களும் ஆறு வருஷகாலம் சர்வதிகாரத்துடன் இருந்து வந்தார்கள். பிறகு மார்ல்பரோ போரை நடத்த இஷ்டப் பட்டதால், விக் கட்சியினரின் உதவியைக்கொண்டு அவரே இரண்டு வருடங்கள் மந்திரியாக இருந்து வேலை பார்த்தார். கி. பி. 1710-ல் மார்ல்பரோ மந்திரிப் பதவியிலிருந்து தள்ளப் பட்டதும் டோரிக்கட்சியார்கள் மூன்று வருடகாலம் ராஜாங்க விஷயங்களில் அதிகாரம் பெற்று இருந்தார்கள். அவர்கள் கி. பி. 1713-ல் பிரெஞ்சுக்காரர்களுடனும் ஸ்பானிஷ்காரர்களுடனும் யூட்ரெக்ட் என்ற விடத்தில் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டார்கள்.

ஸ்காட்லாந்தும் இங்கிலாந்தும் ஐக்கியமாதல்:—கி. பி. 1707-ல் ஆன் அரசியாரின் ஆட்சியில் நிகழ்ந்த மற்றொரு பெரிய சம்பவம் இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் ஐக்கியமானது ஆகும். முதலாவது ஜேம்ஸின் காலம் முதல் இங்கி

லாந்துக்கும் ஸ்காட்லாந்துக்கும் ஒரே அரசரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தபோதிலும், தனித்தனி பார்லிமெண்டுகள் அவ்விரண்டு நாடுகளிலும் இருந்து வந்தன. மேலும், இரண்டாவது ஜேம்ஸ் இங்கிலாந்தை விட்டு ஓடினது முதல் வியாபார விஷயமாக அநேக மனஸ்தாபங்கள் நேரிட்டு வந்தன. ஆங்கிலேயர்கள் ஸ்காட்லாந்தியர்களைச் சமத்துவமாகப் பாவிக்கவில்லை. குடியேறின நாடுகளுடன் வியாபாரம் செய்வதற்கும் அவர்களுக்கு இடங்கொடுக்கவில்லை. ஆனால் அவர்கள் ஆங்கிலேயருடன் சமமாயிருந்து வாழ விரும்பினார்கள். அக்காலத்தில் மந்திரியாய் இருந்த கோடால்பின் (Godolphin) வெகு சாமர்த்தியமாக ஓர் ஐக்கியச் சட்ட (Act of Union) த்தைப் பிறப்பித்து, இரண்டு நாடுகளின் பார்லிமெண்டுகளையும் அதை ஒப்புக்கொள்ளும்படி செய்தார். அதன்படி "(1) இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் பெரிய பிரிட்டன் என்னும் ஏகராஜ்யமாக இணைக்கப்படவேண்டும். (2) ஐக்கியப் பார்லிமெண்டின் பொதுஜன சபைக்கு ஸ்காட்லாந்தியர்கள் 45 அங்கத்தினர்களையும் பிரபுக்கள் சபைக்கு 16 அங்கத்தினர்களையும் தங்களது பிரதிநிதிகளாக அனுப்பவேண்டும். (3) வர்த்தக விஷயங்களில் இரண்டு தேசத்தவர்களும் சகல சுதந்தரங்களையும் சமமாய் அனுபவிக்கவேண்டும். (4) ஸ்காட்லாந்தியர்கள் தங்களது மதம், சட்டங்கள் இவற்றை யாதொரு இடையூறின்றி அனுஷ்டித்து வரலாம்" என்பன ஆங்கிலேயர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டன.

**மார்ல்பரோவின் வீழ்ச்சி:**—டோரிக் கட்சியினர் 'யுத்தங்களை ஒழித்து உள் நாட்டில் சமாதானத்தைப் பரவச் செய்யவேண்டும்' என்ற கொள்கை யுடையவர்கள். 'விக்' கட்சியினரோ 'யுத்தம் செய்து வியாபாரத்தைப் பெருகச் செய்து

இங்கிலாந்துக்கு ஒரு புகழை உண்டாக்க வேண்டும்' என்ற கொள்கையை யுடையவர்கள். மார்ல்பரோ ஒரு டோரியான போதிலும், 'விக்' கட்சியில் சேர்ந்துகொண்டு ஸ்பெயின் வார்ஸ்ப்போரை அகாரணமாக மேன்மேலும் நடத்தி வந்தார் என்ற ஓர் அபவாதம் உண்டாயிற்று. மேலும், அவரது மனைவி ஆன் அரசியாரின் நேசத்தை இச்சமயத்தில் இழந்தாள். இக்காரணங்களால் மார்ல்பரோ தமது பதவியை இழந்துவிட்டார்.

**ஜோஸப் அடிஸனும் ஸ்டீலும்:**—மூன்றாவது வில்லியமின் காலத்துக்குப் பிறகு அநேக கலைஞர்கள் வசன நடையில் புத்தகங்களை எழுதினார்கள்; ஆனின் ஆட்சிக்காலத்தில் சில மாதாந்தரப் பத்திரிகைகளில் அநேக அருமையான வியாசங்களை எழுதி வெளியிட்டார்கள். அவர்களுள் முக்கியமானவர்கள் ஜோஸப் அடிஸன் (Joseph Addison), ஸ்டீல் (Steele) முக்கியமானவர்கள். டேனியல் டீபோ என்ற கலைஞரும் வசித்த காலம் இதுதான். அவர் 'ராபின்ஸன் குரூஸோ'வின் ஜீவிய சரித்திரமும் செயல்களும் என்பதைப்பற்றி ஒரு புத்தகத்தை மிகத் தெளிவான நடையில் எழுதியிருக்கிறார். இந்தப் புத்தகத்தினால் டேனியல் டீபோவுக்கு அதிகக் கியாதி ஏற்பட்டது. ஸ்டீல் டாட்லர் (Tatler) என்ற ஒரு பத்திரிகையையும், அடிஸன், ஸ்டீல் இருவரும் சேர்ந்து ஸ்பெக்டேடர் (Spectator) என்ற ஒரு பத்திரிகையையும் பிரசுரம் செய்தார்கள். பொது ஜனங்கள் இப் பத்திரிகைகளை வாங்கி வாசித்துத் தங்களுடைய அறிவை விருத்தி செய்துகொண்டார்கள். இக்காலத்தில் நாடகங்களும் காவியங்களும் ஆங்கில கலைஞர்களால் எழுதப்படவில்லை.

**ஆன் ராணியாரின் மரணம்:**—டோரிக் கட்சியின் தலைவரான ஜான் பாலிங்ப்ரோக் (John Bolingbroke) ஆனின்

குழந்தைகள் எல்லாம் சிறுவயதிலேயே இறந்துவிட்டதால் அவரது தம்பியும் கத்தோலிக் மதத்தினரும் ஆன ஜேம்ஸ் எட்வர்டை ஆங்கில வேந்தராகச் செய்ய முயன்றார். ஆனால், கி. பி. 1714-ல் ஆன் திடீரென்று இறந்தவுடன், விக் கட்சியினர் வார்ஸ் நிர்ணயச் சட்டத்தின்படி ஸோபயாவின் புதல்வரான ஜார்ஜ் (George) என்பவரை ஆங்கில வேந்தரென விளம்பரம் செய்தனர். உடனே பாலிங்ப்ரோக் பிரபு நாட்டை விட்டு ஓடினார். ஆன் அரசியுடன் ஸ்டூவர்ட் வம்சத்து அரசர்களின் ஆட்சி முடிவுபெற்றது. ஆனுக்குப் பிறகு இங்கிலாந்தின் அரசராக வந்த ஜார்ஜ் ஜர்மனியில் ஹனோவர் (Hanover) மாகாணச் சிற்றரசரானதால், இப்புதியவம்சத்திற்கு ஹனோவிரியன் வம்சம் என்று பெயர் வந்தது.

கேள்விகள்:—

1. ஆனின் ஆட்சிக்காலத்தில் மார்ல்பரோ பிரபுவுக்கு அதிக அதிகாரம் ஏற்படுவதற்குக் காரணம் யாது?
2. ஸ்பெயின் வார்ஸப் போரின் காரணங்கள் யாவை? அப்போரில் நிகழ்ந்த முக்கிய சண்டைகள் யாவை?
3. யூட்ரெக்ட் உடன்படிக்கையின் பிரகாரம் என்ன ஏற்பாடுகள் ஆயின.
4. எக்காரணங்களினால் ஐக்கியச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது? அந்தச் சட்டத்தில் அடங்கியுள்ள ஷரத்துக்கள் யாவை?
5. மார்ல்பரோவின் வீழ்ச்சிக்குக் காரணங்கள் யாவை?

| முக்கிய நிகழ்ச்சிகள். | வருஷங்கள். | |
|---|---|---|
| வெடிமருந்துச் சதி | கி. பி. | 1605 |
| உரிமை விண்ணப்பம் | ,, | 1628 |
| ஹாம்ப்டன் கப்பற்பணத்தைக் கொடுக்க மறுத்தல் | | 1637 |
| நீடித்த பார்லிமெண்ட் | ,, | 1640 |
| உள்நாட்டுப் பெரும்போர் ஆரம்பித்தது | ,, | 1642 |

| | | |
|---|---|---|
| சார்ல்ஸ் சிரச்சேதம் செய்யப்பட்டது | கி. பி. | 1649 |
| கப்பற் போக்குவரத்துச் சட்டம் | ,, | 1651 |
| 'ரம்ப்' பார்லிமென்ட் கலைக்கப்பட்டது | ,, | 1653 |
| சோதனைச் சட்டம் | ,, | 1678 |
| விலக்கு மசோதா | ,, | 1683 |
| ஏழு பிஷப்புகள் விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டது | | 1687 |
| உரிமைகள் மசோதா | கி. பி. | 1689 |
| ஐக்கியச் சட்டம் | ,, | 1707 |
| யூட்ரெக்ட் உடன்படிக்கை | ,, | 1713 |

# IX. ஹனேவீரியன் அரசர்களின் காலம்.

(கி. பி. 1714—கி. பி. 1910)

## அத்தியாயம் 1.

### முதலாவது ஜார்ஜ் (கி. பி. 714—1727)

'விக்' கட்சியின் நீடித்த ஆட்சி:—ஜார்ஜ் ஆங்கில மகுடத்தைப் பெறுவதற்கு 'விக்' கட்சியார் உதவிபுரிந்தனர். ஆனது பற்றி அவர் அக் கட்சியார்களுக்குச் சர்வ அதிகாரத்தையும் கொடுத்தார். மேலும், ஜார்ஜுக்கு ஆங்கில பாஷையும், ஆங்கிலேயரின் பழக்க வழக்கங்களும் தெரியாததால், அவர் 'விக்' கட்சியினரையே அரசு புரியும்படி விட்டார். இவ்வாறு 'விக்' கட்சியினர் பார்லிமென்டில் பெரும்பான்மையோராயிருந்து ஐம்பது வருஷகாலம் ஆட்சி புரிந்தனர். அவர்கள் பார்லிமென்டின் அங்கத்தினர்கள் ஏழு வருஷங்களுக்கு ஒருதரம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று ஒரு புதிய சட்டத்தை இயற்றினார்கள்.

பதினைந்து என்னும் கலகம் (கி. பி. 1715):—ஜார்ஜ் பட்டத்துக்கு வந்ததும் வட இங்கிலாந்திலும் ஸ்காட்லாந்திலும் ஜேம்ஸ் எட்வர்டின் சார்பாக கி.பி. 1714-ல் ஒரு பெரிய கிளர்ச்சி * உண்டாயிற்று. அதற்குப் 'பதினைந்து (The Fifteen) என்று பெயர். ஹைலாந்தியர்கள் மார் பிரபு (Earl of Mar) வைத் தலைவராகக்கொண்டு தெற்கு நோக்கி வந்தார்கள். ஆர்கைல் கோமானின் தலைமையின் கீழிருந்த ஒரு சைன்யம் ஷெரிப்மூர் (Sheriffmuir) என்னுமிடத்தில் அவர்களைச் சந்தித்துப் போர் புரிந்தது. இச் சண்டையில் வெற்றி யாருடையது என்பது தெளிவாகத் தெரியவில்லை. இதற்குப் பிறகு ஜேம்ஸ் எட்வர்ட் ஸ்காட்லாந்தில் வந்திறங்கினர். அவருக்கு வீரத்தன்மையும் மனோ உற்சாகமும் இல்லாமையால் அவரது கட்சியினர்களே அவரைக் கைவிட்டனர். மேலும், பதினான்காவது லூயி இச் சமயத்தில் இறந்ததால், ஜேம்ஸ் எட்வர்டுக்குப் பிரெஞ்சு அரசாங்கத்தாரின் உதவியும் இல்லாமற் போயிற்று. ஆகையால் மார் பிரபுவும் ஜேம்ஸ் எட்வர்டும் பிரான்ஸுக்கு ஓடிவிட்டார்கள். ஹைலாந்தியரின் சேனையும் சின்னபின்னமாக்கப்பட்டது. இவ்வாறு இக்கலகம் பயனற்றதாக ஆயிற்று. இதில் சம்பந்தப் பட்டவர்கள் அனைவரும் கொடிய தண்டனைகளுக்கு ஆளாயினர்.

காபினெட் ஏற்பாடு:—மூன்றாவது வில்லியமின் ஆட்சியில் கட்சித் துரைத்தனம் முதல் முதலில் ஏற்பட்டது என்பதும் பார்லிமெண்டில் அதிகாரம் பெற்ற கட்சியிலிருந்து அரசர் தம்முடைய மந்திரிகளைத் தேர்ந்தெடுக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது என்பதும் ஏற்கனவே சொல்லப்பட்டுள. பார்லிமெண்டில் அதிகாரம் பெற்ற கட்சியார்கள்

*ஸ்டூவர்ட் மன்னர்களின் சார்பாகக் கிளர்ச்சி செய்தவர்களுக்கு 'ஜாகோபைட்கள்' (Jacobites) என்று பெயர்.

ராஜ்ய விஷயங்களைப்பற்றி இரகசியமாக ஆலோசனை செய்வதற்குத் தனித்து ஓரிடத்திலே கூடினார்கள். மந்திரிமார்கள் அடங்கிய இந்த இரகசிய சபையே காபினேட் (Cabinet) என்று சொல்லப்படுவது. இச் சபையில் அரசரே அக்கிராசனம் வகிப்பது வழக்கமாய் இருந்துவந்தது. முதல் இரண்டு ஜார்ஜுகளுக்கும் ராஜீய விஷயங்களில் அதிக சிரத்தை இல்லாதபடியாலும், அவர்களுக்கு ஆங்கில பாஷை தெரியாதபடியாலும் அவர்கள் காபினெட் சபைக்கு அநேகமாய் வருவதேயில்லை. ஆனதுபற்றி, மந்திரிமார்கள் தங்களுக்குள் ஒருவரை அக்ராசனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அநேகமாய் அதிகாரத்திலுள்ள கட்சியின் தலைவர்தான் காபினெட் சபையின் அக்ராசனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தார். காலம் செல்லச் செல்ல, அவர் ராஜ்ய பாரம் தாங்குவதில் தமக்கு உதவி செய்யக்கூடியவர்களையே காபினெட் சபையினராகத் தேர்ந்தெடுப்பது வழக்கமாய்விட்டது. மந்திரிகளில் எவர் எந்தக் காரியத்தைச் செய்தபோதிலும் காபினெட் சபையிலுள்ள எல்லா மந்திரிகளும் பார்லிமென்டுக்கு ஜவாப்தாரிகள் (Joint responsibility) என்பதும் ஏற்பட்டது. ஆகவே, மந்திரிகளைத் தள்ளுவதற்கும், நியமனம் செய்வதற்கும் அரசர்களுக்கு அதிகாரமில்லாமற் போயிற்று. இவ்வாறு பார்லிமென்ட் அரசியலில் சர்வ அதிகாரங்களையும் வகிக்கத் தொடங்கியது.

தென் கடற் கம்பெனி (கி. பி. 1720):—யூட்ரெக்ட் உடன்பாட்டிற்குப் பிறகு ஆங்கில வியாபாரம் அதிகரித்தது. அதனால் ஆங்கில வர்த்தகர்களுக்கு ஏராளமான லாபம் கிடைத்தது. ஆனதுபற்றி வர்த்தகர்களில் அநேகர் தனவான்களாக ஆயினர். சில தனவான்கள் தமது செல்வத்

தைப் பெருக்கப் பல தொழில்களிலும் போட்டார்கள். அநேக தனவான்கள் செல்வம் நிறைந்துள்ள தென் அமெரிக்காவுடன் வியாபாரம் செய்ய ஒரு சங்கத்தை ஏற்படுத்திக் கொண்டார்கள். இதற்குத் தென் கடற் கம்பெனி (South Sea Company) என்று பெயர். இது கி. பி. 1711-ல் ஹார்லி என்பவரது முயற்சியால் ஏற்படுத்தப்பட்டது. இக் கம்பெனிக்கு வியாபாரத்தினால் அதிக லாபம் கிடைத்தது. ஆனதுபற்றி பங்குகளின் விலை அதிகமாயிற்று. பல தனவான்கள் அக் கம்பெனி பங்குகளை அதிக விலை கொடுத்து வாங்கலானார்கள். அரசாங்கத்துக்குக் கடன் கொடுத்த தனவான்கள் கடன் தொகைக்காக தென்கடற் கம்பெனியின் பங்குகளை வாங்கிக் கொண்டார்கள். இப்படியிருக்கையில் இக் கம்பெனியைப்போல வேறு அநேக புதிய கம்பெனிகளும் அதே நோக்கத்துடன் இங்கிலாந்தில் ஏற்படுத்தப் பட்டன. அதன் பிறகு தென்கடற் கம்பெனிக்கு அதிக லாபம் வரவில்லை. பங்கின் விலையும் குறைந்தது. ஆகையால் அதிகத் தொகை கொடுத்து பங்குகளை வாங்கின பங்குக்காரர்கள் பெரும் நஷ்டத்தை அடைந்தார்கள். இதனால் பங்குக்காரர்களில் அநேகர் தங்களது பங்குப் பணத்தைத் திருப்பிக் கொடுக்கும்படி ஏககாலத்தில் கேட்கலாயினர். ஆகவே இக் கம்பெனி கி. பி. 1720 முதல் அதிக லாபம் அடையக்கூடவில்லை.

ராபர்ட் வால்போல் பிரதான மந்திரியாதல்:—தென்கடற் கம்பெனி முறிந்துபோனதால் நஷ்டம் அடைந்தவர்கள், "விக் மந்திரிகள் அக் கம்பெனியின் அதிகாரிகளிடமிருந்து லஞ்சம் வாங்கினார்கள்" என்று சந்தேகங்கொண்டு அவர்களை நீக்கிவிடுவதற்காகப் பெருங் கிளர்ச்சி செய்துவந்தார்கள். ஆனால் அவர்களுக்கு 'விக்' கட்சியைச் சேர்ந்த ராபர்ட் வால்போல்

(Robert Walpole) என்பவரிடம் அதிக நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. ஆகையால் ஆங்கிலேயர்கள் அனைவரும் அவரைப் பிரதான மந்திரியாயிருந்து நாட்டின் முன்னேற்றத்திற்காக சில சீர்திருத்தங்களைச் செய்யும்படி வேண்டிக்கொண்டார்கள். அவர்களது இஷ்டப்படியே கி. பி. 1721-ல் வால்போல் இங்கிலாந்தின் பிரதான மந்திரி ஆனார். அவர் இருபது வருஷகாலம் அப் பதவியில் வேலை பார்த்தார்.

கேள்விகள்:—

1. 'விக்' கட்சியினர் ஜார்ஜின் காலத்தில் அதிகாரம் பெற்றதற்குக் காரணங்கள் யாவை?
2. காபினெட் ஏற்பாட்டைப்பற்றி உனக்கு என்ன தெரியும்?
3. பதினைந்து என்னும் கலகத்தைப்பற்றிச் சுருக்கமாய் எழுதுக.
4. தென்கடற் கம்பெனி எக்காரணங்களால் அழிந்தது?

---

## அத்தியாயம் 2.

### இரண்டாவது ஜார்ஜ் (கி. பி. 1727—1760)

ஜார்ஜின் குணாதிசயங்கள்:—முதலாவது ஜார்ஜ் ஹனோவர் மாகாணத்தில் கி. பி. 1727-ல் இறந்துபோனார். அவருடைய புதல்வர் இரண்டாவது ஜார்ஜ் என பட்டத்திற்கு வந்தார். அவர் ஒரு சிறந்த போர்வீரர்; உலக விஷயங்களை அறிந்தவர்; ஆனால் அவர் வெகு இழிவான தன்மையுடையவர்; கர்வம் படைத்தவர்; பண ஆசை பிடித்தவர். அவருக்கு வால்போலிடம் அதிக அன்பும் நம்பிக்கையும் இல்லை. ஆனால் அவர் தமது மனையாளின் சொற்கேட்டு வால்போலையே தம் மந்திரியாக வைத்துக்கொண்டார்.

**வால்போல் மந்திரியின் ஆளுகை:**—வால்போல் ஒரு சிறந்த ராஜதந்திரி. அவர் வெகு சமர்த்தர். அவர் ராஜீய விஷயங்களைத் திறமையுடன் நடத்தி வந்தார். அதிக இனிமையாய்ப் பேசும் திறமை யில்லாவிடினும், அவர் பார்லிமெண்டில் அங்கத்தினர்களின் கேள்விகளுக்குத் தவக்கமின்றி சமயத்திற்கேற்றபடி சாமர்த்தியமாய் பதில் சொல்லுவார்.



ராபர்ட் வால்போல்.

இது அவரது புத்தி நுட்பத்தைத் தெரிவிக்கின்றது. வரவு செலவு திட்ட (Budget) கணக்குத் தயாரிப்பதில் அவருக்கு

டு அக் காலத்தில் எவரும் இல்லை. அவர் தம்முடன் ராஜ்ய வேலைகளில் அபிப்பிராய பேதமில்லாமல் ஒத்துழைக்கக்கூடிய வர்களை மட்டும் காபினெட்டில் இதர மந்திரிகளாகச் செய்து கொண்டார். அரசர் காபினெட் சபையில் அக்ராசனம் வகிப்பதை விட்டுவிட்டதால் வால்போல்தான் காபினெட் சபைக்கும் தலைவராயிருந்து அதிகாரம் செலுத்திவந்தார்.

வால்போல் பார்லிமெண்டின் அங்கத்தினர்களில் அநேகர் தமக்குச் சாதகமாய் இருக்கும்பொருட்டு அவர்களுக்குப் பணத்தையும் பதவியையும் அளித்தார். மேலும், அவர் இலஞ்சம் (இலக்ஷன்) நடைபெறும் விஷயத்தில் மிகத் தேர்ச்சியுள்ளவரானதால் தமக்கு இஷ்டப்பட்டவர்களையே பார்லிமெண்டின் அங்கத்தினராக்க எந்த வழியையும் பின்பற்றிவந்தார். இவ்வித உபாயங்களினால் அவர் பார்லிமெண்டைத் தம்முடைய அதிகாரத்துக்கு உட்படுத்திக்கொண்டார். அவர் பொது ஜன நன்மைக்காக உணவுப் பொருள்களின்மீது விதிக்கப்பட்டிருந்த வரிகளைக் குறைத்தார்; நாட்டில் அமைதியை நிலை நிறுத்தியும், ஏற்றுமதி இறக்குமதி வரிகளைக் குறைத்தும் வியாபாரத்தை விருத்தி செய்தார். தேசியக் கடனைத் தீர்ப்பதற்காக ஒரு நிதியை (Sinking Fund) ஏற்படுத்தினார். வால்போலுக்குப் புதிய சட்டங்களையும் பெரிய திட்டங்களையும் செய்வதில் பிரியமில்லை.

வால்போல் கி. பி. 1733ல் அயல்நாடுகளிலிருந்து தருவிக்கப்படும் சாராயம் புகையிலை இவைகளின்மீது, வழக்கம் போல துறைமுகங்களில் இறக்குமதி வரி வசூலிப்பதற்குப் பதிலாக, உள்நாட்டிலேயே கடைகளில் வரி வசூலித்து விடலாம் என்ற மசோதாவைப் பொதுஜன சபையில் கொண்டு வந்தார். அச் சபை அவரது ஏற்பாட்டை அங்கீகரிக்கவில்லை.

வால்போல் அச் சபையின் அபிப்பிராயத்துக்கு விரோதமாய் நடக்க இஷ்டப்படவில்லை. ஆகையால் அம் மசோதா சட்டமாகவில்லை.

வால்போலின் அயல் நாட்டுத் தந்திரம்:—அமைதியே வால்போலுடைய முக்கிய நோக்கம். ஆகையால், அவர் ஐரோப்பியப் போர்களில் தலையிடுவதில்லை. அவர் ஒரு சமயத்தில் 'பதினாயிரம் போர்வீரர்கள் இச் சண்டையில் மடிந்திருக்கிறார்கள் என்றாலும் அவர்களுள் ஒரு ஆங்கிலேயர்கூட இல்லை' என்று வெகு கர்வத்துடன் கூறினாராம். ஜெங்கின்ஸ் (Jenkins) என்ற ஓர் ஆங்கில வியாபாரி ஸ்பானிஷ் அமெரிக்காவுடன் திருட்டுத்தனமாய் வியாபாரம் செய்ததற்கு ஸ்பெயின் தேசத்தவர்கள் அவருடைய காதுகளை அறுத்துவிட்டார்கள். இந்த அவமானச் சங்கதியைக் கேட்டு பார்லிமெண்ட் சபை கோபமடைந்து, வால்போலை ஸ்பெயின் நாட்டாருடன் போர் புரிய வேண்டுமென்று கி. பி. 1739-ல் நிர்ப்பந்தம் செய்தது. வால்போலுக்கு அதில் இஷ்டமில்லாததால், அவர் அப் போரை அதிகச் சிரத்தையோடு நடத்தவில்லை. இதை யறிந்த பார்லிமெண்ட் அவரைப் பிரதான மந்திரிப் பதவியிலிருந்து கி. பி. 1742-ல் விலகிக் கொள்ளும்படி செய்தது.

ஆஸ்டிரியா வார்ஸ்ப் போர் (கி. பி. 1740—1748):—வால்போல் மந்திரிப் பதவியை இழப்பதற்கு முன்னமே ஐரோப்பாவில் ஒரு பெரிய யுத்தம் தொடங்க இருந்தது. ஆறாவது சார்ல்ஸ் என்ற ஜர்மனிச் சக்கரவர்த்தி பிள்ளையின்றி இறந்தார். அவர் இறப்பதற்கு முன்னமேயே 'தமது ஒரே புதல்வியாகிய மேரியா தரிஸா (Maria Theresa) என்பவளே தமக்குப்பின் அரசியாக்கப்படவேண்டும்' என்று ஏற்பாடு

செய்திருந்தார். அவர் காலஞ்சென்றபின், மேரியா தரிஸா அவரது இஷ்டப்படியே ஆஸ்டிரியாவின் அரசியானாள். இந்த ஏற்பாட்டுக்குச் சம்மதித்திருந்த பிரஷியா மன்னரான பிரெடரிக் ஆஸ்டிரியாவுக்குள் அடங்கிய ஸைலீஷ்யா (Silesia) வை அக்கிரமமாகக் கைப்பற்றிக் கொண்டனர். ஸ்பெயினும் பிரான்ஸும் பிரஷியாவின் கட்சியில் சேர்ந்துகொண்டன. ஆகையால் இங்கிலாந்து மேரியா தரிஸாவின் கட்சியில் சேர்ந்துகொண்டது. ஜார்ஜ் தாமே ஒரு சைன்யத்தை ஜர்மனிக்குள் நடத்திச் சென்று டெட்டிஞ்சன் (Dettingen) என்றவிடத்தில் கி. பி. 1743-ல் போர் புரிந்தார். இச் சண்டையில் அவர் வெற்றி யடைந்தார். ஆங்கில வேந்தர் போர்க்களத்தில் நின்று செய்த சண்டைகளில் இதுதான் கடைசிச் சண்டை. மேலும், பாண்டினாய் (Fontenoy) என்றவிடத்தில் கி. பி. 1745-ல் நடந்த சண்டையில் ஜார்ஜின் இரண்டாவது புதல்வரான கம்பர்லாந்து கோமகனார் (Duke of Cumberland) பிரெஞ்சுக்காரர்களால் தோற்கடிக்கப்பட்டார். இதற்குப் பிறகு ஒரு பெரிய சண்டையும் நடக்கவில்லை. ஏகன் (Aachen) என்னுமிடத்தில் கி. பி. 1748-ல் சமாதானம் ஏற்பட்டது. அதன்படி ஸைலீஷ்யாவைப் பிரஷியா வைத்துக் கொள்வதென்றும் மேரியா தரிஸா ஆஸ்டிரியாவின் அரசியார் என்று அங்கீகரிக்கப்பட வேண்டுமென்றும் ஏற்பாடாயின.

'நாற்பத்தைந்து'' என்னும் கிளர்ச்சி (கி. பி. 1745):—ஆஸ்டிரியா வார்ஸ்ப் போர் நடக்கும்பொழுது ஜேம்ஸ் எட்வர்டின் புதல்வரான சார்ல்ஸ் எட்வர்ட் (Charles Edward) என்பவரை ஆங்கில வேந்தராக்க கி. பி. 1745-ல் ஒரு கிளர்ச்சி உண்டாகியது. இக்கிளர்ச்சி 'நாற்பத்தைந்து' என்று முடிகிற ஆண்டிலே தோன்றியதால் இதற்கு நாற்பத்தைந்து (Forty-five) என்ற பெயர் வந்தது. சார்ல்ஸ் எட்வர்ட் பிரெஞ்சுக்

காரர்களின் தூண்டுதலினால் சில தோழர்களுடன் ஸ்காட்லாந்தின் வடபாகத்தில் வந்திறங்கினார். ஹைலாந்தியர்கள் அவருடைய கட்சியில் சேர்ந்துகொண்டார்கள். அவர் ஒரு ஹைலாந்தியச் சேனையுடன் பிரெஸ்டன்பான்ஸ் (Preston-pans) என்ற விடத்தில் ஜார்ஜின் சேனையைத் தோற்கடித்தார்.




பிறகு அவர் ஆங்கில ஜாகோபைட்கள் தமது கட்சியில் சேர்ந்து கொள்வார்கள் என்று எண்ணி இங்கிலாந்தின்மேல் படையெடுத்தார். டர்பி (Derby) நகர் வரைக்கும் வந்த

வுடன், அவர் ஆங்கில ஜாகோபைட்கள் தமக்கு உதவி புரியாததைக் கண்டு அதைரியமடைந்து திரும்பலானர்.

இதற்குப் பிறகு கம்பர்லாந்து கோமகனுர் ஒரு சேனையுடன் சென்று, சார்ல்ஸை கல்லடன் மூர் (Culloden Moor) என்றவிடத்தில் கி.பி. 1746ல் தோற்கடித்தார். பிறகு சார்ல்ஸ் எட்வர்ட் அநேக கஷ்டங்களினின்று தப்பி பிரான்ஸுக்கு ஓடிப்போய்விட்டார். கம்பர்லாந்து கோமகனுர் இக்கிளர்ச்சியில் சம்பந்தப்பட்டவர்கள் எல்லாரையும் கொடுமையாக நடத்தினதால், ஹைலாந்தியர்கள் அவரைக் கசாப்புக்கடைக்காரர் (Butcher) என்று இழிவாக அழைத்தனர். இக்கிளர்ச்சிக்குப் பிறகு ஸ்டுவர்ட் மன்னர்களின் சார்பாக வேறு கிளர்ச்சிகள் பிரிட்டித் தீவுகளில் தோன்றவில்லை.

வில்லியம் பிட்:—வால்போல் முதன் மந்திரியாய் இருக்கையில் வில்லியம் பிட் (William Pitt) என்ற ஒரு தேசாபிமானி எதிர்க் கட்சியில் இருந்தார். பிறகு பெல்ஹாம் சகோதரர்கள் (Henry Pelham and Thomas Pelham) முக்கிய மந்திரிகளானவுடன் வால்போல் அவர்களின்கீழ் ஒரு பதவியை அடைந்தார். அவர் பிறருடைய மனதைக் கவரும்படியாகப் பேசும் திறமை வாய்ந்தவர். அவர் வெகு பரிசுத்தமுள்ள மனதும், மேலான தன்மையும் உடையவர். அவர் பொது ஜனங்களுக்காக உழைப்பவராதலால் ஜனங்களுக்கு அவரிடத்தில் அதிக அன்பு ஏற்பட்டது. ஆனல் பார்லிமெண்டில் அவருக்கு அதிகச் செல்வாக்கு கிடையாது. அவர் கி. பி. 1754-ல் தாமஸ் பெல்ஹாம் என்பவருடன் சண்டையிட்டுக்கொண்டு ராஜீயக் கட்சியை விட்டு விலகி, எதிர்க் கட்சியில் மூன்று வருஷகாலம் இருந்து, முதன் மந்திரியின் அநீதியான முறைகளைக் கண்டித்தார். பிறகு கி. பி. 1757-ல் பிட் என்ப

வரும் தாமஸ் பெல்ஹாம் என்பவரும் மந்திரிகளா யிருப்பது என்றும் பெல்ஹாம் ராஜீயக் காரியங்களைக் கவனிப்பது என்றும் பிட் யுத்த இலாகா மந்திரியா யிருந்து போரை நடத்துவது என்றும் ஏற்பாடு செய்துகொள்ளப்பட்டது.

ஏழு வருஷப் போரின் காரணங்கள்:—ஸ்டூவர்ட் அரசர்களின் காலத்தில் ஆங்கிலேயர்கள் தங்களிஷ்டப்படி தெய்வ ஆராதனை செய்ய எண்ணி அமெரிக்காவுக்குச் சென்று குடியேறினார்கள் என்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. பதினெட்டாவது நூற்றாண்டின் மத்தியில் வட அமெரிக்காவின் கீழ்க்கடற்கரைப் பக்கத்தில் ஆங்கிலேயர்களுக்குப் பதின்மூன்று நாடுகள் * இருந்தன. ஆங்கிலேயர்கள் குடியேறின பாகத்திற்குத் தெற்கில் ஸ்பெயின் நாட்டினரும், மேற்கிலும் வடமேற்கிலும் பிரெஞ்சுக்காரர்களும் குடியேறி இருந்தார்கள். ப்ளாரிடா (Florida) என்ற ஒரு சிறிய தீபகற்பம் ஸ்பெயின் நாட்டினருக்குச் சொந்தமாய் இருந்தது. மிஸிஸிபி என்ற நதி பாயும் சமவெளியில் லூஷியானா (Louisiana) என்ற ராஜ்யமும், ஸெண்ட் லாரன்ஸ் நதியின் முகத்துவாரத்தின் அருகில் கனடா (Canada) என்ற ராஜ்யமும் பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமாய் இருந்தன. பிரெஞ்சுக்காரர்கள் குடியேறின நாடுகளுக்கும் ஆங்கிலேயர்கள் குடியேறின நாடுகளுக்கும் இடையே அலிகனி மலைத் தொடர் இயற்கை எல்லையாயிருந்தது. பிரெஞ்சுக்காரர்கள் தங்களுடைய இரண்டு ராஜ்யங்களையும் சேர்த்துவிட எண்ணி,

* 1. ஜார்ஜியா, 2. தென் கரோலினா, 3. வட கரோலினா, 4. வர்ஜீனியா, 5. மேரிலந்து, 6. பென்ஸில்வேனியா, 7. நியூயார்க், 8. நியூ ஹாம்ஷயர், 9. மெய்ன், 10. மாஸச்சூஸட்ஸ், 11. ரோட் தீவு, 12. கனெக்டிகட், 13. நியூ ஜர்ஸி.

அம்மலைத் தொடருக்கு அருகில் சில கோட்டைகளைக் கட்டி-
னார்கள். இதனால் ஆங்கிலேயர்கள் உள்நாட்டில் பரவமுடியா



மற்போனதோடும் கூட அலிகனி மலைக்கும் அட்லாண்டிக் மகா சமுத்திரத்திற்கும் இடையிலே அடைபட்டவர்கள் போலவும் ஆயினர். ஆகையால்தான் பிரெஞ்சுக்காரர்கள் டூகேயின் (Duquesne) கோட்டையைக் கட்ட ஆரம்பித்த வுடன் ஆங்கிலேயர்கள் அதைத் தடுத்துவிட்டார்கள்.

இச் சமயத்தில் பிரெஞ்சுக்காரர்கள் இந்தியச் சிற்றரசர் களுடன் சேர்ந்துகொண்டு ஆங்கிலேயரை இந்தியாவிலிருந்து துரத்திவிட முயற்சிகள் செய்தார்கள். மேலும், ஐரோப்பா வில் மேரியா தரிஸா தம்மிடமிருந்து ஆங்கிலேயர்கள் ஸைலீஷியாவைப் பிடுங்கி பிரஷியர்களுக்குக் கொடுத்து விட்டார்கள் என்று கோபமடைந்து பிரெஞ்சுக்காரர்களுடன் சேர்ந்துகொண்டாள்.

ஏழு வருஷப் போர் (கி. பி. 1756–1763):—மேற்கூறிய காரணங்களால் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் ஒரு பெரிய யுத்தம் கி. பி. 1756-ல் ஆரம்பித்தது. அஃது ஏழு வருஷகாலம் நடந்ததால் அதற்கு ஏழு வருஷப் போர் (Seven Years' War) என்று பெயர். அந்தப் போரில் இங்கிலாந்தும் பிரஷியாவும் ஒரு கட்சி; பிரான்ஸும் ஆஸ்டிரி யாவும் மற்றொரு கட்சி. ஆரம்பத்தில் ஆங்கிலேயரின் கட்சி எல்லாவிடங்களிலும் தோல்வியடைந்தது. மத்திய தரைக் கடலில் உள்ள மைனார்க்கா தீவைப் பாதுகாக்க பிங் (Byng) என்னும் ஆங்கில அட்மிரல் அனுப்பப்பட்டார். அவர் பிரெஞ்சுக்காரர்களிடம் பயந்துகொண்டு போர் புரியாமல் ஓடி விட்டார். அதனால் ஆங்கில ராஜாங்கத்தார் அவரைச் சுட்டு விடும்படி உத்தரவிட்டனர்.

பிறகு ஆங்கிலேயர்கள் பிட் என்பவரை ராணுவ இலாகா மந்திரியாகச் செய்தார்கள். வில்லியம் பிட் யுத்தம் நடத்த

ஆரம்பித்ததுமுதல் ஆங்கிலேயருக்கு அநேக வெற்றிகள் ஏற்பட்டன. அவர் வீரத்தன்மை வாய்ந்த போர்வீரர்களைக் கப்பற்படைத் தலைவர்களாகவும் சேனைத் தலைவர்களாகவும் செய்தார். பிட் நியமனம் செய்த போர்வீரர்களில் உல்ப் (Wolfe) என்பவர் ஒருவர். மேலும், பிட் பிரஷியா வேந்தரான பிரெஞ்சுக்காரருடன் போர் புரியும்படி செய்தார். பிரெஞ்சுக்காரர்கள் ஹனோவர் நாட்டின்மேல் படையெடுக்க வருகையில், பிரெடெரிக் கி.பி. 1759-ல் மிண்டன் (Minden) என்னுமிடத்தில் பிரெஞ்சுப் படையைத் தோற்கடித்தார். இதற்கு முன்னேயே ராபர்ட் கிளைவ் இந்தியாவில் பிரெஞ்சுக்காரர்களின் முக்கிய நண்பராயிருந்த நவாபை பிளாஸி (Plassey) என்னும் கிராமத்துக்கு அருகில் கி. பி. 1757-ல் தோற்கடித்தார். இவ் வெற்றியின் செய்தி கனடாவிலும் ஐரோப்பாவிலும் போர் செய்த ஆங்கில வீரர்களுக்கு உற்சாகத்தையும் தைரியத்தையும் உண்டுபண்ணியது. கனடாவிற்கு அனுப்பப்பட்ட உல்ப், க்யூபெக் (Quebec) என்னும் கனடாவின் தலைநகரைச் சிரமப்பட்டு முற்றுகை செய்து பிடித்தார். ஆனால் அவர் போர்க்களத்திலேயே ஒரு குண்டுக்கு இரையானார். குயூபரான் விரிகுடாவிலும் லாகாஸ் தீவிற்கு அருகிலும் நடந்த கடற் சண்டையில் இங்கிலீஷ்க் கப்பற்படை வெற்றி அடைந்தது. அதனால் இங்கிலாந்திற்கு கடலாதிக்கம் ஏற்பட்டவுடன் பிரெஞ்சுக்காரர்கள் சைன்யத்தை அமெரிக்காவிலும் இந்தியாவிலும் நடந்த யுத்தங்களுக்கு அனுப்பக் கூடவில்லை. இவ்வாறு ஏழாண்டுப் போரில் ஆங்கிலேயர்களுக்கு வெற்றிகள் கிடைத்துவரும் நிலைமையில், இரண்டாவது ஜார்ஜ் கி. பி. 1760-ல் மரணமடைந்தார்.

கேள்விகள்:—

1. வால்போலின் குணாதிசயங்களைப்பற்றியும் அவர் பார்லிமெண்டை எப்படி தமது அதிகாரத்துக்கு உட்படுத்தினார் என்பதைப்பற்றியும் சுருக்கமாய் எழுதுக.
2. பொது நன்மையைக் கருதி வால்போல் செய்த சீர்திருத்தங்கள் யாவை?
3. வால்போல் எக்காரணங்களினால் பிரதான மந்திரிப் பதவியை இழந்தார்?
4. ஆஸ்டிரியா வார்ஸ்ப்போரின் காரணங்கள் யாவை? அதில் நிகழ்ந்த முக்கிய சண்டைகள் யாவை? அஃது எவ்வாறு முடிந்தது?
5. "நாற்பத்தைந்து" என்ற கிளர்ச்சியைப்பற்றிச் சுருக்கமாய் எழுதுக.
6. வில்லியம் பிட் என்பவரைப்பற்றித் தெரிந்த வரையில் எழுதுக.
7. வட அமெரிக்காவில் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் எக்காரணத்தினால் மனஸ்தாபம் ஏற்பட்டது?
8. ஏழு வருஷப்போரில் நிகழ்ந்த சண்டைகள் யாவை?

---

## அத்தியாயம் 3.

### மூன்றாவது ஜார்ஜ் (கி. பி. 1760—1820)

---

### பாகம் 1. பாரிஸ் சமாதானமும் அமெரிக்கன் சுதந்தரப் போரும். (கி. பி. 1760—1783)

ஜார்ஜின் குணாதிசயங்களும் விக் கட்சியின் வீழ்ச்சியும்:- இரண்டாவது ஜார்ஜ் இறந்தவுடன் அவருடைய பேரனை ஜார்ஜ் பட்டத்துக்கு வந்தார். அப்பொழுது அவருக்கு வயது இருபத்தொன்று. அவருக்குப் பிடிவாதமும், சுயேச்சையும்

அதிகம். அவர் அரசர்க்குரிய சர்வ அதிகாரங்களையும் வகிக்க வேண்டுமென்று விரும்பினர். அவருடைய தாயார் அவருக்குப் பல தடவைகளில் "குழந்தாய், நீ உன்னுடைய முன்னோர்களைப்போல் பேருக்கு மட்டும் மன்னராயிராமல் உண்மையாய்ச் சர்வ அதிகாரங்களையும் பெற்ற அரசனாய் இரு" என்று அடிக்கடி சொல்லிவந்தாள். ஆனது பற்றி அவர் சுமார் ஐம்பது வருஷகாலமாய் அதிகாரம் வகித்துவந்த விக் கட்சியினரைத் தொலைக்க எண்ணினர். வெகு காலம் அதிகாரத்தில் இருந்துவந்த விக் கட்சியார்கள் அரசரின் அபிப்பிராயத்தை ஒத்து துரைத்தனத்தை நடத்துவதற்கு இஷ்டப்படவில்லை. தவிர, மூன்றாவது ஜார்ஜ் கட்சித் துரைத்தனம் தேச நன்மைக்கு ஏற்றது அல்லவென்று நினைத்தார். அவர் தமது இஷ்டப்பிரகாரம் துரைத்தனம் நடத்த உத்தேசித்து, டோரிக் கட்சியார்களின் உதவியைக் கொண்டு பிட் என்பவரை கி. பி. 1761-ல் உத்தியோகத்தை ராஜினாமா செய்யும்படி செய்தார். ஆனால் அவருக்கு டோரிக் கட்சித் தலைவர்களைத் தம் மந்திரிகளாக நியமித்துக்கொள்ளவேண்டும் என்ற எண்ணம் கிடையாது. தம்முடைய இஷ்டப்படி மந்திரிகளை நியமித்துக்கொண்டு இங்கிலாந்தின் அரசியலை சர்வதிகாரத்துடன் நடத்தவேண்டும் என்பது ஜார்ஜின் அபிப்பிராயம்.

விக் கட்சியின் பலம் குன்றியதற்கு வேறு சில காரணங்களும் உண்டு. விக் கட்சியில் வால்போலைப்போல அதிகத் திறமை வாய்ந்த தலைவர்கள் இல்லை. மேலும், அக் கட்சியார்களுக்குள் பல மனஸ்தாபங்கள் ஏற்பட்டதால் அக்கட்சி சிறு கூட்டங்களாகப் பிரிந்துபோயிற்று. மேற்கூறிய காரணங்களால் கி. பி. 1763-ல் விக் கட்சியின் அதிகாரம் இங்கிலாந்தின் அரசியலில் அழிந்துபோயிற்று. அதன் பிறகு

மூன்ருவது ஜார்ஜின் ஆட்சிக்காலத்தில் விக் கட்சியார்கள் அரசியலில் அதிகாரம் பெற முடியவில்லை. இவ்வாறு 'விக்' கட்சியின் ஆட்சி முடிவடைந்தது.

பாரிஸ் சமாதானம் (கி. பி. 1763):—ஜார்ஜ் பாரிஸ் நகரில் பிரெஞ்சுக்காரர்களுடன் ஒரு உடன்படிக்கையை அவசரமாகச் செய்து ஏழாண்டுப் போரை முடிவுக்குக் கொண்டுவந்தார். அதன்படி பிரெஞ்சுக்காரர் இங்கிலாந்திற்குக் கனடாவையும் கேப் பிரிட்டன் தீவையும் கொடுத்துவிடுவது என்று ஏற்பட்டது. ஆனல் நியூபவுண்ட்லந்துத் தீவை யடுத்துள்ள கடலில் மீன் பிடிக்கும் உரிமையைப் பிரான்ஸ் வைத்துக்கொள்வதற்கு இங்கிலாந்து சம்மதித்தது. வட அமெரிக்காவில் பிரிட்டிஷ்காரர்கள் குடியேறின பிரதேசத்திற்கும் லூஷியானவிற்கும் மிஸிஸிபி நதி எல்லையென ஒரு ஏற்பாடும் செய்து கொள்ளப்பட்டது. மேலும், பிரான்ஸ் மைனர்க்கா தீவை இங்கிலாந்திற்குக் கொடுத்தது; ஆனல் போரில் ஜயிக்கப்பட்ட புதுச்சேரி முதலான சில பட்டணங்கள் பிரெஞ்சுக்காரர்களுக்குத் திரும்பவும் கொடுக்கப்பட்டன. ஸ்பெயின் இச்சமாதானத்தின்படி பிளாரிடா தீபகற்பத்தை இங்கிலாந்திற்குக் கொடுத்தது. ஆனல் இங்கிலாந்து அதற்குப் பதிலாக ஹாவன்ன, மானில்லா இரண்டையும் ஸ்பெயினுக்குத் திருப்பிக்கொடுத்துவிட்டது. இச்சமாதானத்தில் ஆங்கிலேயர்கள் எதிர்பார்த்தபடி அதிகப் பயனை இங்கிலாந்து அடையக் கூடவில்லை. அவசரப்பட்டுச் சமாதானம் செய்துகொள்ளாமலிருந்தால் இங்கிலாந்து இன்னும் அதிக லாபங்களை அடைந்திருக்கலாம்.

அமெரிக்கன் சுவாதீனப் போரின் காரணங்கள்:—ஏழு வருஷப் போர் முடிந்து சுமார் பத்து வருடங்களுக்குப் பின்,

அமெரிக்காவில் குடியேறின ஆங்கிலேயருக்கும், தாய் நாட்டில் உள்ளவர்களுக்கும் ஒரு பெரிய போர் ஏற்பட்டது. அதற்கு அமெரிக்கன் சுவாதீனப் போர் என்று பெயர். ஏழு வருஷ யுத்தம் நடக்கும்பொழுது அமெரிக்காவில் குடியேறின ஆங்கிலேயர்கள் தங்களது தாய் நாட்டாருக்கு உதவி செய்தார்கள். அப் போர் முடிந்ததும், அதனால் ஆங்கிலேயருக்கு ஏற்பட்ட பொருட்செலவின் ஒரு பாகத்தை அமெரிக்கர்கள் கொடுக்கவேண்டுமென்று இங்கிலீஷ் அரசாங்கத்தார் கேட்டனர். அக்காலத்தில் முதன் மந்திரியாயிருந்த க்ரேன்வில் (Grenville) அமெரிக்கர்களிடமிருந்து பொருளுதவி பெற வரி விதித்தலே சிறந்த வழியென்று நினைத்து, முத்திரக் காகிதச் சட்ட (Stamp Act)த்தைப் பிறப்பித்தார். அதன்படி அமெரிக்கர்கள் கொடுக்கல், வாங்கல் விஷயங்களில் முத்திரைக் காகிதங்களை உபயோகப்படுத்த வேண்டும் என்பது விதிக்கப்பட்டது. முத்திரைக் காகிதங்களின் விற்பனையினால் வசூலாகும் பணம் இங்கிலாந்தைச் சேர்ந்தது. ஆனதுபற்றி அமெரிக்கர்கள் தங்களுடைய பிரதிநிதிகள் இல்லாத ஆங்கிலப் பார்லிமெண்டுக்குத் தங்கள் மீது வரி போட அதிகாரமில்லை என்று சொல்லி, முத்திரைக் காகித வரியைக் கொடுக்க மறுத்தார்கள். அவர்கள் 'பிரதிநிதிகள் இல்லையேல் வரியும் இல்லை' (No Taxation, no representation) என்று சொன்னார்கள். ஆகையால் ஆங்கிலேயர்கள் முத்திரைக் காகிதச் சட்டத்தை ரத்து செய்துவிட்டு, தேயிலை, காகிதம் முதலிய சாமான்களின்மீது மட்டும் இறக்குமதி வரி விதித்து வசூலித்துக் கொள்வது என்று ஏற்பாடு செய்தார்கள். அமெரிக்கர்கள் இவ்வரிகளையும் கொடுக்க மறுத்ததைக் கண்டு, இங்கிலீஷ் பார்லிமெண்ட் தேயிலை வரியைத் தவிர மற்ற எல்லா வரிகளையும் நீக்கிவிட்டது. ஆயினும், அமெரிக்கர்கள் தேயிலை வரியையும் கொடுக்க மறுத்தார்கள்.

இந்த நிலைமையில் போஸ்டன் (Boston) துறைமுகத்தில் சில இங்கிலீஷ்க் கப்பல்கள் தேயிலைப் பெட்டிகளை கி. பி. 1773-ல் ஏற்றி வந்து நின்றன. அப்போது அந்த நகரவாசிகள் அமெரிக்காவின் ஆதிக் குடிகளைப்*போல மாறுவேஷம்பூண்டு ஆங்கிலக் கப்பல்களில் ஏறித் தேயிலைப் பெட்டிகளையெல்லாம் எடுத்துக் கடலில் எறிந்துவிட்டார்கள். இந்த அடாத செய்கையைக் கேட்ட ஆங்கிலப் பார்லிமென்ட் கோபமடைந்து அமெரிக்கர்கள்மீது போர் புரியவேண்டுமெனத் தீர்மானம் செய்தது.

அமெரிக்கன் ஸ்வாதீனப் போர் வரலாறு (கி. பி. 1774—1783):—இதற்குப் பிறகு ஆங்கிலேயர்கள் குடியேறின பதின்மூன்று நாடுகளும் பிலடேல்பியா (Philadelphia) என்ற நகரில் ஒன்றாகச் சேர்ந்து ஒரு மகாசபை (Congress) யைக் கூட்டிற்று. அச் சபை 'இந்த நாடுகள் ஆங்கில வேந்தராகிய ஜார்ஜின் ஆட்சியிலிருந்து விலகிச் சுதந்தரம் அடைந்தவை' என்ற ஓர் அறிக்கையை வெளியிட்டது. இதற்குச் சுவாதீன அறிக்கை (Declaration of Independence) என்று பெயர். பிறகு அமெரிக்கர்கள் பல துருப்புக்களைச் சேகரித்து ஜார்ஜ் வாஷிங்டன் (George Washington) என்ற ஒரு சிறந்த போர் வீரரைத் தங்களுடைய சேனைத் தலைவராகச் செய்து கொண்டார்கள். பர்காயன் (Burgoyne) தளகர்த்தரின்கீழ் வைக்கப்பட்ட ஒரு ஆங்கிலச் சைன்யம் அமெரிக்கர்களால் ஸரடோகா (Saratoga) என்னுமிடத்தில் தோற்கடிப்பட்டு, ஓடவழியின்றி அவர்களிடம் சரணம் அடைந்தது. ஆங்கிலேயர்கள் இச் செய்தியைக் கேட்டதும் திகிலடைந்தனர்.

---

* அமெரிக்காவின் ஆதிக் குடிகளுக்கு 'ரெட் இந்தியர்கள்' (Red Indians) என்று பெயர்.

இதற்குப் பிறகு பிரான்ஸும், ஸ்பெயினும் ஏழு வருஷ யுத்தத்தில் தாம் இழந்த நாடுகளை மீட்டுக்கொள்ள நினைத்து




அமெரிக்கர்களின் கட்சியிற் சேர்ந்துகொண்டன. இக் காரணத்தினால் அக்காலத்தில் பிரதான மந்திரியாயிருந்த நார்த்

பிரபு (Lord North) அமெரிக்கர்களோடு சமாதானம் செய்துகொள்ள விரும்பினார். வில்லியம் பிட்* மரணத் தருவாயில் இருந்தபோதிலும், தட்டுத்தடுமாறி பார்லிமென்ட் மண்டபத்திற்குச் சென்று, "நீடித்த காலமாய் நம்முடைய முக்கிய விரோதிகளான பிரெஞ்சுக்காரருடன் நாம் சிநேகம் செய்துகொள்வதா? நாம் அமெரிக்கர்களை முழுச் சுவாதீனம் அடையவிடுவதா?" என்று யாவரும் அவர் பேசுவதை அங்கீகரிக்கும்படி மிகத் தெளிவாக உரத்துப் பேசினார். ஆகையால் பார்லிமென்ட் அமெரிக்கர்களுடன் சமாதானம் செய்துகொள்ளச் சம்மதிக்கவில்லை. பிறகு ஹாலந்து தேசம் அமெரிக்கர்களின் கட்சியில் சேர்ந்துகொண்டது. ஆகவே, ஆங்கிலேயர்கள் அமெரிக்கர்களுடனும், ஸ்பெயின், பிரான்ஸ், ஹாலந்து தேசத்தவர்களுடனும் போர் புரியலானார்கள். இச் சமயம் ஆங்கிலேயர்கள் மிக ஆபத்தான நிலைமையில் இருந்தனர்.

ஆங்கில அட்மிரலான ராட்னி (Rodney) மேற்கு இந்தியத் தீவுகளின் அருகில் பிரெஞ்சுக்காரர்களைத் தோற்கடித்தார். ஸ்பெயின் நாட்டினர்கள் ஜிப்ரால்டர் கோட்டையை முற்றுகை செய்து ஆங்கிலேயரிடமிருந்து பிடுங்கிக்கொள்ள முயன்றார்கள். ஆனால் ஆங்கிலத் தலைவரான எலியட் (Elliot) அக்கோட்டையை வெகு தைரியத்தோடு காத்து, விரோதிகளைத் தோற்கடித்துத் துரத்தினார். பிறகு அமெரிக்காவில் யார்க்டவுன் (Yorktown) என்னுமிடத்தில் கார்ன்வாலிஸ் என்ற ஒரு ஆங்கில தளகர்த்தரின் கீழிருந்த ஒரு சைன்யம் அமெரிக்கர்களிடம் தஞ்சம் அடைந்தது.

* இவர் 'சாதம் பிரபு' (Earl of Chatham) என்ற பட்டம் பெற்றிருந்தார்.

இதற்குப் பிறகு கி. பி. 1783-ல் ஆங்கிலேயர்கள் வேர்ஸேயில்ஸ் (Versailles) என்னுமிடத்தில் கார்ன்வாலிஸ் அமெரிக்கர்களுடன் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டார்கள். அதன்படி, அவர்கள் ஆங்கிலேயர்கள் குடியேறின நாடுகளின் சுவாதீனத்தை ஒப்புக்கொண்டார்கள். இவை அமெரிக்கன் ஐக்கிய நாடுகள் (The United States of America) என இக்காலத்தில் அழைக்கப்படுகின்றன. மேலும், ஆங்கிலேயர்கள் அலிகனி மலைத்தொடருக்கு மேற்கேயுள்ள பிரதேசத்தில் தங்களுக்குள்ள பாத்தியத்தைக் கொடுத்துவிட்டார்கள். ஆகையால் அப்பிரதேசம் குடியேற்ற நாடுகளின் ஆதீனத்தின்கீழ் வந்துவிட்டன. ஸ்பெயின் தேசத்தவர்களுக்கு மைனார்க்கா தீவும் பிளாரிடா தீபகற்பமும் ஆங்கிலேயர்களால் கொடுக்கப்பட்டன. பிரெஞ்சுக்காரர்களும் டொபாகோ, செனகல் முதலான நாடுகளை அடைந்தார்கள்.

கேள்விகள்:—

1. பாரிஸ் சமாதானத்தால் ஆங்கிலேயர்கள் அடைந்த லாபம் யாது?

2. அமெரிக்கன் ஸ்வாதீனப்போர் எக்காரணத்தால் ஏற்பட்டது? அப்போரில் ஏற்பட்ட முக்கிய நிகழ்ச்சிகள் யாவை? அது எவ்வாறு முடிவடைந்தது?

---

## பாகம் 2. பிரெஞ்சுப் புரட்சி (கி. பி. 1784—1815).

இளைய பிட் முதன் மந்திரியாதல்:—அமெரிக்கன் சுவாதீனப் போர் முடிந்த வருஷத்திலேயே (கி. பி. 1783) ஜார்ஜ் டோரிக் கட்சியைச் சேர்ந்தவரும் சாதம் பிரபுவின் இளைய புதல்வருமான வில்லியம் பிட் என்பவரைத் தமது பிரதான மந்திரியாகச் செய்துகொண்டார். அப்பொழுது அவருக்கு

இருபத்து ஐந்து வயதுதான். ஆகிலும், அவர் பேசும் திறமை வாய்ந்தவராதலால் பார்லிமெண்டில் மிகச் செல்வாக்கு உள்ளவரானார். அரசர் தமது மந்திரிகளை இஷ்டம்போல



சிறிய பிட்

நியமனம் செய்துகொள்ள வேண்டும் என்பது அவரது எண்ணம். பொது ஜனங்களுக்கும் ஜார்ஜுக்கும் அவரிடத்தில் விசுவாசமும் நம்பிக்கையும் உண்டு. அவர் பண விஷயங்களில் கருத்தும் ராஜீய விஷயங்களில் விசாலமான நோக்கமும் உள்ளவர். அவர் தேசத்தின் முன்னேற்றத்தைக் கருதி பல காரியங்களைச் செய்தார். அவர் பார்லிமெண்ட் மகா சபைக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் முறையிலும் சில சீர்திருத்தங்களைச் செய்ய முயன்றார். மேலும், ஆங்கில வியாபாரத்தைப் பெருக்க அவர் பிரான்ஸுடன் ஒரு வர்த்தக உடன்படிக்கை செய்துகொண்டார். நாட்டில் கி. பி. 1793 வரையில் அமைதி நிலவி இருந்ததால், வியாபாரம் விருத்தி

யாயிற்று. ஆனதுபற்றி ஆங்கிலேயரின் பொருள்நிலை மேன் மேலும் ஓங்கியது. இவைகளுக்கெல்லாம் வில்லியம் பிட்டின் முயற்சிதான் காரணம்.

பிரான்ஸில் நிகழ்ந்த ஒரு பெரும் கலகம் :—பிட் இங்கிலாந்தில் பிரதான மந்திரியாயிருக்கையில் பிரான்ஸில் ஒரு பெரும் கலகம் ஏற்பட்டது. பதினைந்காவது லூயியின் காலம் முதற்கொண்டு பிரெஞ்சுக்காரர்கள் கொடுங்கோன்மையால் இம்சை அடைந்துவந்தார்கள். பிரபுக்களும் குருமார்களும் பொது ஜனங்களைக் கஷ்டப்படுத்தி வந்தார்கள். ஏழை மக்கள் ராஜாங்கத்திற்கு அதிக வரிகளைக் கொடுத்து வந்தார்கள். பணக்காரர்கள் சொற்ப வரியையே ராஜாங்கத்திற்குச் செலுத்திவந்தார்கள்; ஆயினும் சர்வ அதிகாரங்களையும் அவர்களே வகித்தார்கள். இக்காரணங்களால் சாமானிய மக்கள் தங்களது அரசியாகிய பதினாறாவது லூயியின் ஆட்சிக்கு விரோதமாய்க் கலகம் செய்யத் தலைப்பட்டார்கள். அவர்கள் இதுவரையிலும் அதிகாரம் செலுத்திவந்த பிரபுக்களையும் குருமார்களையும் கொலைசெய்தும், தமது அரசரான பதினாறாவது லூயியையும் மகாராணியாரையும் சிரசாக்கினை செய்தும் இன்னும் இம்மாதிரியான கொடிய செய்கைகளைச் செய்தும் வந்தார்கள். இவ்வாறு அவர்கள் முடியரசை (Monarchy) ஒழித்துக் குடியரசை (Republic) ஏற்படுத்திக்கொண்டார்கள். இத்தகைய ராஜ்ய மாறுபாடுகளையே பிரெஞ்சுப் புரட்சி (French Revolution) என்று சொல்லுகிறோம்.

ஆங்கிலேயரும் பிரஞ்சுப் புரட்சியும்:—பிரான்ஸில் அரசமுறை தலைகீழாக மாறிவிட்டதைக் கேட்ட ஆங்கிலேயர்கள் முதல்முதலில் அந்த ராஜ்ய மாறுபாடுகள் பொது ஜன

நன்மைக்கு உண்டானவை என்று நினைத்தார்கள். ஆனால் பிரெஞ்சுக் கலகக்காரர்கள் தங்களது மன்னரைக் கொன்றுவிட்டு, ஐரோப்பாவிலுள்ள இதர தேசத்தவர்களையும் முடியரசை ஒழிக்கக் கலகம் செய்யும்படி தூண்டியதைக் கண்டு, ஆங்கிலேயர்கள் பிரான்ஸின்மீது கி. பி. 1793-ல் போர் தொடுத்தார்கள். இதற்கு முன்னமேயே ஆஸ்டிரியாவும் பிரஷ்யாவும் பிரான்ஸின்மீது போர் தொடுத்துவிட்டன.

நெப்போலியன் போனபார்ட் :—இச்சமயத்தில் பிரான்ஸ் தேசத்தில் போர்த்திறமையில் ஒப்பில்லாத நெப்போலியன் போனபார்ட் (Napoleon Bonaparte) என்ற தளகர்த்தர் ஒருவர் இருந்தார். அவர் மத்தியதரைக் கடலிலுள்ள கார்ஸிகா (Corsica) என்ற தீவிற் பிறந்தவர். அவர் பெருந் தன்மை வாய்ந்தவர்; போர்த் திறமை யுள்ளவர்; பொது ஜனங்களின் மனதைக் கவரும்படியான ஒரு அபூர்வ சக்தி அவரிடம் இருந்தது. அவர் முதல் முதலில் ஒரு பிரெஞ்சு பீரங்கிப் பட்டாளத்தின் தலைவராயிருந்தார்.

கி. பி. 1793ல் வில்லியம் பிட்டினால் பிரெஞ்சுப் புரட்டர்களுக்கு விரோதமாய்க் கலகம் செய்ய அனுப்பப்பட்ட ஒரு சைன்யத்தை, நெப்போலியன் டூலன் நகரை வெகு திறமையுடன் முற்றுகை யிட்டு கைப்பற்றிக்கொண்டபின், முறியடித்துத் துரத்திவிட்டார். பிறகு கி. பி. 1796ல் போனபர்ட் இடலி தேசத்தில் வைக்கப்பட்ட பிரெஞ்சுச் சைன்யத்தின் தளகர்த்தராக நியமிக்கப்பட்டார். அவர் ஆஸ்டிரியர்களை இடலி தேசத்திலிருந்து தோற்கடித்துத் துரத்தினார்; அவர்களை பிரெஞ்சுக்காரர்களிடம் இடலியைக் கொடுத்துவிடும்படி செய்தார். இதே காலத்தில் பிரெஞ்சுக்காரர்களின் கட்சியில் சேர்ந்துகொண்ட ஸ்பெயின் ஹாலந்து தேசங்களின் கப்பற் படைகள் ஒன்றுசேர்ந்து இங்கிலாந்தின்மீது படையெடுக்கத்

தயார் செய்தன. இதைத் தடுக்க நினைத்து ஆங்கில அட்மிரலான ஜேர்விஸ் ஸ்பானிஷ் போர்க் கப்பல்களை கி. பி. 1797ல் ஸெண்ட் வின்ஸெண்ட் முனைக்கு அருகில் சந்தித்துப் போர் புரிந்தார். கம்மடோர் நேல்ஸன் என்ற ஆங்கில அட்மிரலின் போர்த் திறமையால் இக் கடற் சண்டையில் ஆங்கிலேயர்களுக்கு வெற்றி ஏற்பட்டது. அதே வருஷத்தில் ஆங்கில அட்மிரலான டங்கன் டச்சுக்காரர்களைக் காம்பர்டேளன் என்னுமிடத்துக்கு அருகில் நடந்த கடற் சண்டையில் தோற்கடித்தார். இவ்வாறு ஆங்கிலேயர்கள் கடற் சண்டைகளில் வெற்றி யடைந்து வருகையில், அவருடைய மனோ தைரியத்தையும், போர்த் திறமையையும் கண்ட பிரெஞ்சுக்காரர்கள் அவரைக் குடியரசு முதற் பரிபாலகர் (First Consul) என ஏற்றுக்கொண்டார்கள். அவர் ஒரு பெரிய பிரெஞ்சு சாம்ராஜ்யத்தை ஐரோப்பாவில் ஏற்படுத்தித் தாமே அதன் சக்கரவர்த்தியாக விளங்கவேண்டுமென்று விரும்பினர்.

நைல் நதிச் சண்டை (கி. பி. 1798):—நெப்போலியன் இந்தியாவில் ஆங்கிலேயரின் அதிகாரத்தை அழிக்க எண்ணி ஒரு பெரிய கப்பற்படையுடன் மத்தியதரைக் கடல் வழியாக இரகசியமாய்ச் சென்றார். அவர் போகும் வழியில் மால்டா தீவைக் கைப்பற்றிக்கொண்டார். பிறகு அவர் எகிப்து நாட்டையும் ஜயித்துக்கொண்டார்; பிறகு நைல் நதியின் முகத்துவாரத்திலுள்ள அபுகிர் குடாவில் தமது போர்க் கப்பல்களை வைத்திருந்தார். இதை யறிந்த ஆங்கில அட்மிரலான ஸர் ஹோரேஷியோ நேல்ஸன் சில கப்பல்களுடன் வெகு வேகமாய்ச் சென்று பிரெஞ்சுக் கப்பலகளைத் தாக்கி அழித்துவிட்டார். இந்த வெற்றி மத்தியதரைக் கடலில் இங்கிலாந்தின் கடல் ஆதிக்கத்தை ஸ்தாபித்தது. கீழ் நாடுகளை ஜயிக்க வேண்டும் என்ற போனபார்ட்டின் கனவையும் தொலைத்தது.

பிறகு எகிப்து நாட்டினர் பிரெஞ்சுப் போர்வீரர்களைத் தோற்கடித்துத் துரத்திவிட்டனர். இச்சமயத்தில் நெப்போலியன் ஒரு கப்பலில் ஏறி பிரான்ஸுக்கு இரகசியமாகச் சென்றுவிட்டார்.



நெப்போலியன் போனபார்ட்.

நெப்போலியன் பிரான்ஸுக்குத் திரும்பிச் சென்ற பின் பிரெஞ்சுக்காரர்கள் அவரைக் குடியரசின் முதற் பரிபாலராகச் (First Consul) செய்து சர்வாதிகாரத்துடன் பிரான்ஸை ஆண்டு வரும்படி ஏற்பாடு செய்தார்கள். இவ்வாறு ஸீஸர், கிராம்வெல் என்ற தளகர்த்தர்களைப் போல, நெப்போலியன் பிரெஞ்சுச் சேனையின் பலத்தைக்கொண்டு முதன்மை பெற்று ஆண்டு வரலானர்.

இச்சமயத்தில் ஆஸ்டிரியா, ரஷியா, இங்கிலாந்து இந்த மூன்று தேசங்களும் ஒன்று சேர்ந்து பிரான்ஸுடன் போர் புரிய ஏற்பாடுகள் செய்தன. போனபார்ட் ரஷியா வேந்தரைச் சிநேக ஏற்பாட்டினின்று விலகிக்கொள்ளும்படி செய்தார். பிறகு அவர் ஆல்ப்ஸ் மலைத்தொடரைக் கடந்து மாரங்கோ (Marengo) என்னுமிடத்தில் ஆஸ்டிரியர்களைத் தோற்கடித்துப் பிரெஞ்சு அதிகாரத்தை இடலியில் ஸ்தாபித்தார்.

கி. பி. 1801-ல் இருதரத்தார்களும் போரை நிறுத்த வேண்டுமென்று விரும்பினார்கள். இச்சமயத்தில் வில்லியம் பிட் பிரதான மந்திரிப் பதவியை ராஜிநாமா செய்துவிட்டார். அவருக்குப்பின் பிரதான மந்திரியாய் வந்த அடிங்டன் கி. பி. 1802-ல் பிரெஞ்சுக்காரர்களுடன் அமின்ஸ் (Amiens) என்ற விடத்தில் ஓர் உடன்பாடு செய்துகொண்டார். அதன்படி ஆங்கிலேயர்கள் தாங்கள் ஜயித்த நாடுகளைப் பிரெஞ்சுக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விட்டார்கள். ஸ்பெயின் ட்ரினிடாட் தீவையும், ஹாலந்து ஸிலோன் தீவையும் ஆங்கிலேயர்களுக்குக் கொடுத்தன.

ட்ரபால்கர் சண்டை (கி. பி. 1805) :—அமின்ஸ் உடன்படிக்கைக்குப் பிறகு பிரெஞ்சுக்காரர்கள் குடியரசை ஒழித்துவிட்டு, நெப்போலியனைச் சக்கரவர்த்தியாகச் செய்து கொண்டார்கள். அவர் க்ராம்வெல்லைப்போல் மனோ தைரியமும் விடாமுயற்சியும் பிடிவாதமும் உள்ளவர். அவர் பிரிட்டிஷ்த் தீவுகளின் மேல் படையெடுத்து, அவைகளைக் கைப்பற்ற வேண்டும் எனத் தீர்மானித்தார். ஆகையால் அவர் ஒரு கப்பற் படையைச் சேகரித்து வில்நேவ் (Villeneuve) என்பவரை அதன் அட்மிரலாக நியமித்தார். இங்கிலீஷ்க் கால்வாயில் ஓர் ஆங்கில கப்பற்படை இங்கிலாந்தின் பாதுகாப்புக்

காக இருந்தபடியால் நெப்போலியன் வில்நேவ் அட்மிரலைத் தமது படையுடன் மேற்கு இந்தியத் தீவுகளுக்குச் செல்வது



ஐரோப்பா—பிரெஞ்சு பட்டிப் போர்.

போலப் பாசாங்கு செய்யும்படி உத்தரவிட்டார். ஆங்கிலேயர்கள் தங்கள் கப்பற்படையை இங்கிலீஷ்க் கால்வாயிலிருந்து எடுத்துச் செல்வார்கள் என்றும், அச்சமயம் தாம் இங்கிலாந்தைக் கைப்பற்றி விடலாமென்றும் நெப்போலியன் எண்ணியிருந்தார். ஆனால் அவர் நெல்ஸனை ஏமாற்ற முடியவில்லை. வில்நேவ் தமது கப்பற்படையுடன் ஸ்பெயினுக்கு அருகிற் சென்று இருப்பதாகக் கேள்விப்பட்டு, நெல்ஸன் தமது படையுடன் ஸ்பெயினுக்குச் சென்றார். ட்ரபால்கர் (Trafalgar) என்ற முனைக்கு அருகில் ஒரு கடற்சண்டை நடந்தது. இதில் ஆங்கிலேயர்கள் வெற்றியடைந்தார்கள். ஆயினும் இக்கடற்சண்டையில் நெல்ஸன் ஒரு குண்டுக்கு இரையானார். இவ்வெற்றி இங்கிலாந்தை மிக ஆபத்தான நிலைமையிலிருந்து காப்பாற்றியதோடு இங்கிலாந்தின் கடல் வலிமையையும் நிலைநாட்டியது.

ட்ரபால்கர் சண்டைக்குப் பிறகு, இங்கிலாந்து பிரான்ஸுக்கு விரோதமாய் ஆஸ்டிரியா, ரஷியா, ஸ்வீடன் தேசங்களுடன் சில உடன்பாடுகளைச் செய்துகொண்டது. இதையறிந்த நெப்போலியன் கி. பி. 1805ல் ஆஸ்டிரியாவின்மீது படையெடுத்து, ஆஸ்டிரியர்களை ஆஸ்டர்லிட்ஸ் என்றவிடத்தில் நடந்த சண்டையில் தோற்கடித்துத் துரத்திவிட்டார். ஆஸ்டிரியர்கள் பிரெஸ்பார்க் என்னுமிடத்தில் ஓர் உடன்பாடு செய்துகொண்டார்கள். இதன் பிறகு நெப்போலியன் பிரான்ஸுக்குக் கிழக்கேயுள்ள நாடுகளை ஜயித்து, அவைகளைத் தம் சகோதரர்களைக் கொண்டு ஆண்டுவரும்படி செய்தார்.

இச்சமயத்தில் கி. பி. 1806-ல் வில்லியம் பிட் இறந்து போனார். டோரிக் கட்சியார்கள் அரசியலில் அதிகாரம் பெற்று கி. பி.1807 முதல் கி. பி. 1830 வரையில் அரசருக்கு

உதவி புரிந்து வந்தார்கள். பிறகு நெப்போலியன் பிரஷியர் களை ஜீனு என்ற விடத்தில் தோற்கடித்தார். இதற்குப்பின் (கி. பி. 1807-ல்) நெப்போலியன் ரஷியாவின்மீது போர் தொடுத்தார்; ரஷியர்களை பிரீட்லந்து என்ற விடத்தில் நடந்த சண்டையில் தோற்கடித்துத் தம்முடன் சமாதானம் செய்து கொள்ளும்படி செய்தார். பிறகு அவர் டில்ஸிட் என்னு மிடத்தில் ரஷியர்களுடன் கி. பி. 1807-ல் ஓர் உடன்பாடு செய்துகொண்டார். பிரஷியா பல சிறிய நாடுகளாகப் பிரிக்கப் பட்டது. ரஷியா நெப்போலியன் கட்சியில் நின்று இங்கி லாந்தின்மீது படை யெடுக்க உதவி புரிவதாக வாக்களித்தது. இதற்குப்பின் நெப்போலியன் தாமடைந்த வெற்றியால் செருக்கடைந்து பிரான்ஸுடன் சேர்ந்த தேசங்கள் இங்கி லாந்துடன் வியாபாரம் செய்யக்கூடாதென்றும் பிரிட்டிஷ் காரர்களைச் சிறையிலிட வேண்டுமென்றும் உத்தரவிட்டார். இதற்கு பேர்லின் உத்தரவு (Berlin Decree) என்று பெயர். இதை யறிந்த பிரிட்டிஷ் அரசாங்கத்தார், இங்கிலாந்துடன் நட்பு செய்துகொண்ட தேசங்கள் பிரான்ஸுடனும் அதன் கட்சியில் சேர்ந்து கொண்ட ஐரோப்பியத் தேசங்களுடனும் வியாபார சல்லாபம் வைத்துக் கொள்ளக் கூடாதென்று உத்தரவு செய்தனர். இவைகளுக்குக் கௌன்ஸில் கட்டளை கள் (Orders in Council) என்று பெயர். இவ்வாறு இங்கி லாந்துக்கும் பிரான்ஸுக்கும் பகை அதிகரித்துக் கொண்டு வந்தது.

தீபகற்பப் போர் (கி. பி. 1808–1814):—நெப்போலியன் மத்திய ஐரோப்பிய நாடுகளை யுத்தத்தில் வென்று தம் அதிகாரத்தை ஸ்தாபித்துக்கொண்டு விட்டார். அவரது அதி காரம் மிக உன்னத நிலையில் இருந்தது. கி. பி. 1807-ல் நெப்போலியன் ஐரோப்பியத் தேசங்களெல்லாம் இங்கிலாந்

துடன் வியாபார சல்லாபம் வைத்துக் கொள்ளக் கூடாதென்று கடுமையான உத்தரவிட்டார். அவரது உத்தரவை மீறி நடக்க ஐரோப்பிய தேசத்தார் துணியவில்லை. ஐரோப்பியத் தேசங்கள் பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தை வெறுத்த போதிலும், அவை நெப்போலியனிடம் அஞ்சிக் கலகம் செய்யாது சும்மாவிருந்தன. இங்கிலாந்தின் வியாபாரத்தை அழிக்க நெப்போலியன் செய்த ஏற்பாட்டிற்கு போர்த்துகல் இணங்கவில்லை. அதன் துறைமுகங்களில் பிரிட்டிஷ் கப்பல்கள் வந்து முன்போல வியாபாரச் சரக்குகளை ஏற்றிக்கொண்டு சென்றன. இதனால் நெப்போலியன் போர்த்துகிஸியர்களிடம் கோபமடைந்து போர்த்துகலை தம் உத்தரவுக்குக் கீழ்ப்படியும்படி செய்ய உத்தேசித்தார். அதனால் போர்த்துகல் இங்கிலாந்தின் உதவியை நாடிற்று. பிரிட்டிஷ் அரசாங்கத்தாரும் பெரும் சைன்யத்தைச் சேகரம் செய்து போர்த்துகலுக்கு அனுப்பினார்கள்.

இந்த நிலைமையில் நெப்போலியன் தம் இளைய சகோதரரான ஜோஸெப் என்பவரை ஸ்பெயின் அரசராகச்செய்துவைத்தார். ஸ்பெயின் நாட்டினருக்கு இதிற் கொஞ்சமேனும் சம்மதமில்லை. ஆதலால் அவர்கள் ஆங்கிலேயர்களின் உதவியை நாடினார்கள். இவ்வாறு இங்கிலாந்து ஸ்பெயின் கட்சியில் சேர்ந்துகொண்டு பிரெஞ்சுக்காரர்களுடன் ஸ்பெயின் தீபகற்பத்தில் போர்புரிந்தது. இதற்குத்தீபகற்பப்போர் (Peninsular War) என்று பெயர். இப்போர் ஆறு வருஷகாலம் (கி. பி. 1808—1814) நடந்தது. ஆங்கிலேயர்கள் ஆர்தர் வெல்லெஸ்லி* (Arthur Wellesly) என்ற ஒரு தளகர்த்தரை ஒரு பெரிய

---

* அவர் நம் (இந்தியா) நாட்டில் கவர்னர் ஜெனரல் பதவியில் இருந்த ' மார்க்குவிஸ் ஆவ் வெல்லெஸ்லியின் தம்பிதான்.

சைன்யத்துடன் அனுப்பினர். அங்கே அவர் பிரெஞ்சுக் காரர்களுடன் விமீரா முதலான விடங்களில் பல சண்டைகள் புரிந்து வெற்றியடைந்தார். பிறகு ஸர் ஜான் மோர் என்ற ஓர் ஆங்கில தளகர்த்தர் கி. பி. 1809-ல் கோரன்னு பிரெஞ்சுக் காரர்களோடு சண்டை செய்தார். இச் சண்டையில் அவர் கொல்லப்பட்டு இறந்து போனர். ஆனல் ஆங்கிலேயர்கள் தான் இச் சண்டையில் வெற்றி யடைந்தார்கள். அவர் ஸ்பெயின் தேசத்துக்குள் சென்று, டலவீரா (Talavera) என்ற விடத்தில் ஒரு பிரெஞ்சுச் சேனையைத் தோற்கடித் தார். இவ் வெற்றிக்காக ஆங்கில ராஜாங்கத்தார் அவருக்கு வெல்லிங்டன் கோமகனர் (Duke of Wellington) என்ற பட்டத்தை அளித்தார்கள். இதற்குப் பிறகு அவர் பிரெஞ்சுக் காரர்களுடன் வெகு தைரியமாய்ப் போர் புரிந்து வெற்றி யடைந்துவந்தார். கி.பி. 1812-ல் நெப்போலியன் ஸலமாங்கா (Salamanca) என்ற விடத்தில் பிரெஞ்சுச் சைன்யத்தைச் சந்தித்து முறியடித்தார். ஸ்பெயின் தலைநகரான மாட்ரிட் (Madrid) நகரத்தையும் கைப்பற்றிக்கொண்டு விட்டார்.

ஐரோப்பியத் தேசங்களில் கலகங்கள்:—ஸ்பெயின் தேசத்தில் போர் புரிந்து வந்த பிரெஞ்சுப் படைகளை யெல்லாம் நெப்போலியன் அழைத்து ஒரு பெரிய சைன்யத்தைச் சேகரித்தார். ரஷியாவின் மீது படையெடுக்க வேண்டும் என்பது அவரது எண்ணம். இந்தப் பெரிய சைன்யத்துடன் அவர் மாஸ்கோ நகருக்குச் சென்று அதைக் கைப்பற்றிக் கொண்டார். இதைக் கண்ட ரஷியர்கள் கோபங்கொண்டு அவருடன் பயங்கரமான சண்டைகளைச் செய்யத் தயாரானர் கள். இக் காரணங்களால் அவர் தம் சைன்யத்துடன் மாஸ்கோவிலிருந்து பின்னடைந்து வந்தார். பின்னடைந்து வருகையில், ரஷியர்கள் எதிர்த்தபடியாலும் குளிராலும்

பிரெஞ்சு வீரர்களில் அநேகர் மடிந்து போயினர். இவ்வாறு இந்தச் சைன்யம் அழிந்துவிட்டது. பிறகு ஜர்மனியர்களும் நெப்போலியனுக்கு விரோதமாய்க் கலகம் செய்தார்கள். அவர்கள் ஒரு பெரிய படையுடன் பிரெஞ்சுச் சைன்யத்தை லிப்ஸிக் என்ற விடத்தில் சண்டை செய்து தோற்கடித்தார்கள். அதற்குப் பிறகு ஜர்மனியர்கள் பிரெஞ்சுக்காரர்களை




தீபகற்பப்போர்.

ரைன் நதிக்குத் தெற்கே துரத்திவிட்டார்கள். இச்சமயத்தில் ஐரோப்பா முழுவதும் நெப்போலியனின் கொடிய ஆட்சியைக் கண்டு அவனை வெறுக்கலாயிற்று. பின்னர், நெப்போலியன் ரஷியர்களுடன் போர் புரிய வேண்டியிருந்ததால் ஸ்பெயினில் நடந்த போரில் அவர் அதிகச் சிரத்தை

எடுத்துக்கொள்ள முடியவில்லை. வெல்லிங்டன் பிரபு இச் சமயம் அறிந்து பிரெஞ்சுக்காரர்களை விட்டோரியா (Vittoria) என்ற விடத்தில் தோற்கடித்து, ஜோஸப் என்பவரை ஸ்பெயினிலிருந்து துரத்திவிட்டார். இதற்குப்பின் பிரெஞ்சுக்காரர்கள் தங்கள் சேனையுடன் பிரான்ஸையே பாது காத்துக் கொள்ளும்படி நேர்ந்தது. இவ்வாறு தீபகற்பப் போர் முடிவடைந்தது.



வெல்லிங்டன் கோமகனர்.

வாட்டர்லூ சண்டை. (கி. பி. 1815):—ஸ்பெயினில் பிரெஞ்சுக்காரர்கள் தோல்வி யடைந்ததைக் கேட்ட ஜர்மனி

யர்களும் ருஷியர்களும் சேர்ந்துகொண்டு பிரான்ஸின்மீது படையெடுத்து பாரிஸ் நகருக்குள் புகுந்தார்கள். இச்சமயத்தில் வெல்லிங்டன் பிரபு லோஸ் என்ற விடத்தில் ஒரு பிரெஞ்சுச் சேனையைத் தோற்கடித்துவிட்டு தம் சைன்யத்துடன் பிரான்ஸின் தென்பாகத்துக்குள் புகுந்தார். ஆகையால் நெப்போலியன் தப்பவழி யொன்றும் புலப்படாமல் கி.பி.1814-ல் சக்ரவர்த்திப் பதவியை விட்டார். பிறகு அவர் எல்பா என்னும் ஒரு சிறிய தீவிற்கு அனுப்பப்பட்டார். ஆனால் கி. பி. 1815 மார்ச்சு மாதத்தில் அவர் எல்பா தீவிலிருந்து பிரான்ஸுக்குத் தப்பி ஓடிவந்து, தாம் இழந்த அதிகாரப்பதவியை பெற நினைத்து ஒரு சேனையைக் கூட்டினார். பிரெஞ்சுக்காரர்கள் அதிக சந்தோஷத்துடன் அவரை வரவேற்று பதினெட்டாவது லூயியைச் சிங்காதனத்திலிருந்து துரத்தி விட்டு, நெப்போலியனை தங்கள் நாட்டின் சக்கரவர்த்தியாகச் செய்துகொண்டார்கள். இதையறிந்த வெல்லிங்டன் பிரபுவும், ஜர்மனி சேனைத்தலைவரான ப்ளுச்சர் (Blucher) என்பவரும் தங்கள் துருப்புக்களுடன் பெல்ஜியத்தில் வாட்டர்லூ (Waterloo) என்னும் கிராமத்தின் அருகில் நெப்போலியனின் சைன்யத்தைச் சந்தித்தார்கள். அங்கே ஒரு பயங்கரமான சண்டை நடந்தது. ஆரம்பத்தில் ஆங்கிலக் கட்சிக்கு வெற்றி ஏற்படாதுபோல் தோன்றியது. ஆயினும். வெல்லிங்டன் பிரபுவின் விடாமுயற்சியாலும், ஜர்மனியத் தளகர்த்தரின் உதவியாலும் ஆங்கிலேயர்கள் இச்சண்டையில் வெற்றி அடைந்தார்கள். பிறகு நெப்போலியன் கைதியாக்கப்பட்டு தென் அட்லாண்டிக் மகாசமுத்திரத்திலுள்ள ஸெண்ட் ஹெலீனா (St. Helena) என்னும் தீவிற்கு அனுப்பப்பட்டார். இதன் பிறகு நேசக் கட்சியினர் பதினெட்டாவது லூயியைப் பிரெஞ்சு மன்னராகச் செய்து

வைத்தார்கள். பிறகு நெப்போலியன் போனபார்ட் அத் தீவிலேயே கி. பி. 1821-ல் இறந்தார்.

**வியன்னா காங்கிரஸ் (கி. பி. 1815):**—இந்த நீடித்த போர் பாரிஸ் சமாதானத்தால் முடிவடைந்தது. நெப்போலியன் ஸெண்ட் ஹெலீனாவுக்கு அனுப்பப்பட்ட பின், பதினெட்டாவது லூயி பிரெஞ்சு மன்னராகச் செய்யப்பட்டார். பிரான்ஸ் சில நாடுகளை இழந்தது. இங்கிலாந்து ஜயித்த நாடுகளில் பலவற்றைத் திரும்பவும் கொடுத்துவிட்டபோதிலும் பிரான்ஸிடமிருந்து மொரிஷியஸ் தீவையும் சில மேற்கு இந்தியத் தீவுகளையும் அடைந்தது. மேலும், டச்சுக்காரர்களுக்குச் சொந்தமாயிருந்த ஸிலோன் தீவையும் நன்னம்பிக்கை முனைக்கு அருகிலுள்ள ஆப்பிரிக்காவின் தென்கோடி நாட்டையும் ஆங்கிலேயர்கள் தாங்களே வைத்துக்கொண்டார்கள். இடலியில் ஆண்டுவந்த சிற்றரசர்கள் அவரவர்களுடைய நாடுகளைத் திரும்பவும் அடைந்தார்கள். ஆனால் மைலன், வெனிஸ் என்ற இரண்டு குடியரசு நாடுகளும் ஆஸ்டிரியாவிற்குக் கொடுக்கப்பட்டன. போரினால் ஏற்பட்ட நஷ்டங்களுக்கு ஈடு பண்ண பிரஷியாவிற்கு ரைன் நதியின் இடது பக்கத்திலுள்ள பூமிகள் கொடுக்கப்பட்டன. ருஷியாவின் சக்கரவர்த்தி போலந்து என்ற நாட்டை அடைந்தார். நெதர்லாந்துகளைத் தனியாகப் பிரித்து அவைகளை ஓர் அரசர் ஆண்டுவரும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. தவிர, ஐரோப்பாவில் ஒவ்வொரு மன்னரும் சபையுடன் தம் நாட்டை ஆண்டுவரவேண்டும் என்றும் ஏற்பாடாயிற்று. இந்த ஏற்பாட்டினால் தேசீய உணர்ச்சி ஐரோப்பாவில் அதிகமாயிற்று என்றாலும் ஐரோப்பியத் தேசங்களுக்குள் யுத்தங்கள் ஒழிந்து நீடித்த சமாதானம் உண்டாகவில்லை.

**கேள்விகள் :—**

1. சிறிய பிட் எவ்வாறு பார்லிமெண்டில் முதன்மை பெற்றார்? அவர் இங்கிலாந்தின் முன்னேற்றத்திற்காகச் செய்த காரியங்கள் யாவை?
2. சிறிய பிட்டின் குணாதிசயங்களைப் பற்றிச் சுருக்கமாய் எழுதுக.
3. பிரெஞ்சுப் புரட்சியின் காரணங்கள் யாவை?
4. ஏன் இங்கிலாந்து பிரெஞ்சுப் பெருங் கலகத்தில் தலையிடும்படி நேரிட்டது?
5. நெப்போலியன் போனபார்ட் என்பவரின் ‘மேலான குணங்களைப்பற்றிச் சுருக்கமாய் எழுதுக. அவர் பிரான்ஸில் குடியரசுப் பரிபாலகர் என்ற உன்னதப் பதவியை எவ்வாறு அடைந்தார்? அவருடைய நோக்கங்கள் யாவை?
6. பிரெஞ்சுப் புரட்சிப் போரில் கி. பி. 1808 வரையில் நிகழ்ந்த முக்கிய சண்டைகளைப் பற்றிச் சுருக்கமாய் எழுதுக.
7. தீபகற்பப் போர் எக்காரணத்தினால் ஏற்பட்டது? அந்தப் போரில் நிகழ்ந்த முக்கிய சண்டைகள் யாவை?
8. வியன்னா காங்கிரஸினால் செய்யப்பட்ட ஏற்பாடுகள் யாவை?

---

## பாகம் 3. அயர்லாந்து இங்கிலாந்துடன் ஐக்கியமாதல் (கி. பி. 1800)

அயர்லாந்தியரின் நிலைமை (கி. பி. 1600-1700) :— முதலாவது ஜேம்ஸின் காலத்தில் ஆங்கில பிராடெஸ்டண்ட்கள் வட அயர்லாந்திலுள்ள அல்ஸ்டர் மாகாணத்தில் குடியேறினர்கள். அது முதல் அந்நாட்டில் கத்தோலிக்குகளுக்கும் பிராடெஸ்டண்ட்களுக்கும் அடிக்கடி சண்டைகள் ஏற்பட்டுக்

கொண்டு வந்தன. க்ராம்வெல், அயர்லாந்திய (ஐரிஷ்) கத்தோலிக்குகளைக் குடியரசை ஒப்புக்கொள்ளும்படி செய்தார். இதற்குப் பிறகு ஸ்டூவர்ட் மன்னர்களின் சார்பாக அயர்லாந்தில் உண்டான கலகங்களை மூன்றாவது வில்லியம் அடக்கினார். அதுமுதல் ஐரிஷ்க் கத்தோலிக்குகள் நிலங்களை இழந்தும் உத்தியோகம் இல்லாமல் கஷ்டப்பட்டும் வந்தார்




கள். அவர்களுக்குப் பார்லிமெண்ட் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையும் கிடையாது. ப்ராடெஸ்டண்ட்கள் அடங்கிய ஐரிஷ் பார்லிமெண்டோ கத்தோலிக்குகளின் குறைகளை நீக்க ஒருவித ஏற்பாடும் செய்யவில்லை. தவிர, ஆங்கில ராஜாங்கத்தின் அனுமதியின்றி ஐரிஷ் பார்லிமெண்ட் புதிய சட்டங்களை இயற்றக்கூடவில்லை. மேலும், ஆங்கிலேயர்கள்

அயர்லாந்தியரின் வர்த்தகம் ஓங்கமுடியாமல் செய்துவந்தனர். இத்தகைய குறைகள் ஐரிஷ் கத்தோலிக்குகளுக்கும் பிராடஸ்டண்ட்களுக்கும் ஆங்கில அரசாங்கத்தாரிடம் இருந்து வந்தன.

அயர்லாந்தியரின் கலகம் (கி. பி. 1798):—இத்தகைய குறைகளினால் கஷ்டமடைந்திருந்த அயர்லாந்தியர்கள் கி. பி. 1798-ல் ஒரு பெரிய கலகம் செய்தனர். நெப்போலியன் அவர்களுக்கு உதவி செய்வதாக வாக்களித்துக் கலகம் செய்யும்படி தூண்டிக்கொண்டு வந்தார். அயர்லாந்துக்கு அனுப்பப்பட்ட ஓர் ஆங்கிலச் சேனை அக் கலகத்தை எளிதில் அடக்கி விட்டது. அக்காலத்தில் பிரதான மந்திரியாயிருந்த பிட் விசாலமான நோக்கமும் புத்தி நுட்பமும் உள்ளவராதலால், அயர்லாந்தியரின் குறைகளை நீக்கும் வரையில் அவர்கள் கலகம் செய்துகொண்டேயிருப்பார்கள் என்று நினைத்தார். ஆகையால் அவர் அயர்லாந்தை இங்கிலாந்துடன் ஐக்கியமாக்கி முன்னேற்றம் அடைவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்தார். அவர் ஐரிஷ் கத்தோலிக்குகளின் குறைகளை நீக்குவதாக வாக்களித்து, அவர்களைத் தமது ஏற்பாட்டிற்குச் சம்மதிக்கும்படி செய்தார்.

ஐக்கியச் சட்டம் (கி. பி. 1800):—அவர் ஐரிஷ் பார்லிமெண்டில் ஐக்கியச் சட்டம் (Act of Union) ஒன்றை இயற்றும்படி செய்தார். அதன்படி ஐரிஷ் பார்லிமெண்ட் இங்கிலீஷ் பார்லிமெண்டுடன் ஐக்கியமாகவேண்டும்; 32 பிரபுக்களும் 100 பொதுஜனப் பிரதிநிதிகளும் அந்த ஐக்கியப் பார்லிமெண்டுக்கு அயர்லாந்தின் அங்கத்தினர்களாக அனுப்பப்படவேண்டும்; வியாபார விஷயங்களில் அயர்லாந்தியர்கள் ஆங்கிலேயருடன் சமத்துவமாகப் பாவிக்கப்படவேண்டும் என்பன

ஏற்பட்டன. அது முதல்தான் யூனியன் ஜாக் (Union Jack) என்னும் ஐக்கிய பிரிட்டிஷ்க்கொடி பரக்கத் தொடங்கியது.

ஐக்கிய ஏற்பாட்டில் உள்ள ஒரு பெருங் குறை:— இவ்வாறு அயர்லாந்து இங்கிலாந்துடன் ஐக்கியமானபோதிலும் ஐரிஷ்க் கதோலிக்குகளின் குறைகள் நீக்கப்படாமலே இருந்து வந்தன. பிட் தமது வாக்கை நிறைவேற்ற கதோலிக் விடுதலை மசோதா (Catholic Emancipation Bill) வைப் பார்லிமெண்டில் கொண்டுவந்தார். மூன்றாவது ஜார்ஜ் அதற்கு உடன்படவில்லை. ஆகையால் பிட் தமது வார்த்தைக்கு மதிப்பில்லாமல் போனதைக் கண்டு தமது பதவியை கி. பி. 1801ல் ராஜீநாமா செய்தார். அதனால் ஐரிஷ்க் கதோலிக்குகளின் குறைகள் நிவர்த்தியாகாமலே இருந்து வந்தன.

கேள்விகள் :—

1. ஐரிஷ்க் கதோலிக்குகளுக்கும் பிராடஸ்டன்ட்களுக்குப் பதினெட்டாவது நூற்றாண்டின் இறுதியிலே உண்டான குறைகள் யாவை? அக்குறைகளைப் போக்க பிட் செய்த ஏற்பாடு யாது?
2. ஐக்கியச் சட்டம் எக்காரணத்தினால் பிறப்பிக்கப்பட்டது? அதன்படி ஏற்பட்டவை யாவை?
3. ஐக்கிய ஏற்பாட்டில் உள்ள ஒரு பெருங் குறை யாது?

---

## பாகம் 4. தொழிற் புரட்சியும் மெதேடிஸ்ட் இயக்கமும்.

தொழில்முறை மாறுபாடுகள் :—மூன்றாவது ஜார்ஜின் ஆட்சிக்காலத்தில் கைத்தொழில்கள் சம்பந்தமான சில மாறுபாடுகள் உண்டாயின. பத்தொன்பதாவது நூற்றாண்டு ஆரம்பம் வரையில் ஆங்கிலேயர்கள் குடியானவர்களாகவும்

வியாபாரிகளாகவும் இருந்து வந்தார்கள்; இப்பொழுது இருப்பதுபோல பல தொழில்களையும் அறிந்திருக்கவில்லை. சாமான்களையும் அதிகமாகச் செய்யவில்லை. ஆனால் ஏழை ஜனங்கள் தங்கள் தங்களுடைய சிறிய குடிசைகளிலே சில கைத்தொழில்களைச் செய்துவந்தார்கள்.

பதினெட்டாவது நூற்றாண்டின் மத்தியில் சில நூதனமான விஷயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. ஜோஸயா வெட்ஜ்வுட் (Josiah Wedgewood) என்பவர் பலவிடங்களிலும், மண் சட்டி பானைகள் செய்யும் தொழிற்சாலைகளை ஏற்படுத்தினார். ஆர்க்ரைட் நூல் நூற்பதற்காக ஒரு இயந்திரத்தை முதலில் கண்டுபிடித்தார். அந்த இயந்திரம் தண்ணீரின் உதவியைக்கொண்டு வேலை செய்ததால் அதற்கு ஆங்கில பாஷையில் Water-frame என்று பெயர். இதன் பிறகு ஹார்கிரீவ்ஸ் (Hargreaves) என்பவர் ஒரே காலத்தில் அநேக நூல்களை நூற்பதற்கு ஒரு இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். அதற்கு ஆங்கிலப்பாஷையில் Spinning Jenny என்று பெயர். பிறகு க்ராம்ப்டன் என்ற ஒரு ஆங்கிலேயர் ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டுள்ளவைகளைச் சேர்த்து ஒரு புதிய இயந்திரத்தைச் செய்தார். இதே காலத்தில் கார்ட்ரைட் என்பவர் நூல்களைக்கொண்டு துணி நெசவிற்கு வேண்டிய தறிகளைச் செய்யத் தொடங்கினார். இச்சமயம் ஜேம்ஸ் வாட் நீராவியின் சக்தியைக் கண்டுபிடித்ததால் தண்ணீருக்குப் பதிலாக நீராவியின் சக்தி நூல் நூற்கும் இயந்திரங்களையும் தறிகளையும் ஓட்டுவதற்கு உபயோகிக்கப்பட்டது.

மேற்கூறிய காரணங்களால் ஏழை ஜனங்கள் குடிசையில் செய்துவந்த தொழில்கள் அழிந்துபோயின. தொழிற்

சாலைகள் ஏற்பட்டு அங்கு இயந்திரங்களின் உதவியால் பல தொழில்கள் நடந்து வந்தன. ஆகையால் பொருள்கள் முன்பு இருந்ததைக்காட்டிலும் பன்மடங்கு குவிந்தன; விரைவாகவும் செய்யப்பட்டன. ஆனதுபற்றி சாமான்களும் மலிவாய்க் கிடைத்தன. இங்கிலாந்தில் தொழிற்சாலைகளில் ஏராளமான பொருள்கள் செய்யப்பட்டதால், ஆங்கில வியாபாரம் செழித்து ஓங்க ஆரம்பித்தது. அதேகாலத்தில் வியாபாரம் பெருகுவதற்கு நல்ல சாலைகளும் பெரிய வாய்க்கால்களும் புதிதாய் ஏற்பட்டன. அவைகள் பொருள்களை ஓர் இடத்திலிருந்து மற்ற இடங்களுக்கு எடுத்துச் செல்வதற்குச் சாதனமாய் இருந்தன. தொழில் முறைகளில் தோன்றின இந்த மாறுபாடுகளுக்குத் தொழிற் புரட்சி (Industrial Revolution) என்று பெயர்.

தொழிற் புரட்சியின் பயன்கள்:—இத் தொழில் முறை மாறுபாடுகள் இங்கிலாந்தையே ஒரு பெரிய தொழிற்சாலை (A great workshop) யாகச் செய்து விட்டன. பெரிய தொழிற்சாலைகள் அநேக விடங்களில் ஏற்பட்டமையால் கைத் தொழிலாளர்களுக்குச் செய்ய வேலை இல்லாமற் போயிற்று. இயந்திரங்களை ஓட்டுவதற்கு சொற்ப மனிதர்களை வைத்துக் கொண்டு, அவைகளின் உதவியால் பொருள்கள் வெகு விரைவாயும் மலிவாயும் செய்யப்பட்டு வந்தன. ஆனது பற்றி ஆயிரக்கணக்கான ஏழை ஜனங்கள் தங்களுடைய குடிசைத் தொழில்களை இழந்தவர்களாகிப் பிழைக்க வழியின்றி தவித்து நின்றார்கள். தொழிற்சாலைகள் ஏற்பட்டவிடங்களில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் சென்று வசிக்க ஆரம்பித்தார்கள். ஆகையால் இங்கிலாந்தில் பெரிய மிராசுதார்களைப் போல தொழிற்சாலைச் சொந்தக்காரர்களும், வியாபாரிகளும் தனவான்களானார்கள். ஆனால் ஏழை மக்கள் தொழிலின்றித்

தவித்தார்கள். இவர்களுடைய கஷ்டங்களை நீக்க சில சட்டங்களை பின்னர் இயற்றவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

மெதேடிஸ்ட் இயக்கம்:—கி. பி. 1729-ல் ஆக்ஸ்பர்ட் நகரிலுள்ள சிலர் சேர்ந்து ஒரு சிறிய சங்கத்தை ஏற்படுத்தினார்கள். அச் சங்கத்தின் மெம்பர்கள் மிகச் சிறந்த வாழ்க்கையுள்ளவர்களாய் இருந்ததால் அவர்களுக்கு ஆங்கில பாஷையில் Methodists என்று பெயர். அவர்களுடைய தலைவர் லிங்கன் காலேஜின் சபை அங்கத்தினரான ஜான் வெஸ்லி. அவரது சகோதரரான சார்ல்ஸ் வெஸ்லியும் ஜார்ஜ் ஒயிட் பீல்ட் என்ற மதப் பிரசங்கம் செய்பவரும் அவருடன் இந்த இயக்கத்தில் ஒத்து உழைத்தார்கள்.

வட அமெரிக்காவில் ஆங்கிலேயர்கள் குடியேறின நாடான ஜார்ஜியாவிற்கு ஜான் வெஸ்லி ஒரு முக்கிய காரியமாக கி. பி. 1735-ல் சென்றபோது இந்தச் சங்கம் கலைந்து போயிற்று. ஆனால் அவர் கி.பி. 1738-ல் இங்கிலாந்திற்குத் திரும்பி வந்ததும், அவரும் அவரது சிநேகிதர்களும் மதசம்பந்தமாய் வெகு சிரத்தையுடன் உழைத்து வந்தார்கள். ஆங்கில சர்ச்சைச் சேர்ந்த குருமார்கள் அவர்களைச் சர்ச்சுகளில் மதப் பிரசங்கங்கள் செய்யக்கூடாது என்று தடுத்துவிட்டார்கள். ஆகையால் கி. பி. 1739-ல் மெதெடிஸ்ட் வகுப்பினர்கள் தாங்களே சிறிய கோவில்களைக் கட்டிக்கொண்டு மத உபந்நியாசம் செய்தார்கள். ஆயினும், அவர்கள் இங்கிலாந்து பிராடெஸ்டண்ட் சர்ச்சிலிருந்து விலகிக்கொள்ளவில்லை எனத் தெரிவித்தார்கள்.

அவர்கள் சோம்பேறித்தனத்தையும் கெடுதலான நடத்தையையும் தொலைக்கவேண்டும் என்றும் மேலான வாழ்க்கையைக் கைக்கொள்ள வேண்டுமென்றும் உபந்

நியாசங்களில் வற்புறுத்தினார்கள். சிலகாலம் சென்றபின் ஜான் வெஸ்லி தமது உபந்நியாசங்கள் பயன் அளிக்கவேண்டுமானால் சாசுவதமாக மதசம்பந்தமாய் பாடுபடுவதற்கு ஒரு நிலைத்த சபையை ஏற்படுத்தவேண்டுமென்று தம் புத்தி நுட்பத்தால் கண்டறிந்தார். ஆகையால் அவர் தம் உபந்நியாசங்களில் போதித்த மதக் கொள்கைகளை பரவச் செய்யவேண்டுமென்ற நோக்கத்துடன் ஒரு நிலைத்த சபையை ஸ்தாபித்தார். இச் சபையைச் சேர்ந்தவர்கள் பிராடெஸ்டண்ட் வகுப்பினர்கள். அவர்கள் இன்றைக்கும் மதத்திற்காக உழைத்து வருகிறார்கள். அச் சபையோர்கள் அநேக பள்ளிக்கூடங்களைப் பலவிடங்களில் ஏற்படுத்தி கல்வியைப் பரவச் செய்து வருகிறார்கள். அச் சபையோர் செய்துவரும் காரியம் மிகவும் புகழத் தக்கது.

மூன்றாவது ஜார்ஜின் மரணம்:—மூன்றாவது ஜார்ஜ் கி. பி. 1810 முதல் சித்தசுவாதீனம் இல்லாமல் இருந்தார். ஆகையால் பார்லிமெண்ட் ராஜப்பிரதிநிதி மசோதா (Regency Bill) ஒன்றை இயற்றியது. அதன்படி அவருடைய முதல் புதல்வரான ஜார்ஜ் இங்கிலாந்தை ராஜப்பிரதிநிதியாகவிருந்து ஆட்சி புரிவது என்று ஏற்பாடு செய்யப்பட்டது. மூன்றாவது ஜார்ஜ் பத்து வருஷகாலம் மதிமயக்கம் கொண்டவராயிருந்து, கி. பி. 1820-ல் காலஞ்சென்றார்.

கேள்விகள்:—

1. பதினெட்டாவது நூற்றாண்டின் மத்தியில் நூதனமாகக் கண்டுபிடிக்கப்பட்ட விஷயங்கள் யாவை?
2. தொழிற் புரட்சி என்பது யாது? அஃது இங்கிலாந்தில் எவ்வாறு ஏற்பட்டது?
3. தொழிற் புரட்சியின் பயன்கள் யாவை?

4. ராஜப் பிரதிநிதி மசோதா எக்காரணத்தினல் பிறப்பிக்கப் பட்டது? அதன்படி என்ன ஏற்பாடாயிற்று?
5. மெதெடிஸ்ட் இயக்கத்தைப்பற்றித் தெரிந்த வரையில் எழுதுக.

---

## அத்தியாயம் 4.

### நான்காவது ஜார்ஜ் (கி. பி. 1820—1830)

ஜார்ஜின் டோரி மந்திரிகள்:—நான்காவது ஜார்ஜ் பட்டத்திற்கு வந்ததும், அவர் விக் மந்திரிகளை நீக்கிவிட்டு டோரிக் கட்சியிலிருந்து தம்முடைய மந்திரிகளை நியமனம் செய்துகொண்டார். டோரிக் கட்சியில் இப்பொழுது இரண்டு பிரிவுகள் ஏற்பட்டன. ஒரு பிரிவினர் 'யாதொரு விதமான சீர்திருத்தங்களையும் செய்யக்கூடாது; சீர்திருத்தங்களால் கலகம் உண்டாகும்' என்று எண்ணினர். இப் பிரிவின் தலைவர் ராபர்ட் பீல் (Robert Peel) என்பவர். மற்றொரு பிரிவினர் கதோலிக்குகளின் குறைகளை நிவர்த்தி செய்வதில் இஷ்டமுள்ளவராய் இருந்தனர். ஆனல் அவர்கள் பார்லிமெண்ட் சீர்திருத்தங்களைச் செய்ய சம்மதிக்கவில்லை. இப் பிரிவின் தலைவர் ஜார்ஜ் கானிங் (George Canning) என்பவர். விக் கட்சியினர் அரசியலில் அதிகாரம் இழந்து பார்லிமெண்டில் எதிர்க்கட்சியில் இருந்துவந்தனர். க்ரே பிரபு இக் கட்சியின் தலைவராயிருந்தார்.

நான்காவது ஜார்ஜ் சிங்காதனமேறினது முதல் லிவர்ப்பூல் பிரபு ஏழுவருஷகாலம் முதன் மந்திரியாய் இருந்து வந்தார். அவர் பழைய டோரிக் கட்சியின் தலைவர். அவர் புதிய டோரிக் கட்சியினருக்கு உயர்ந்த பதவிகளைத் துரைத்தன நிர்வாகத்தில் கொடுத்தார். ஜார்ஜ் கானிங் அயல் நாடு

கள் சம்பந்தமான விஷயங்களைக் கவனிக்கும் மந்திரியாகவும் பொதுஜனச் சபைத் தலைவராகவும் ஆனார். அந்த காலத்தில் பழய டோரிக் கட்சியார்களுள் மிகத் திறமைவாய்ந்தவரான ராபர்ட் பீல் உள்நாட்டு விஷயங்களைக் கவனிக்கும் காரியதரிசியாக நியமிக்கப்பட்டார். ராபர்ட் பீல், லங்கஷயர் என்னும் ஜில்லாவில் வியாபாரத்தால் தனவான் ஆன ஒரு பிரபுவின் புதல்வர். பீல் துரைத்தன முறையில் பல சீர்திருத்தங்களைச் செய்ய இஷ்டப்படாவிட்டாலும் கிரிமினல் சட்டத்தில் சில மாறுதல்களைச் செய்தார். அக்காலத்தில் கிரிமினல் சட்டத்தின் பிரகாரம் இருநூறு மிகச் சிறிய குற்றங்களை ஒருவன் செய்தால் அவன்மீது கொலை தண்டனை விதிக்கப்படலாம் என்று ஒரு சட்டம் இருந்தது. அச்சட்டத்தின் கொடுமையை உணர்ந்த ராபர்ட் பீல் உள்நாட்டுக் காரியதரிசியாக இருக்கையில் சில சட்டங்களை இயற்றினார். மேலும், பீல் நாட்டில் ஒழுங்கு அமைதி இவைகளை ஏற்படுத்த எண்ணி, போலீஸ் இலாகாவில் சில சீர்திருத்தங்களையும் கி. பி. 1829-ல் செய்தார்.

ஜார்ஜ் கானிங் என்பவரும் கிரேக்கர்களும்:—ஒரு நாட்டார் மற்ற நாடுகளின் ராஜ்ய விவகாரங்களிற் பிரவேசித்தல் பிசகு என்று கானிங் கருதினார். ஆகிலும் கிரேக்கர்கள் துருக்கியர்களின் கொடிய ஆட்சிக்கு விரோதமாகக் கலகம் செய்து தங்களது சுதந்தரத்தைப் பெற முயன்றபோது, அவர் ஒரு ஆங்கில சேனையைக் கிரேக்கர்களுக்கு உதவிபுரியும்படி அனுப்பினார். அச் சேனையில் சுதந்தரத்திற்காகப் போர் செய்தவர்களில் பைரன் (Byron) என்ற ஆங்கிலக்கவி ஒருவர். ரஷியர்களும் சுதந்தரம்பெற நினைத்து துருக்கியர்களுக்கு விரோதமாய்க் கலகம் செய்த கிரேக்கர்களின் கட்சியில் சேர்ந்து கொண்டார்கள். அவர்கள் துருக்கியர்களின் ராஜ்யத்தை

அழித்த பிறகு தங்களுடைய அதிகாரத்தைப் பலப்படுத்திக் கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் கிரேக்கர்களின் சுதந்தரப் போரில் கலந்து கொண்டார்கள் என்று ஆங்கிலேயர்கள் அக்காலத்தில் எண்ணினார்கள். ஆயினும், ஆங்கிலேயர்கள் ரஷியர்களுடனும் பிரெஞ்சுக்காரர்களுடனும் உடன்படிக்கைகள் செய்துகொண்டு, ஒரு கப்பற் படையைச் சேகரித்து கிரீஸ் நாட்டின் மேல் கடற்கரையிலுள்ள நவாரினோ குடாவில் வைத்தார்கள். அக்குடாவில் நடந்த கடற் சண்டையிற் துருக்கியக் கப்பற்படை சின்னபின்னமாக்கப்பட்டது. இந்த வெற்றி கிரேக்கர்கள் சுதந்தரம் அடைவதற்குப் பேருதவி செய்தது. இவ்வாறு கானிங் அயல் நாட்டுக் காரியதரிசியாய் இருக்கையில் கிரேக்கர்கள் சுதந்தரத்தை அடைய உதவி செய்தார். அவர் கி.பி. 1827-ல் சில மாதங்கள் முதன் மந்திரியாய் இருந்து இறந்துபோனதும், வெல்லிங்டன் பிரபு பிரதான மந்திரியானார்.

**கதோலிக் விடுதலைச் சட்டம்(கி.பி.1829):-**வெல்லிங்டன் பிரபு (கி. பி. 1828-1830) பிரதான மந்திரியாயிருக்கையில் ஐரிஷ் கதோலிக்குகள் தங்களுடைய குறைகளை ஒழிக்க ஒரு பெரும் கிளர்ச்சி செய்தார்கள். சிறிய பிட் அவர்களின் குறைகளைத் தீர்க்கச் செய்த முயற்சிகள் எல்லாம் வீணாகப் போயின. அயர்லாந்தில் கதோலிக்குகள் சர்க்கார் உத்தியோகங்களைப் பெற முடியாமலும் பார்லிமெண்டின் அங்கத்தினர்களாக முடியாமலும் கஷ்டமடைந்தார்கள். அக்காலத்தில் அயர்லாந்தில் கிளர்ச்சி செய்தவர்களின் தலைவராக டேனியல் ஒ கானல் (Daniel o' Connell) என்ற ஒரு பாரிஸ்டர் இருந்தார். வெல்லிங்டன் பிரபுவுக்கு அரசாங்க முறைகளில் பரந்த நோக்கம் இல்லாவிடினும், அவர் கி. பி. 1829-ல் ஐரிஷ் கதோலிக்குகளின் குறைகளை நீக்க கதோலிக்

விடுதலைச் சட்டம் (Catholic Emancipation Act) ஒன்றைப் பிறப்பித்தார். அதன்படி கதோலிக்குகள் பார்லிமெண்ட் அங்கத்தினர்களாக ஆகலாம் என்பது ஏற்பட்டது. சோதனைச் சட்டம் முதலிய பல கொடிய சட்டங்களும் ரத்து செய்யப் பட்டன. இவ்வாறு கதோலிக்குகள் பிராடெஸ்டன்ட்களைப் போல எல்லா விஷயங்களிலும் உரிமைகளைப் பெற்றார்கள். ஆயினும் டேனியல் ஓ கானல் கி. பி. 1800-ல் இயற்றப் பட்ட ஐரிஷ் ஐக்கியச் சட்டத்தை ரத்து செய்துவிட ஒரு பெருங்கிளர்ச்சியைச் செய்யத் தொடங்கினர்.

கேள்விகள் :—

1. ஜார்ஜ் கானிங் என்பவரின் கொள்கை யாது?
2. கானிங் கிரேக்கர்களுக்கு உதவி புரிந்ததைப்பற்றித் தெரிந்த வரையில் எழுதுக.
3. எக்காரணத்தினுல் கதோலிக் விடுதலைச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது? அதனுல் கதோலிக்குகளுக்கு உண்டான நன்மைகள் யாவை?

---

## அத்தியாயம் 5.

### நான்காவது வில்லியம் (கி. பி. 1830—1837)

**வில்லியம் சிங்காதனம் ஏறுதல்**:—நான்காவது ஜார்ஜ் சந்ததியின்றி கி. பி. 1830-ல் இறந்த பின், அவருடைய இளைய சகோதரரான வில்லியம் பட்டத்திற்கு வந்தார். அவர் நற்குணம் வாய்ந்தவர். ஆனுல் அவருக்குத் தம் தந்தையைப் போல அரசாளும் திறமை சற்றேனும் கிடையாது. இருந்த போதிலும், அவர் விக் கட்சியின் தலைவரான கிரே பிரபுவை முதன் மந்திரியாக நியமித்துக்கொண்டு அவரைத் தமது இஷ்டப்படி ராஜ்ய பரிபாலனம் செய்ய இடங்கொடுத்தார்.

அவருக்குக்கீழ் ஐரிஷ் பிரபுவான பாமர்ஸ்டன் அயல் நாட்டுக் காரியதரிசியாக இருந்து வந்தார். இவ்வாறு விக் கட்சியார்கள் மறுபடியும் அரசாங்கத்தில் அதிகாரம் பெற்றார்கள்.

பார்லிமேண்ட் சீர்திருத்தத்தின் அவசியம்:—வில்லியமின் ஆட்சியில் விக் மந்திரிகள் பொதுஜனங்களின் நன்மைக்காக பல சட்டங்களை இயற்றினார்கள். அவற்றுள் பார்லிமென்டின் அமைப்பில் சீர்திருத்தம் செய்த சட்டம் ஒன்றாகும். பார்லிமென்டின் அமைப்பு முதலாவது எட்வர்டின் காலம்முதல் எவ்விதம் இருந்ததோ அவ்வாறே நான்காவது வில்லியம் காலம் வரையில் இருந்து வந்தது. இங்கிலாந்திலுள்ள ஒவ்வொரு ஜில்லாவும் பெரியதாயிருந்தாலும் சரி சிறியதாயிருந்தாலும் சரி, ஜனத்தொகை அதிகரித்தாலும் சரி குறைந்தாலும் சரி, பார்லிமென்டுக்கு இரண்டு அங்கத்தினர்களை அநேக ஆண்டுகளாக அனுப்பி வந்தது. இங்கிலாந்தில் தொழில் மாற்றங்கள் ஏற்பட்ட பிறகு புதிதாய்த் தோன்றின மாஞ்சஸ்டர் (Manchester), லீட்ஸ் (Leeds), பர்மிங்காம் (Birmingham), ஷெபீல்ட் (Sheffield) முதலிய பட்டணங்கள் பார்லிமென்டுக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் வோட் உரிமை (Vote) இல்லாமற் இருந்துவந்தன. மேலும், பழைய காலத்தில் ஜன நெருக்கமுள்ளனவாயும், இக் காலத்தில் ஜனங்களே இல்லாதனவாகவும் உள்ள பழைய சாரம் (Old Sarum) போன்ற சில கிராமங்கள் பார்லிமென்டுக்குப் பிரதிநிதிகளை வழக்கம்போல் அனுப்பிக்கொண்டேவந்தன. தவிர, இங்கிலாந்தில் பார்லிமென்டின் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் வோட் உரிமை பெற்றவர்கள் (Voters) சிலர்தான் இருந்தனர். அவர்களும் பிராசுதார்களாக இல்லை. இத்தகைய குறைகளை நீக்க இங்கிலாந்தில் நடுத்தர ஜனங்களும்,

தொழிலாளர்களும் பெருங் கிளர்ச்சி செய்யத் தொடங்கினார்கள்.

பார்லிமெண்ட் சீர்திருத்தச் சட்டம் (கி. பி. 1832):— மூன்றாவது ஜார்ஜின் காலத்திலேயே சிறிய பிட் பார்லிமெண்டின் அமைப்பில் சில மாறுதல்களைச் செய்ய முயன்றார். ஆனால் பிரெஞ்சுப் புரட்சியால் இச் சீர்திருத்தம் சிறிது காலம் தடைபட்டிருந்தது. வில்லியமின் ஆட்சியில் வெல்லிங்டன் பிரபு பிரதான மந்திரியாக இருக்கையில் பார்லிமெண்டின் அமைப்பில் சீர்திருத்தம் செய்யவேண்டி கிளர்ச்சிகள் உண்டாயின. அவர் டோரிக் கட்சியின் தலைவரானதால் இச் சீர்திருத்தங்களைச் செய்ய முதலில் சம்மதிக்கவில்லை. ஆனால், அவர் பொதுஜனங்களின் விருப்பத்துக்கு விரோதமாய் நடக்க முடியாமல் பார்லிமெண்டின் அமைப்பில் சீர்திருத்தம் செய்யச் சம்மதித்தார். பொதுஜன சபையில் 'விக்' கட்சியின் தலைவராயிருந்த ஜான் ரஸல் (John Russel) வெகு சிரமப்பட்டு ஒரு சீர்திருத்த மசோதா (Reform Bill) வை கி. பி. 1831-ல் கொண்டுவந்து அதைப் பார்லிமெண்ட் அங்கீகரிக்கும்படி செய்தார். அதன்படி (1) குடிகளில்லா ஊர்கள் பார்லிமெண்டின் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை இழந்தன. (2) தொழில் மாற்றங்களுக்குப் பிறகு புதிதாய் உண்டான பெரிய பட்டணங்கள் அவ்வுரிமையை அடைந்தன. (3) கிராமாந்தரங்களில் நிலச் சொந்தக்காரர்களுக்கு £ 50 குத்தகைத் தொகை செலுத்துகிறவர்களுக்கும் பட்டணங்களில் வருஷா வருஷம் வீட்டு வரியாக £ 10 செலுத்துபவர்களுக்கும், கிராமங்களில் வருஷந்தோறும் நில வரியாக £ 10 செலுத்துபவர்களுக்கும் வோட் உரிமை கொடுக்கப்பட்டது. இச் சட்டத்தினால் பயிரிடுகிறவர்களும், வர்த்தகர்களும், தொழிற்சாலைச் சொந்தக்காரர்களும் ஆன நடுத்தரமான ஜனங்கள் வோட் உரிமை பெற்றார்கள்.


ஹனேவீரியன் அரசர்களின் வம்சாவளி
ஜார்ஜ் I (1714—1727)
ஜார்ஜ் II (1727—1760)
பிரெடரிக்
கம்பர்லாந்து கோமகனர்
ஜார்ஜ் III (1760—1820)
ஜார்ஜ் IV (1820—1830)
வில்லியம் IV (1830—1837)
எட்வர்ட் கென்ட் கோமகனர் = விக்டோரியா
விக்டோரியா மகாராணியார் = ஆல்பர்ட் (1837—1901)
(1) விக்டோரியா = பிரெடரிக்
வில்லியம் II (ஜர்மனியச் சக்ரவர்த்தி)
(2) எட்வர்ட் VII = அலெக்ஸாண்டிரா (1901—1909) (டென்மார்க்)
(3) ஆலிஸ்
ஆலிஸ் = நிகலஸ் III (ரஷியச் சக்கரவர்த்தி)
ஆல்பர்ட் (ம. 1892)
ஜார்ஜ் V = மேரி (1910—1936)
எட்வர்ட் VIII (கி. பி. 1936 முதல்)

இவ்வாறு பார்லிமெண்டின் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையுள்ளவர்கள் (Electors) முன்பு இருந்ததைக் காட்டிலும் அதிகமானார்கள். ஆனால் தொழிற்சாலைகளிலும் நாட்டுப்புறங்களிலும் கூலிவேலை செய்யும் தொழிலாளர்கள் மட்டும் இன்னும் இவ்வுரிமையை அடையவில்லை.

முதல் சீர்திருத்தப் பார்லிமெண்டின் வேலை:—முதல் சீர்திருத்தச் சட்டத்தின்படி கி. பி. 1833-ல் பார்லிமெண்ட் தேர்தல் நடந்து ஒரு பார்லிமெண்டு அமைக்கப்பட்டது. இந்தப் பார்லிமெண்டில் விக் கக்ஷியார் பெரும்பான்மைக் கக்ஷியாராக இருந்தார்கள். இந்தப் பார்லிமெண்ட் பொதுஜன நன்மைக்காகப் பல காரியங்களைச் செய்தது. அவைகளுள் அடிமைகள் விடுதலைச் சட்டம் ஒன்றாகும். அதன்படி முதல் பார்லிமெண்ட் சீர்திருத்தச் சட்டம் இயற்றப்பட்டதற்குப் பின் அடிமைகளுக்குப் பிறந்த குழந்தைகளும் ஆறு வயதிற் குட்பட்ட அடிமைக் குழந்தைகளும் அடிமைத்தனத்தில் இருந்து விடுதலை செய்யப்பட்டார்கள். அடிமைச் சொந்தக் காரர்களுக்குப் பார்லிமெண்ட் இரண்டுகோடி பவுன்களைக் கொடுத்து எல்லா அடிமைகளையும் விடுதலை செய்யும்படி உத்தரவிட்டது. இவ்வாறு முதல் சீர்திருத்தப் பார்லிமெண்ட் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் அடிமைத்தனத்தை ஒழித்து அடிமைகளைச் சுதந்தரம் அடையும்படி செய்தது.

இந்தப் பார்லிமெண்ட் செய்த இரண்டாவது சீர்திருத்தம் ஏழை மக்களின் நிலைமையை உயர்த்துவதற்காக இயற்றப்பட்ட ஒரு சட்டமாகும். தொழிற் புரட்சிக்குப் பிறகு தொழிற்சாலைகளில் கூலி வேலை செய்து வந்த ஏழை மக்களின் கஷ்டங்களை நீக்குவதை அரசாங்கத்தார் தங்கள் கடமை என்று உணர்ந்து அவர்கள் பொருட்டு வருஷா வரு

ஷம் பொருளுதவி செய்து வந்தார்கள். அப்பொருளுதவி சரிவர நடப்பதற்காக மூன்று அதிகாரிகள் அடங்கிய சபையொன்று அமைக்கப்பட்டது.

கி. பி. 1833-ல் பொதுஜன சபையில் தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்களின் சௌகர்யத்திற்காக ஒரு சட்டம் (Factory Law) இயற்றப்பட்டது. அதன்படி 18 வயதிற்குட்பட்டவர்கள் நெசவுச் சாலைகளில் இரவில் வேலை செய்யக்கூடாது என்பதும், தொழிற்சாலைகளில் ஒவ்வொரு வாரத்திலும் எவ்வளவு நேரந்தான் வேலை செய்யவேண்டும் என்பதும் ஏற்பட்டன. ஒவ்வொரு தொழிற்சாலையும் இச் சட்டத்தின்படி நடத்தப்பட்டு வருகிறதா என்பதைக் கவனிக்கச் சில அதிகாரிகள் நியமிக்கப்பட்டார்கள். இந்தச் சட்டம் கைத்தொழிற்சாலைகளில் வேலைசெய்த ஏழை மக்களின் கஷ்டத்தை ஒருவாறு நீக்கியது.

நகர பரிபாலன சபை சீர்திருத்தச் சட்டம் (Municipal Act):—இச் சட்டம் கி. பி. 1834-ல் இயற்றப்பட்டது. அதன்படி ஒவ்வொரு நகரத்திலும் வரிகொடுப்பவர்கள் நகர பரிபாலன சபைக்குத் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பினார்கள்.

வில்லியமின் மரணம் :—வில்லியம் கி. பி. 1837-ல் சந்ததியின்றி இறந்துபோனார். அவருக்குப் பின், காலஞ்சென்ற அவருடைய தம்பியாகிய கென்ட் கோமகனான எட்வர்டின் (Edward, Duke of Kent) ஒரே புதல்வியான விக்டோரியா ஆங்கில அரசியானார்.

கேள்விகள் :—

1. பார்லிமென்டின் அமைப்பில் உள்ள குறைகள் யாவை? அக்குறைகளை நீக்க யாது செய்யப்பட்டது?

2. பார்லிமெண்ட் சீர்திருத்தச் சட்டத்தினால் உண்டான நன்மைகள் யாவை?
3. மெல்போர்ன் பிரபு பொதுஜன நன்மைக்காகச் செய்த சீர்திருத்தங்கள் யாவை?

---

## அத்தியாயம் 6.

### விக்டோரியா மகாராணியார் (கி. பி. 1837—1901)

ராணியாரின் குணாதிசயங்கள்:—விக்டோரியா பட்டத்திற்கு வரும்பொழுது அவருக்கு வயது பதினெட்டு. அவருக்குப் புத்தி நுட்பமும் சாமர்த்தியமும் அதிகம்.



அவர் சுயநலம் பாராட்டாமல் பொதுஜனநன்மைக்கே எக் காரியத்தையும் செய்வதாக உறுதியான தீர்மானம் செய்து கொண்டார். அவர் பட்டத்திற்கு வந்தவுடன், "ஈசனின் அருளால் நான் இப் பதவியை அடைகிறேன். ஒரு சிறுமி யாய் இருந்தாலும் என்னால் இயன்றமட்டில் நான் பொது

ஜன நன்மையைத் தரக்கூடிய காரியங்களையே செய்வேன்'' என்று கூறினார்.

மெல்போர்ன் பிரபு :—(கி. பி. 1837—1841) விக் கட்சியின் தலைவரான மெல்போர்ன் பிரபு பிரதான மந்திரியாக இருந்து ராணியாருக்கு ராஜ்ய விஷயங்களில் உதவிபுரிந்தார். ஆயினும், ராணியார் தமக்கு எக்காலத்திலும் ஆட்சி புரிவதில் உதவி செய்யக்கூடிய ஒருவரையே விவாகம் செய்துகொள்ள வேண்டும் என்று விரும்பினார். ஆகையால் விக்டோரியா ராணியார் ஆல்பர்ட் (Albert) என்ற ஒரு ஜர்மனிய ராஜ குமாரரை மணம் புரிந்தார். மெல்போர்ன் பிரபுவுக்குப் பிறகு ராபர்ட் பீல் (கி. பி. 1841—1846) பிரதான மந்திரியாய் இருந்தார்.

சுதந்தரவாதிகள் (The Chartists):—மகாராணியார் பட்டத்துக்கு வந்தபின் நாட்டில் பொதுஜனங்கள் அநேக காரணங்களால் அதிருப்தியடைந்து இருந்தார்கள். டேனியல் ஓ கானல் பொதுஜன சபையில் ஐரிஷ் ஐக்கியச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டும் என வாதாடிக்கொண்டு வந்தார். அவரும் அவரது கட்சியினர்களும் ஆங்கில ராஜாங்கத்துக்குத் தொந்தரவை விளைவித்து வந்தார்கள். ஆனால் விக் கட்சியினர்கள் அவர்களைச் சமாதானப்படுத்தப் பல முயற்சிகளைச் செய்தார்கள். இங்கிலாந்தில் தொழிற்சாலைகளில் வேலை செய்த வர்கள் சீர்திருத்த மசோதாவுக்குப் பிறகுகூட அநேக கஷ்டங்களை அனுபவித்து வந்தார்கள். அவர்களுடைய கூலியோ மிகக்கொஞ்சம். ரொட்டித் துண்டின் விலையோ, தானியச் சட்டங்களினால் அயல் நாட்டு தானியங்கள் பிரிட்டிஷ்த் தீவுகளுக்குக் கொண்டு வரக்கூடாமற் செய்யப்பட்டதால், அதிகமாயிற்று. அதனால் ஏழைக் கூலியாட்கள் சொல்லக்கூடாத

கஷ்டங்களை அடைந்தார்கள். ஆனதுபற்றி அந்நகரிலிருந்த ஜனங்கள் அதிக சுதந்தரம் பெற நினைத்து ஆங்கில ராஜாங்கத்தாரிடம் பார்லிமெண்ட் தேர்தல் விஷயங்களில் சில சீர்திருத்தங்களைச் செய்யவேண்டுமென கி. பி. 1838-ல் ஒரு பெருங் கிளர்ச்சி உண்டாக்கினார்கள். ஆகையால் அவர்கள் சுதந்தரவாதிகள் என அழைக்கப்பட்டார்கள். அவர்கள் ஒரு பத்திரத்தை எழுதி அதில் கண்ட ஐந்து சுதந்தரங்களைத் தங்களுக்கு அளிக்கும்படி ராஜாங்கத்தாரை வேண்டினார்கள். அதற்கு "மக்களின் சுதந்தரப் பத்திரம்" என்று பெயர். அதில் (1) ஒவ்வொரு மனிதருக்கும் வோட் உரிமை கொடுக்கப்படவேண்டும் (2) ஒவ்வொருவரும் இரகசியமாய் அபேக்ஷகர்கள் அறியாதபடி வோட் உரிமையை அளிப்பதற்கு வேண்டிய முறையை ஏற்படுத்தவேண்டும். (3) பார்லிமெண்ட் மகா சபைக்கு ஒவ்வொரு வருஷமும் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். (4) பார்லிமெண்ட் தேர்தலுக்காக இங்கிலாந்து சம ஜனத் தொகையுள்ள ஷயர்களாகப் பிரிக்கப்படவேண்டும். (5) பார்லிமெண்ட் மெம்பர்களுக்கு மாதச் சம்பளம் கொடுக்கப்படவேண்டும் என்பன போன்ற அநேக ஷரத்துக்கள் காணப்பட்டன. இப் பத்திரத்தில் கண்டுள்ள உரிமைகளை உடனே அளிப்பதற்குப் பார்லிமெண்ட் சம்மதிக்கவில்லை. ஆயினும், காலக்கிரமத்தில் இந்த உரிமைகள் அரசாங்கத்தாரால் பொது மக்களுக்கு அளிக்கப்பட்டன.

பீல் தானியச் சட்டங்களை ரத்து செய்தல்:—டோரிக் கட்சித் தலைவரான ராபர்ட் பீல் பிரதான மந்திரியானவுடன் டோரி என்னும் தமது கட்சியின் பெயரை நீக்கிவிட்டு கன்ஸர்வேடிவ் (Conservative)—பழைய ஏற்பாட்டில் பற்றுள்ளவர்கள்—என்னும் ஒரு புதிய பெயரைக் கொடுத்தார். அவர் ஒரு கொள்கையைத் திருட்டுத்தனமாக அனுஷ்டித்து

வரவில்லை. அவர் தம்முடைய கொள்கைகளும் அபிப்பிராயங்களும் பொதுஜன நன்மைக்கு விரோதமானவை என்று தெரிந்துகொண்டால் அவைகளை மாற்றிக் கொள்வார். இது அவர் செய்த முக்கிய சீர்திருத்தங்களுள் ஒன்றில் நன்கு விளங்கும.

பிரெஞ்சுக்காரர்களிடம் உள்ள விரோதத்தினுல் ஆங்கிலப் பார்லிமெண்டில் அதிகாரம் பெற்றிருந்த மிராசுதார்கள் கி. பி. 1815-ல் தானியச் சட்டங்களை (Cornlaws) இயற்றி வெளிநாடுகளிலிருந்து வரும் தானியங்களின்மீது அதிக வரியை விதிக்கும்படி செய்தார்கள். அவர்களுக்கு நன்மை ஏற்பட்ட போதிலும் ஏழை மக்களுக்குக் கஷ்டம் அதிகரித்தது. பார்லிமெண்ட் சபையின் அங்கத்தினர்களில் பெரும்பான்மையோர் மிராசுதார்களாயிருந்தபடியால் இரண்டு ராஜீயக் கட்சியார்களுள் தான்யச் சட்டத்தை ரத்து செய்ய இஷ்டப்படாமல் இருந்து வந்தார்கள். ஆகையால் தானியச் சட்டங்களை எதிர்ப்பதற்காக ஒரு சங்கம் (Anti-Corn-Law League) கி. பி. 1839-ல் மாஞ்சஸ்டர் நகரில் சில வியாபாரிகளால் ஏற்படுத்தப்பட்டது. இச்சங்கத்தில் ரிச்சர்ட் காப்டன் (Richard Cobden), ஜான் ப்ரைட் (John Bright) என்ற இருவர்களும் முக்கியமானவர்கள் ஆவர். வெளிநாட்டுத் தானியம் பிரிட்டிஷ்த் தீவுகளுக்கு வரி கொடாமல் வரவேண்டும் என்பதுதான் இசசங்கத்தின் முக்கிய நோக்கம். டோரிக் கட்சியைச் சேர்ந்த பீல் தானியச் சட்டங்களை ரத்து செய்யத் தயங்கினுர். ஆனுல் அயர்லாந்தில் உருளைக்கிழங்கு விளையாததால் ஒரு கொடிய பஞ்சம் கி. பி. 1845-ல் ஏற்பட்டபொழுது தானியச் சட்டங்களால் வெளிநாட்டுத் தானியம் கிடைக்காமற் போயிற்று. அதனுல் போதுமான உணவுப்பொருள் இல்லாமல் ஆயிரக்கணக்கான ஜனங்கள் தவித்தார்கள். இதைக்

கண்ட பீல் அவைகளின் தீமையை உணர்ந்து, விக் கட்சியினரின் உதவியைக்கொண்டு அவைகளை கி. பி. 1846-ல் ரத்து செய்துவிட்டார். இவ்வாறு செய்ததால் கன்ஸர்வேடிவ் கட்சியைச் சேர்ந்தவர்கள் அவரை வெறுத்தார்கள். இம்மாதிரியாக பீல் இங்கிலாந்திற்கு வெளி நாட்டுச் சாமான்களை வரி கொடாமல் கொண்டுவந்து வியாபாரம் செய்யலாமென்று ஏற்படுத்தினார். தானியச் சட்டங்களை ரத்து செய்து வரிகொடா வியாபார (Free Trade) த்தை ஏற்படுத்துவதற்கு பேருதவி செய்தவர் வில்லியம் ஈவர்ட் கிளாட்ஸ்டன் (William Ewart Gladstone) என்ற லிவர்பூல் நகரத்து ஒரு வியாபாரியின் புதல்வர். தானியச் சட்டங்களை ரத்து செய்யக்கூடாதென்று வாதம் செய்த கன்ஸர்வேடிவ் கட்சியார்களுள் யூத குலத்தைச் சேர்ந்த பெஞ்சமன் டிஸ்ரேலி (Benjamin Disraeli) முக்கியமானவர்.

பொருட் காட்சி (கி. பி. 1851):—டோரிகள் தங்களது கட்சியின் பெயரை மாற்றிக்கொண்டது போலவே விக் கட்சியினர்களும் தமது கட்சிப் பெயரை மாற்றி லிபரல் (Liberal) பரந்த நோக்கமுடையவர்—என்ற புதிய பெயரை வைத்துக் கொண்டார்கள். கி. பி. 1846-ல் பீல் பிரதான மந்திரிப் பதவியை ராஜிநாமா செய்ததும், விக் கட்சியின் தலைவரான ஜான் ரஸல் பிரபு பிரதான மந்திரியாக ஆனார். அவர் பிரதான மந்திரியாக இருக்கையில், லண்டன் நகரில் கி. பி. 1851-ல் ஒரு பெரிய பொருட்காட்சி* (Exhibition) நடைபெற்றது. அதற்காக அநேக தேசங்களிலிருந்து பலவிதமான பொருள்களும் அங்கு கொண்டுவரப்பட்டன. பல நாட்டார்கள்

* வெம்பிளி (Wembley) யில் அத்தகைய காட்சி ஒன்று (1924) நடைபெற்றது. நமது நாட்டிலிருந்து காட்சிப் பொருள்கள் அனுப்பப்பட்டன.

கூட்டம் கூட்டமாய் வந்து அக்காட்சியைக்கண்டு ஆனந்தித்துச் சென்றார்கள். இதில் அதிக முயற்சி எடுத்துக்கொண்டவர் மகாராணியாரின் கணவரான ஆல்பர்ட் பிரபுவே. பல நாட்டார்களும் ஒருவரோடு ஒருவர் சண்டையிடாமல் சிநேகத் தன்மையுடன் இருப்பதற்கு இதுவே ஒரு சிறந்த வழி என்பது அவருடைய நோக்கம்.

கிரிமியன் போர் (கி. பி. 1854—1856):—ஜான் ரஸ்ஸலுக்குப் பிறகு அபர்டீன் கி.பி. 1852 முதல் 1855 வரையில் பிரதான மந்திரியாய் இருந்தார். அப்பொழுது கிளாட்ஸ்டன் பொக்கிஷ விஷயங்களைக் கவனிக்கும் மந்திரியாக இருந்து வரவு செலவு திட்டங்களை வெகு திறமையுடன் தயாரித்து வந்தார். இச்சமயத்தில் ரஷ்யா சக்கரவர்த்தியான முதலாவது நிக்கலஸ் துருக்கி சாம்ராஜ்யத்தை ஜயித்து ஐரோப்பிய மன்னர்கள் பங்கிட்டுக்கொண்டு விடலாம் என்று கெட்ட எண்ணம் கொண்டார். ஒரு சமயம் அவர், "ஒரு வியாதியஸ்தன் நம் கைவசத்தில் இருக்கிறான். அவன் நம்மைவிட்டு நழுவி உயிர் பிழைத்தால் அது ஒரு பெரிய துர் அதிர்ஷ்டமாகும்." என்றார். இந்த வார்த்தைகள் நிக்கலஸின் கெட்ட எண்ணத்தை வெளிக்காட்டுகிறதல்லவா? மேலும், நிக்கலஸ் துருக்கி சாம்ராஜ்யத்தின் பெரும்பாகத்தை ரஷ்யா எடுத்துக் கொள்ளவேண்டும் என்று விரும்பினார். ஆனால் அவர் துருக்கி சாம்ராஜ்யத்தில் கஷ்டங்களை அனுபவித்து வந்த கிறிஸ்தவர்களைப் பாதுகாக்கவேண்டும் என்று தெரிவித்துக்கொண்டு வந்தார்; கடைசியில் கி. பி. 1853-ல் துருக்கி சுல்தானின் அதிகாரத்திற்கு உட்பட்ட நாடுகளில் மால்டேவியா, வல்லேச்சியா என்ற இரண்டையும் கைவசப்படுத்திக் கொண்டார். இதைக் கண்ட பிரெஞ்சுக்காரர்களும், ஆங்கிலேயர்களும் ஒரு சிநேக உடன்பாடு செய்து கொண்டு ரஷ்யாக்

கைவசப்படுத்திக் கொண்ட நாடுகளை விட்டுவிடும்படி ரஷ்யா வைக் கேட்டனர். அதற்கு ரஷ்யா உடன்படாததால் ஆங்கி லேயரும் பிரெஞ்சுக்காரரும் துருக்கியரின் கட்சியில் சேர்ந்து கொண்டனர். இவ்வாறு ரஷ்யருக்கும் துருக்கியருக்கும் ஒரு போர் தொடங்கியது. இந்த யுத்தம் ரஷ்யாவின் தென் பாகத் திலுள்ள கிரிமியா (Crimea) என்ற ஒரு சிறிய தீபகற்பத் தில் நடந்ததால், கிரிமியன் போர் (Crimean War) என்று அழைக்கப்படுகிறது.

நேசக் கட்சியினரின் படைகள் கி. பி. 1854-ல் கருங் கடலைக் கடந்து கிரிமியாவில் யூபடோரியா (Euphatoria) என்னுமிடத்தில் வந்து இறங்கினர். பிறகு ஸெபாஸ்டபூல்




ஆ—ஆல்மா நதி. யூ—யூபடோரியா. ஸெ—ஸெபாஸ்டபூல் இ—இங்கர்மன். பா—பாலக்லாவா.

(Sebastapool) என்ற ரஷியர்களது கோட்டையைப் பிடிக்க எண்ணி அப்படைகள் தெற்கு நோக்கி வந்தன. ஒரு ரஷ்யச்

சேனை அவைகளை ஆல்மா (Alma) நதிக்கரையில் சந்தித்துப் போர் புரிந்தது. இந்தச் சண்டையில் நேசக் கட்சியினர் வெற்றியடைந்தனர் இதற்குப் பிறகு அவர்கள் ஸெபாஸ்டபூல் கோட்டையைப் பத்து மாதங்களுக்குமேல் முற்றுகை செய்தார்கள். பிறகு ரஷியப் படைகள் அதைப் பாதுகாப்பதற்கு ஆங்கிலேயருடன் பாலக்லாவா (Balaclava), இங்கர்மன் (Inkermann) என்ற இடங்களில் போர் புரிந்தன. இவைகளில் ஆங்கிலப் போர் வீரர்கள் வெகு ஆண்மையுடன் போர் புரிந்து வெற்றியடைந்தார்கள். பிறகு மழைக்காலம் தொடங்கியது. பிரெஞ்சு இங்கிலீஷ் சேனைகள் அமிதக் குளிரினால் கஷ்டம் அடைந்தன. மேலும், ஆங்கிலச் சேனையில் கொடிய வியாதி பரவியதால் அநேக போர்வீரர்கள் மாண்டார்கள். இச் செய்தியைக் கேட்ட ஆங்கிலேயர்கள் ராஜாங்கத்தார்மீது கோபம் அடைந்தார்கள். இச்சமயத்தில் பாமர்ஸ்டன் பிரபு கி. பி. 1855-ல் பிரதான மந்திரியானார். அவர் இந்தப் போரை வெகு திறமையுடன் நடத்தி நேசக் கட்சியினருக்கு வெற்றி உண்டாகும்படி செய்தார். ஸெபாஸ்டபூல் நகரை ஆங்கிலேயர் கைப்பற்றிக்கொண்டனர். பிறகு ரஷியர்கள் நேசக் கட்சியினருடன் கி. பி. 1856-ல் பாரிஸ் நகரில் சமாதானம் செய்துகொண்டு கிரிமியன் போரை முடிவுக்குக் கொணர்ந்தார்கள். அதன்படி ரஷியர்கள் கருங் கடலில் தங்களது கப்பற் படைகளை வைத்துக் கொள்ளக் கூடாது என்று ஏற்பட்டது.

சிப்பாய்க்கலகமும் மகாசாஸனமும்:—இப் போர் முடிந்தவுடன் ஆங்கிலேயருக்குத் திகில் உண்டாகும்படி இந்தியாவில் கி. பி. 1857-ல் சிப்பாய்க் கலகம் (Sepoy Mutiny) நடந்தது. அரசாங்கத்தார் அதை வெகு திறமையுடன் அடக்கிவிட்டனர். இதற்குப் பிறகு பார்லிமெண்ட் இந்தியாவில் கம்பெனியாரின்

ஆட்சியை ஒழித்து ராணியாரின் ஆட்சியை ஏற்படுத்தியது மகாராணியார் கி. பி. 1858-ல் இந்தியர்களால் 'மஹாசாஸனப் பத்திரம்' என்று கொண்டாடப்பட்டு வரும் 'அரசாங்க அறிக்கை' ஒன்றைப் பிரசுரம் செய்தனர்.

விக்டோரியா காலத்தில் பிரதான மந்திரிகள்:—
(கி. பி. 1874 வரை)

| | | | |
|---|---|---|---|
| 1. | மெல்போர்ன் கோமகனார் | கி. பி. | 1835—1841 |
| 2. | ராபர்ட் பீல் | ,, | 1841—1846 |
| 3. | ஜான் ரஸல் | ,, | 1846—1852 |
| 4. | அபர்டீன் | ,, | 1852—1855 |
| 5. | பாமர்ஸ்டன் (I) | ,, | 1855—1858 |
| 6. | டர்பி (II) | ,, | 1858—1859 |
| 7. | பாமர்ஸ்டன் (II) | ,, | 1859—1865 |
| | பாமர்ஸ்டனின் மரணம் | ,, | 1865 |
| 8. | ஜான் ரஸல் | ,, | 1865—1866 |
| 9. | டர்பி (III) | ,, | 1866—1868 |
| 10. | டிஸ்ரேலி (I) | ,, | 1868 |
| 11. | கிளாட்ஸ்டன் | ,, | 1868—1874 |

இரண்டாவது பார்லிமெண்ட் சீர்திருத்தச் சட்டம் (கி. பி 1867):—பாமர்ஸ்டன் பிரபு பிரதான மந்திரியாய் கி. பி. 1865 வரையில் இருந்து பிறகு இறந்துபோனார். அதன்பின் ஜான் ரஸல் பிரபு மறுபடியும் பிரதான மந்திரியானார். இச்சமயத்தில் கிளாட்ஸ்டன் பொதுஜன சபையில் முதன்மைபெற்று இருந்தார். அவர் ஒரு சீர்திருத்த மசோதாவைத் தயாரித்து அதைப் பார்லிமெண்டின் முன் கொண்டுவந்தார். ஆனால் அந்த மசோதா பார்லிமெண்டாரின் பெரும்பான்மையோரால் அங்கீகரிக்கப்படவில்லை. இதனால் ரஸல் பிரபுவும் கிளாட்ஸ்டனும் தங்களுடைய பதவிகளை ராஜிநாமா செய்துவிடவே, கன்ஸர்வேடிவ் கட்சித் தலைவரான டர்பி (Derby) பிரதான மந்திரி

யாகவும், டிஸ்ரேலி பொதுஜன சபையில் முதன்மை பெற்றவராகவும் ஆனார்கள். டிஸ்ரேலி, கிளாட்ஸ்டன் கொண்டுவந்த மசோதாவில் சில மாறுதல்களைச் செய்து அதைப் பார்லிமெண்ட் அங்கீகாரம் செய்யும்படி செய்தார். அதற்கு இரண்டாவது பார்லிமெண்ட் சீர்திருத்தச் சட்டம் என்று பெயர். அதன்படி ஒவ்வொரு பட்டணத்திலும் வீட்டுச் சொந்தக்காரர்களும் சர்க்காருக்கு வருஷத்தில் £ 10 வரியாகச் செலுத்தினவர்களும் நாட்டுப்புறங்களில் வருஷத்திற்கு £ 12 நிலவரி கொடுப்பவர்களும் பார்லிமென்டின் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் 'வோட்' உரிமையைப் பெற்றார்கள். சிறிய பட்டணங்கள் அந்த உரிமையை இழந்தன. ஆனால் ஜனத்தொகை மிகுதியாயுள்ள பெரிய நகரங்கள் அதிக அங்கத்தினர்களை அனுப்புவதற்கு உரிமையைப் பெற்றன. இச் சட்டம் தொழிலாளர்களுக்கு வோட் உரிமையை அளித்தது. ஆனதுபற்றி அரசாட்சியில் வேலையாட்களுக்குக் கொஞ்சம் அதிகாரம் உண்டாகியது.

**கிளாட்ஸ்டன் பிரதான மந்திரியாதல் (கி. பி. 1868—1874):**—லிபரல் கட்சியின் தலைவரான கிளாட்ஸ்டன் பிரதான மந்திரியாயிருந்து ராஜ்ய பரிபாலனம் செய்துவந்தார். அவர் மகா புத்திமான். அவர் ஆக்ஸ்பர்ட் நகரில் கல்வி கற்றுத் தேர்ச்சி யடைந்தவர். அவர் தானியச் சட்டங்களை ரத்து செய்வதற்கு ராபர்ட் பீலுக்கு உதவி புரிந்தார். மேலும், அவர் அபர்டீன் பிரதான மந்திரியாக இருக்கையில் போக்கிஷத் தலைவர் (Chancellor of the Exchequer) பதவியில் இருந்து இங்கிலாந்தின் பொருள் நிலையை விருத்திபண்ணப் பாடுபட்டார். தவிர, அவர் நாட்டில் அமைதியை உண்டாக்கிப் பொதுஜன நன்மைக்காக பல சீர்திருத்தங்களைச் செய்தார். அவைகளுள் முக்கியமானவை மூன்று. 1. ஐரிஷ் நிலச்

சட்டம் (Irish Land Act) கி. பி. 1870-ல் இயற்றப் பட்டது. அயர்லாந்தில் மிராசுதார்கள் குடியானவர்களைக் கஷ்டப்படுத்தாமல் இருப்பதற்காக இச் சட்டம் ஏற்பட்டது. 2. கட்டாயக் கல்விச் சட்டம் (The Compulsory Education Act) பிறப்பிக்கப்பட்டது. இவ்விஷயமாக வெகு பாடுபட்டவர் பார்ஸ்டர் (Forster) என்ற ஒரு ஆங்கி



வில்லியம் ஈவர்ட் கிளாட்ஸ்டன்.

லேயர். இச் சட்டத்தின்படி இங்கிலாந்திலுள்ள பன்னிரண்டு வயதுக்கு உட்பட்ட எல்லாச் சிறுவர்களும் ஆரம்பக் கல்வி*

* பின்னர் (1891) அநேகமாய் எல்லாப் பாடசாலைகளிலும் சம்பளமின்றி ஆரம்பக் கல்வி சிறுவர்களுக்குக் கற்பிக்கப்பட வேண்டுமென்று ஏற்பட்டது.

யைக் கற்கவேண்டுமென்று கட்டாயப்படுத்தப்பட்டது. 2. பார்லிமெண்ட் சபையின் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்தலில் 'வோட்' உரிமை பெற்ற ஒவ்வொருவரும் தமது இஷ்டப்படி பிறர் அறியாமல் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக இரகசிய வோட் உரிமைச் சட்டம் (Ballot Act) கி.பி. 1871-ல் பிறப்பிக்கப்பட்டது. இச் சட்டம் பார்லிமெண்ட் தேர்தலில் உள்ள பெரும் கெடுதல்களை ஒழிக்க ஏற்பட்டது. வோட்டர்களுக்குப் பணம் கொடுத்து அவர்களுடைய 'வோட்'களை அடைய முடியாமற் போய்விட்டது. ஏனெனில் வோட்டர்கள் யாரிடத்திலாவது பணம் பெற்றால் அவருக்குத்தான் தங்களது வோட்களைப் பதிவு செய்வார்கள் என்று நிச்சயமாகச் சொல்வதற்கு இடமில்லாமற் போயிற்று. ஆகையால் வோட் உரிமை பெற்றவர்கள் தங்களது இஷ்டப்படி 'வோட்'களைப் பதிவு செய்ய இச்சட்டம் உதவி செய்தது.

கிளாட்ஸ்டனும் அன்னிய நாடுகளும்:—கிளாட்ஸ்டன் தம்மால் இயன்றவரையில் இங்கிலாந்து அயல் நாடுகளுடன் சமாதானத்துடன் இருக்க முயன்றார். ஐரோப்பாவில் ஏற்படும் போரில் இங்கிலாந்து கலக்காமலே அங்கே ஏற்படும் வழக்குகளை மட்டும் தீர்மானம் செய்து அமைதியைப் பரவச் செய்யவேண்டும் என்பது அவரது நோக்கம். இங்கிலாந்து ஐரோப்பிய விவகாரங்களில் தலையிடுவதில்லை என்ற கொள்கையை அனுஷ்டித்து வந்ததால் சில கெடுதல்கள் சம்பவித்தன. ருஷியர்கள் கி. பி. 1856-ல் செய்துகொண்ட உடன்பாட்டின்படி நடக்கச் சம்மதிக்காமல் கருங்கடலில் தங்களது போர்க் கப்பல்களை மறுபடியும் வைக்க உத்தேசித்தார்கள். ருஷியர்கள் உடன்பாட்டின்படி நடக்கவேண்டும் என்று ஆங்கில ராஜாங்கத்தார் அவர்களைக் கட்டாயப்படுத்த ஒரு காரியமும் செய்யவில்லை.

கிளாட்ஸ்டன் பிரதான மந்திரியாயிருக்கையில், அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் ஏற்பட்டது. ஐக்கிய நாடுகளில் வடபாகத்திலுள்ளவை அடிமைத்தனத்தை ஒழித்துவிட வேண்டும் என்றன. ஆனால் தென்பாகத்திலுள்ள நாடுகளெல்லாம் அடிமைத்தனத்தை ஒழிக்கச் சம்மதிக்கவில்லை. இவ்வட நாடுகளுக்கும் தென் நாடுகளுக்கும் ஒரு யுத்தம் ஏற்பட்டது. இதில் கிளாட்ஸ்டன் இங்கிலாந்தை ஒரு கட்சியிலும் சேர்த்துக் கொள்ளாமல் செய்துவந்தார். ஆனால் தென் நாடுகள் செய்த அடாத காரியங்களைக் கண்ட ஆங்கில அரசாங்கத்தார் வட நாடுகளின் கட்சியில் சேர்ந்து கொண்டனர். உள் நாட்டுப்போர் தொடங்கினபின், அலபாமா என்ற கப்பலை தென் நாடுகளுக்கு அனுப்பக் கூடாது என்று ஆங்கில அரசாங்கத்தார் அக் கப்பல் கட்டின கம்பெனியாருக்கு உத்தரவிட்டனர். ஆனால் அக்கம்பெனியார் அரசாங்க உத்தரவைப் பெறுவதற்கு முன்னமேயே அலபாமாவை அனுப்பிவிட்டனர். ஆயினும் ஆங்கில அரசாங்கத்தாரின் செய்கையைக் கண்ட தென் நாடுகள் இங்கிலாந்தை நஷ்டத்துக்கு ஈடுபண்ண வேண்டுமென கேட்டன. கடைசியில் தங்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்திற்கு ஈடாக இங்கிலாந்து £ 3,000,000 அமெரிக்கன் ஐக்கிய நாடுகளுக்குக் கொடுக்கவேண்டுமென்று ஏற்பட்டது. அதனால் ஆங்கிலேயர்கள் கிளாட்ஸ்டனை பிரதான மந்திரிப் பதவியை ராஜிநாமா கொடுத்துவிடும்படி செய்தார்கள்.

பிரெஞ்சு ஜர்மனியப் போர் (கி. பி. 1870):-கிளாட்ஸ்டன் பிரதான மந்திரியாயிருக்கையில் பிரான்ஸுக்கும் பிரஷ்யாவுக்கும் ஒரு பெரிய யுத்தம் ஏற்பட்டது. பிரஷியர்கள் பிரான்ஸின்மீது படையெடுத்து பாரிஸ் நகரைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பிரெஞ்சுக்காரர்கள் இப்போரில் தோல்வியடைந்ததால், பிரான்ஸின் கிழக்குப் பாகத்திலுள்ள ஆல்

ஸஸ் (Alsace), லோரேய்ன் (Lorraine) என்ற மாகாணங்களை ஜர்மனியர்களுக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு உடன்படிக்கை செய்துகொண்டார்கள். பிறகு பிரான்ஸில் குடியரசு ஏற்பட்டது. அப்பொழுது ஏற்பட்ட குடியரசு அந்நாட்டில் இன்றைக்கும் நிலைத்திருக்கிறது. இக்காலத்தில் மத்திய ஐரோப்பாவிலுள்ள சிறிய மாகாணங்கள் எல்லாம் பிரஷியா மன்னரான வில்லியமின் ஏகாதிபத்தியத்தை ஒப்புக்கொண்டு அவரை ஜர்மனிச் சக்கரவர்த்தியாகச் செய்துகொண்டன. இது முதற்கொண்டு மத்திய ஐரோப்பாவில் ஜர்மனி மிகவும் அதிகாரம் படைத்த தேசமாக இருந்து வந்தது.

டிஸ்ரேலி பிரதான மந்திரியாதல் (கி. பி. 1874–1880):– கி. பி. 1874-ல் கிளாட்ஸ்டன் பிரதான மந்திரிப் பதவியை ராஜிநாமாச் செய்ததும், கன்ஸர்வேடிவ் கட்சித் தலைவரான டிஸ்ரேலி முதன் மந்திரியானார். தம்முடைய கட்சியைப் பலப்படுத்த வேண்டும் என்பதும் பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தை விருத்தி செய்ய வேண்டும் என்பதும் அவருடைய நோக்கங்கள். அவர் தானியச் சட்டங்களை ரத்து செய்யக் கூடாது என்று வாதாடியதால் தமது கீர்த்தியை இங்கிலாந்து முழுவதும் பரவும்படி செய்திருந்தார். அவர் பிரதான மந்திரியானவுடன், கிளாட்ஸ்டன் செய்த சீர்திருத்தங்கள் போதுமானவையென்று நினைத்து, அரசியல் முறையில் வேறு சீர்திருத்தங்களைச் செய்யச் சம்மதிக்கவில்லை. ஆனால் அவர் இங்கிலாந்துக்கு ஐரோப்பாவில் அதிகக் கண்ணியம் ஏற்படும்படி முயன்றார். அப்பொழுது பொதுஜன சபையிலுள்ள ஐரிஷ் சுயராஜ்யக் கட்சியினர் அதிக திறமை வாய்ந்த பார்னல் (Parnell) என்பவருடைய தலைமையின்கீழ் இருந்து டிஸ்ரேலிக்கு அதிகத் தொந்தரவை விளைவித்துவந்தனர்.

பர்லின் உடன்படிக்கை (கி. பி. 1878):—கிரிமியன் போருக்குப் பிறகு கூடத் துருக்கி மன்னர்கள் தங்களது கிறிஸ்தவக் குடிகளை இம்சை செய்து வந்தார்கள். ஆகையால் துருக்கி அரசரின் ஆட்சியின்கீழ் உள்ள கிறிஸ்தவர்கள் கலகம் செய்தார்கள். ஹெர்ஸகோவினாவில் கி. பி. 1875-ல் கிறிஸ்தவர்கள் கலகம் செய்தார்கள். கஷ்டம் நேர்ந்த காலையில் அவர்கள் வழக்கம் போல ரஷியாவின் உதவியை நாடினார்கள். பல்கேரியாவில் கி. பி. 1876-ல் தோன்றிய கிறிஸ்தவர்களின் கலகம் துருக்கியர்களால் வெகு கடுமையாக அடக்கப்பட்டது. கிறிஸ்தவர்களை மிகக் கொடுமையாக நடத்துவதைக் கேட்ட ஐரோப்பிய மன்னர்கள் ஒன்று சேர்ந்து பால்கன் தீபகற்பத்திலே துருக்கியர்களின் ஆட்சிக்கு உட்பட்ட நாடுகளிலெல்லாம் சுய ஆட்சியை ஏற்படுத்த வேண்டுமென கட்டாயப்படுத்தியிருக்கலாம். ஒரு ரஷியச் சைன்யம் கி. பி. 1877-ல் பால்கன் மலைக்கணவாய்களின் வழியாகச் சென்று, கான்ஸ்டான்டிநோபில் நகரைக் கைப்பற்றிக் கொண்டது. துருக்கியர்களின் கொடுமையைக் கண்ட ஆங்கில ராஜாங்கத்தார் அவர்களுக்கு உதவிபுரிய இஷ்டப்படவில்லை. ஆகிலும் ரஷியாவின் பலத்தைக் குறைக்க எண்ணி, டிஸ்ரேலி (பீகன்ஸ்பீல்ட் பிரபு) மார்மோரா கடலுக்கு ஒரு பெரிய கப்பற்படையைத் துருக்கிக்கு உதவி செய்ய அனுப்பினார். இதைக் கண்ட ரஷியர்கள் துருக்கியர்களுடன் சமாதானம் செய்துகொள்ள இஷ்டப்பட்டார்கள். ஐரோப்பியத் தலைவர்கள் எல்லாரும் பர்லின் (Berlin) நகரில் கூடி



டிஸ்ரேலி.

ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டார்கள். அதன்படி பீகன்ஸ்பீல்ட் பிரபுவும் ஸாலிஸ்பரியும் பிரிட்டிஷ்த் தீவுகளின் பிரதிநிதிகளாகச் சென்றார்கள். அதன்படி (1) பால்கன் மலைத் தொடருக்கு வடக்கேயுள்ள பல்கேரியாவின் பாகம் துருக்கி சுல்தானுக்குக் கப்பம் செலுத்திவிடுவது என்ற நிபந்தனையின் பேரில் ஒரு சுயராசு நாடாகச் செய்யப்பட்டது. (2) அம் மலைத்தொடருக்குத் தெற்கேயுள்ள பல்கேரியாவின் பாகம் ஒரு கிறிஸ்தவ மன்னரின் ஆட்சியின் கீழ் வைக்கப்பட்டது. (3) மாண்டிநீக்ரோ, ஸர்வியா, ருமேனியா முதலிய நாடுகள் சுயேச்சை பெற்றன (4) பாஸ்னியாவை ஆஸ்டிரியா வைத்துக்கொள்வதென்று ஏற்பாடாயிற்று. (5) ருஷியாவும் கிரீஸும் சில நாடுகளைப் பெற்றன. (6) இங்கிலாந்து ஆசியாமைனரைப் பாதுகாப்பது என்ற நிபந்தனையின் பேரில் ஸைப்ரஸ் என்ற தீவை அடைந்தது. இவ்வாறு கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் விவாதங்கள் ஒருவாறு தீர்மானம் செய்யப்பட்டன. பீகன்ஸ்பீல்ட் பிரபு, கண்ணியத்துடன் சமாதானம் செய்துகொண்டதாகவும் ருஷியர்களின் பேராசையினின்று ஐரோப்பியக் கீழ் நாடுகளில் ஆங்கிலேயர்களின் உரிமைகளைப் பாதுகாத்து விட்டதாகவும் பெருமையுடன் கூறினார். இந்த உடன்பாட்டின்படி அநேக வருஷகாலமாக க்ஷீணதசையை அடைந்து அழியும் நிலைமையிலிருந்த துருக்கி சாம்ராஜ்யம் அநேக சிறிய சுயஆட்சி பெற்ற நாடுகளாக மாறிற்று. இதனால் தான் பர்லின் உடன்பாடு முக்கியமானது எனக் கருதப்படுகிறது.

டிஸ்ரேலியும் எகிப்தும்:—ஸூயஸ் கால்வாய் வெட்டப்பட்டபின், பிரெஞ்சுக்காரர்கள் எகிப்தில் தங்களது அதிகாரத்தை ஸ்தாபித்துக் கொண்டார்கள். இச்சமயத்தில் எகிப்து மன்னரான கேடிவ் (Khedive) வீண்செலவுகள் செய்து

அமைதி குன்றி அரசாங்கத்துக்குத் தொல்லைகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் என்று தம் அதிநுட்பத்தாலும் அனுபவத்தாலும் தெரிந்துகொண்டு அவர் பொதுஜன சபையில் ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார். அதற்கு ஐரிஷ் சுய ஆட்சி மசோதா என்று பெயர். அந்தச் சபையினர் அதை அங்கீகரித்தபோதிலும் பிரபுக்கள் சபை அதைத் தள்ளி விட்டது. இதற்குப் பிறகு அயர்லாந்துக்குச் சுயராஜ்யம் அளிக்க இஷ்டமில்லாத லிபரல் கட்சியினர்களும் கன்ஸர்வேடிவ் கட்சியினர்களும் சேர்ந்துகொண்டு இங்கிலாந்தில் ஒரு புதிய கட்சியை ஏற்படுத்திக்கொண்டார்கள். ஐரிஷ் ஐக்கியச் சட்டத்தை ரத்து செய்யக் கூடாது என்பது இக் கட்சியாரின் நோக்கம். இந்தக் கட்சிக்குக் கூட்டுக்கட்சி (Unionist Party) என்று பெயர். இக் கட்சியின் தலைவரான ஸாலிஸ்பரி பிரபு (Lord Salisbury) கி. பி. 1885-ல் பிரதான மந்திரியானார்.

**மூன்றாவது சீர்திருத்தச் சட்டம் (கி. பி. 1884):**-கிளாட்ஸ்டன் கி. பி. 1884-ல் மூன்றாவது சீர்திருத்த மசோதாவைப் பார்லிமெண்டின் முன் கொணர்ந்தார். அதைப் பார்லிமெண்ட் அங்கீகாரம் செய்தது. அதன்படி நாட்டுப் புறத்திலுள்ள ஒவ்வொரு வீட்டுச் சொந்தக்காரரும் பார்லிமெண்டுக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் வோட் உரிமையைப் பெற்றனர். மேலும், இங்கிலாந்து சம ஜனத்தொகையுள்ள அநேக பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரிவும் பார்லிமெண்டுக்கு ஓர் அங்கத்தினரைத் தேர்ந்தெடுத்து அனுப்பலாம் என்பது ஏற்பட்டது. இச் சட்டத்தின்படி விவசாயத் தொழில் செய்துவந்த ஏழை மக்கள் 'வோட்' உரிமையைப் பெற்று பார்லிமெண்டில் அதிகாரம் படைத்தவர்களானார்கள்.

## பிரதான மந்திரிகள்:—

(கி. பி. 1874 முதல்)

| | | | |
|---|---|---|---|
| 1. | டிஸ்ரேலி (II) (கன்ஸர்) | கி. பி. | 1874—1880 |
| 2. | கிளாட்ஸ்டன் (II) (லிபரல்) | ,, | 1880—1885 |
| 3. | ஸாலிஸ்பரி (I) ,, | ,, | 1885—1816 |
| 4. | கிளாட்ஸ்டன் (III) ,, | ,, | 1116 |
| 5. | ஸாலிஸ்பரி (II) ,, | ,, | 1116—1192 |
| 6. | கிளாட்ஸ்டன் (IV) ,, | ,, | 1192—1194 |
| 7. | ரோஸ்பரி | ,, | 1194—1195 |
| 8. | ஸாலிஸ்பரி (III) | ,, | 1195—1902 |

சேர்க்கைக் கட்சி தோன்றின பின் பார்லிமெண்டில் லிபரல் கட்சியாரும் கன்ஸர்வெடிவ் கட்சியாரும் மாறி மாறி அதிகாரம் பெற்றிருந்தனர். ஆனால் லிபரல் கட்சியினர் பார்லிமெண்டில் வலிமை பெற்றதால் கிளாட்ஸ்டன் நான்காவது தடவை பிரதான மந்திரியாயிருந்தார். அப்பொழுதுதான் ஐரிஷ் சுயராஜ்யக் கட்சியினர் கிளர்ச்சி செய்து கொண்டே வந்தனர். பின்னர் கி. பி. 1894ல் அவர் இறந்த பின், ரோஸ்பரி பிரபு (Lord Rosebury) லிபரல் கட்சியின் தலைவரானார். ரோஸ்பரி பிரபு ஒரு வருஷம் பிரதான மந்திரியாயிருந்து ராஜீநாமா செய்ததும், ஸாலிஸ்பரி பிரபு மூன்றாம் தடவை கி. பி. 1895ல் பிரதான மந்திரியானார். கி. பி. 1895 முதல் 1901 வரையில் J. பால்பர் பொதுஜன சபைத் தலைவராகவும், சேம்பர்லேன் ஆங்கிலேயர்கள் குடியேறின நாடுகளின் விவகாரங்களைக் கவனிக்கும் காரியதரிசியாகவும் இருந்து வந்தார்கள். இக்காலத்தில் லிபரல் கட்சியினர்களுக்குள் பல சண்டைகள் ஏற்பட்டதால், ரோஸ்பரி பிரபு லிபரல் கட்சியின் தலைவர் பதவியை விட்டுவிட்டார். அதன் பிறகு ஹென்றி காம்பெல் பானர்மன் லிபரல் கட்சித் தலைவரானார்.

கேள்விகள்:—

1. தானியச் சட்டங்கள் எக்காரணத்தினுல் பிறப்பிக்கப் பட்டன? எப்பொழுது? பீல் அவைகளை ரத்து செய்வதற்குக் காரணம் யாது?
2. எந்த வருஷத்தில் லண்டனில் பொருட்காட்சி நடைபெற்றது? அதைப்பற்றித் தெரிந்தவரையில் எழுதுக.
3. கிரிமியன் போரின் காரணங்கள் யாவை? அப்போரின் வரலாற்றைப்பற்றிச் சுருக்கமாய் எழுதுக.
4. இரண்டாவது சீர்திருத்தச் சட்டத்தினுல் ஏற்பட்டன யாவை?
5. கிளாட்ஸ்டன் பொதுஜன நன்மைக்காகச் செய்த சீர்திருத்தங்கள் யாவை?
6. கிளாட்ஸட னின் அயல்நாட்டுத் தந்திரம் யாது?
7. டிஸ்ரேலியின் நோக்கங்கள் யாவை?
8. கூட்டுக்கட்சி எவ்வாறு ஏற்பட்டது? மகாராணியாரின் காலத்தில் அக்கட்சியின் தலைவராக இருந்தவர் யார்?
9. மூன்றாவது சீர்திருத்தச் சட்டத்தின் முக்கிய ஷரத்துக்கள் யாவை?

---

## அத்தியாயம் 7.

### விக்டோரியா மகாராணியார் (தொடர்ச்சி)

இந்த அத்தியாயத்தில் விக்டோரியா மகாராணியாரின் ஆட்சிக்காலத்தில் பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யம் விஸ்தீரணத்திலும் பலத்திலும் எவ்வாறு பெருகியது என்பது சொல்லப்பட்டிருக்கிறது.

கனடா :—பாரிஸ் சமாதானத்தின்படி ஆங்கிலேயர்களுக்கு வட அமெரிக்காவில் கனடா கிடைத்தது. பிறகு

சில ஆங்கிலக் குடிகள் அமெரிக்கன் சுதந்தரப் போரில் கலந்துகொள்ள இஷ்டப்படாமல் கனடாவிற்குச் சென்று குடியேறினார்கள். அது முதல் கனடாவின் மேல்பாதியில் வசித்து வந்த ஆங்கிலேயருக்கும் அதன் கீழ்ப் பாகத்தில் வசித்து வந்த பிரெஞ்சுக்காரருக்கும் அநேக சச்சரவுகள் ஏற்பட்டு வந்தன. கி. பி. 1837-ல் பிரெஞ்சுக்காரர்கள் ஓர் கலகம் செய்தார்கள். ஆங்கிலேயர்கள் அக் கலகத்தை அடக்கிவிட்டார்கள். ஆங்கில ராஜாங்கத்தார் கி. பி. 1838ல் டர்ஹாம் பிரபு (Lord Durham) வை அந்நாட்டுக்கு அனுப்பி அதன் இருபாகங்களையும் ஓர் ஆட்சியின் கீழ் வைத்துச் சிநேகத் தன்மையாய் வாழும்படி செய்தனர். பின்னர், கி. பி. 1867-ல், பிரிட்டிஷ் பார்லிமென்டின் அதிகாரத்துக்கு உட்பட்ட சுய ஆட்சி (Dominion Status) கனடாவிற்கு அளிக்கப்பட்டது. அது முதல் இதுவரையில் ஆங்கிலப் பார்லிமென்டுக்கு உட்பட்ட சுயேச்சைத் துரைத்தனம் கனடாவில் வழங்கி வருகிறது.

ஆஸ்திரேலியாவும் நியூஸீலந்தும்:-பதினெட்டாவது நூற்றாண்டின் இறுதியில்தான் ஆங்கிலேயர்கள் ஆஸ்திரேலியா என்ற ஒரு கண்டம் இருப்பதாக குக் (Cook) என்ற ஒரு கியாதி பெற்ற இங்கிலீஷ் மாலுமியின் கடற்பிரயாணத்தினால் தெரிந்துகொண்டார்கள். பிறகு தண்டனை பெற்ற ஆங்கிலக் குற்றவாளிகள் அக் கண்டத்திற்கு நீர்மேல் ஏற்றி அனுப்பப்பட்டார்கள். இவ்வாறு ஸிட்னி, பிலிப் துறைமுகப்பட்டணம் டாஸ்மேனியா, ஸ்வான் நதிப் பிரதேசம் இவைகள் ஆங்கிலக் குற்றவாளிகள் தங்கின இடங்கள் ஆயின. அவர்கள் தங்கின காலத்துக்குப் பிறகு புல்தரைகளிலும் மலைச்சாரல்களிலும் நதிகள் பாயும் சமவெளிகளிலும் ஆடுமாடுகளை மேய்த்து வளர்த்து வந்தார்கள். மேலும், அவர்கள் இங்கிலாந்திலிருந்து குற்றவாளிகளை இனிமேல் ஆஸ்திரேலியாவுக்கு அனுப்பக்

கூடாது என்றும் தடுத்தார்கள். பிறகு அக் கண்டத்தில் தங்கம் ஏராளமாய் அகப்பட்டதைக் கேட்டு அநேக ஆங்கிலக் குடிகள் அங்கு சென்று குடியேறினார்கள். இவ்வாறு ஆஸ்திரேலியாவில் ஆங்கிலேயர்கள் குடியேறின சில மாகாணங்கள் ஏற்பட்டன. ஒவ்வொரு மாகாணமும் சுய ஆட்சி பெற்று விளங்குகிறது. பிறகு, கி. பி. 1901-ல், ஆஸ்திரேலியாவில் ஐக்கியத் துரைத்தனம் ஏற்பட்டு அது ஒரு பெரிய குடியரசு நாடாக ஆயிற்று. ஆஸ்திரேலியாவுக்குத் தென் கிழக்கே யுள்ள நியூஸிலந்துத் தீவுகளிலும் கி.பி. 1835-ல் ஆங்கிலேயர்கள் முதல் முதலில் குடியேறினார்கள். அவைகள் சுய ஆட்சியைப் பெற்று இப்பொழுது பிரிட்டிஷ் ஸாமராஜ்யத்தின் ஒரு பாகமாக விளங்குகின்றன.

தென் ஆப்பிரிக்கா:—பதினேழாவது நூற்றாண்டில் டச்சுக்காரர்கள் ஆப்பிரிக்காவின் தென் பாகத்திலுள்ள கேப் காலனி (Cape Colony) யில் குடியேறினார்கள். அவர்கள் போயர்கள் (Boers) என்று அழைக்கப்பட்டார்கள். பிரெஞ்சுப் பெருங் கலகம் நடந்தபொழுது போயர்கள் நெப்போலியனுக்கு உதவி புரிந்ததால், ஆங்கிலேயர்கள் அவர்களின்மீது போர் தொடுத்து கேப்காலனியைக் கைப்பற்றிக் கொண்டனர். இதற்குப் பிறகு டச்சுக்காரர்கள் நேட்டால் (Natal) என்ற ஒரு சிறிய மாகாணத்துக்குச் சென்று குடியேறினார்கள். ஆனால் ஆங்கிலேயர்கள் கி. பி. 1843-ல் அந்த நாட்டையும் ஜயித்துக் கொண்டுவிட்டார்கள். அதுமுதல் பிரிட்டிஷ்காரர்களுக்கும் போயர்களுக்கும் அநேக சண்டைகள் ஏற்பட்டு வந்தன. அனதுபற்றி போயர்கள் ஆரஞ்சு நதி சுயேச்சை நாடு (Orange River Free State) என்ற பிரதேசத்தில் குடியேறினதோடு வால் (Vaal) நதியைக் கடந்து வடக்கே சென்று ட்ரான்ஸ்வால் (Transvaal) குடியரசு நாட்டையும்

கி. பி. 1852-ல் ஏற்படுத்திக் கொண்டார்கள். அவைகளில் தங்கமும் வைரக் கற்களும் அகப்பட்டதைக் கண்ட ஆங்கிலேயர்கள் அவைகளின்மீது படையெடுத்து அவைகளை கி. பி. 1877-ல் ஜயித்து விட்டனர். இக்காரணத்தினால் போயர்கள் சுதந்தரப் போர் புரிய வேண்டியதாயிற்று. அவர்கள் மஜூபா மலை (Majuba Hill)யின் அருகில் ஒரு பிரிட்டிஷ் சேனையைத் தோற்கடித்தார்கள். இதற்குப் பிறகு போர் சிலகாலம் நடக்கவில்லை. சில வருடங்களுக்குப் பிறகு ட்ரான்ஸ்வால் மாகாணத்தில் ராண்டு (Rand) என்ற ஜில்லாவில் தங்கச்




சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இதைக் கேட்ட ஆங்கிலேயர்கள் பொருள் சம்பாதிக்க ஆசைகொண்டு ட்ரான்ஸ்வால் மாகாணத்தை ஜயிப்பதற்கு யத்தனித்தார்கள். இச்

சமயத்தில் (கி. பி. 1899-ல்) ஸெஸில் ரோட்ஸ் என்ற ஒரு ஆங்கிலேயர் பிரிட்டிஷ் தென் ஆப்பிரிக்கா கம்பெனியை ஸ்தாபித்து, ஸாம்பஸி நதிக்கு தெற்கேயுள்ள பிரதேசத்தைக் கைவசப்படுத்திக் கொண்டார். அதற்கு ரோடீஷியா என்று பெயர். பிறகு அக் கம்பெனியின் உத்தியோகஸ்தர்களில் ஒருவரான ஜேம்ஸன் (Jameson) கி. பி. 1895-ல் டிரான்ஸ்வால் நாட்டினுள் ஒரு படையுடன் புகுந்தார். அவர் ஜொஹானஸ்பர்க் (Johannesburg) என்ற பட்டணத்திற்கு அருகில் செல்லும்போது, ஒரு பெரிய போயர்களின் படை அவருடைய சேனையைச் சூழ்ந்து கொண்டது. ஆகையால் ஜேம்ஸன் போயர்களிடம் சரணம் அடைந்தார். இது முதற்கொண்டு ஆங்கிலேயர்களுக்கும் போயர்களுக்கும் அதிக விரோதம் ஏற்பட்டு, எந்த சமயத்திலும் அவர்களுக்குள் ஒரு பயங்கரமான போர் ஏற்படும்போல் இருந்தது.

போயர் யுத்தம் (கி. பி. 1899—1902):—ஜேம்ஸன் டிரான்ஸ்வால்மீது படையெடுத்தபின், போயர்கள் பெரிய படைகளைத் திரட்டி ஆங்கிலேயர்களுடன் போர் புரியச் சித்தமானார்கள். கி. பி. 1899-ல் தொடங்கிய யுத்தத்திற்குப் போயர் யுத்தம் (Boer War) என்று பெயர். டிரான்ஸ்வால், ஆரஞ்சு சுயேச்சை நாடு இவைகளில் குடியேறின போயர்கள் 20,000 போர்வீரர்கள் அடங்கிய ஒரு பெரிய சைன்யத்தைச் சேர்த்து வைத்திருந்தார்கள். ஆங்கிலேயர்கள் அவர்களை எளிதில் வெல்லமுடியும் என்று எண்ணினார்கள். போயர்கள் திடீரென நேட்டால் மாகாணத்தின் மீது படையெடுத்ததால் அம் மாகாணத்தில் போர் வெகு கடுமையாக நடந்தது. போயர்கள் லேடிஸ்மித் (Ladysmith) நகரை முற்றுகை செய்தார்கள். ஆங்கிலச் சேனைகள் அம் முற்றுகையை விடுவிக்க முடியவில்லை. இதே சமயத்தில்

மேவ்கிங் (Mafeking) கிம்பர்லி (Kimberley) என்றவிரண்டு பட்டணங்களும் போயர்களால் முற்றுகை செய்யப்பட்டன.




பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தைக் காட்டும் உலகப் படம்.

இச்சமயத்தில் ஆங்கில ராஜாங்கத்தார் ஒரு பெரிய சேனையைப் போயர்களுடன் போர் புரிய தென் ஆப்பிரிக்காவிற்கு அனுப்பினார்கள். ஆப்கானிய யுத்தத்தில் வெற்றியடைந்த கியாதி பெற்ற வீரரான ராபர்ட்ஸ் இச்சேனையின் தலைவராய் இருந்தார். இவருக்கு உதவி செய்ய ஸூடானை ஜயித்த வீரரான கிச்சனர் (Kitchener) அனுப்பப்பட்டார். போர்த்திறமை வாய்ந்த இவ்விரு தளகர்த்தர்களும் கேப் காலனியிலிருந்து ஆரஞ்சு சுயேச்சை நாட்டுக்குள் ஒரு பெரிய சேனையுடன் சென்று, போயர்களைத் தோற்கடித்து, ப்ளோயம்பாண்டின் (Bloemfontein) என்ற அதன் பிரதான நகரத்தையே கைப்பற்றிக்கொண்டார்கள். பிறகு அவர்கள் லேடிஸ்மித், மேவ்கிங் என்ற பட்டணங்களை முற்றுகை செய்து வந்த போயர் படைகளைத் தோற்கடித்து அம் முற்றுகைகளை விடுவித்தார்கள். பிறகு ராபர்ட்ஸ் பிரபு ஜோஹானஸ்பர்க், பிரிடோரியா (Pretoria) என்ற இரண்டு பட்டணங்களையும் கைப்பற்றிக்கொண்டார். இவ்வாறு ஆங்கிலேயர்கள் எல்லாவிடங்களிலும் வெற்றியடைந்தார்கள். ஆனால் போயர்கள் ஆங்கிலேயர்களுக்கு அநேக இடையூறுகளைச் செய்துகொண்டே வந்தார்கள். இந்தப் போர் மகாராணியாரின் ஆட்சியில் முடிவிற்கு வரவில்லை.

எகிப்து:—டிஸ்ரேலி கெடிவிடம் ஸூயஸ் கால்வாய் கம்பெனிப் பங்குகளை வாங்கின பிறகு ஆங்கில ராஜாங்கத்தார் அக் கால்வாயின் அருகிலுள்ள நாடுகளில் தமது பலத்தை அதிகப் படுத்திக்கொள்ள முயன்றார்கள். ஸூயஸ் கால்வாயின் வழியாக ஆங்கிலக் கப்பல்கள் இந்தியாவிற்கு எளிதிலும் சீக்கிரத்திலும் செல்லக்கூடும் என்பது பார்லிமென்டின் எண்ணம். அச்சமயத்தில் எகிப்து மன்னரோ கடனாளியாகி தமது நாட்டைச் சரிவர ஆட்சிபுரியாமல் இருந்துவந்தார்.

ஆகவே ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் கெடிவைச் சிங்காதனத்திலின்று நீக்கிவிட்டு எகிப்து தேசத்தில் தங்களது ஆட்சியை* ஏற்படுத்திக் கொண்டார்கள். எகிப்தியர்கள் கி. பி. 1882-ல் அரபி பாட்சாவின் தலைமையின் கீழ் அயல் நாட்டார்களின் ஆட்சியை வெறுத்துக் கலகம் செய்தார்கள். பிரெஞ்சுக்காரர்கள் எகிப்தின் விவகாரங்களில் தலையிட்டுக் கொள்ள இஷ்டமில்லாமல் விலகிக்கொண்டார்கள். ஆகையால் ஆங்கிலேயர்கள் மட்டும் அந்நாட்டை ஆளும்படி நேரிட்டது. இதற்குப் பிறகு ஆங்கிலேயர்கள் ஒரு சேனையை அனுப்பிக் கலகங்களை வெகு திறமையுடன் அடக்கிவிட்டு நாட்டை ஆண்டுவந்தார்கள். ஐரோப்பியப் பெரும்போர் கி. பி. 1919-ல் முடிந்தபிறகு, ஆங்கில ராஜாங்கத்தார் எகிப்து நாட்டுக்குச் சுதந்தரம் அளித்தார்கள்.

ஸூடான்:—எகிப்து மன்னர் தம் தேசத்துக்குத் தெற்கேயுள்ள ஸூடான் என்ற நாட்டை ஜயித்துச் சில காலம் ஆண்டுவந்தார். பிறகு மஹதி (Mahdi) என்ற ஒரு மகம்மதிய மகானின் தலைமையின் கீழ் அந்நாட்டில் கலகம் ஏற்பட்டது. மஹதி எகிப்தியர்களைத் தோற்கடித்து ஸூடான் முழுவதையும் ஜயித்துக் கொண்டு விட்டார். பிறகு கி. பி. 1884-ல் ஆங்கில அரசாங்கத்தார் எகிப்தில் கலகங்களை அடக்கியபின், சார்ல்ஸ் கார்டன் என்ற தளகர்த்தரைக் கார்டூம் என்ற ஸூடானின் தலைநகருக்கு படைகளைத் திருப்பி அழைத்து வந்துவிடும்படி அனுப்பினர். ஆனால் அவர் ஸூடானை ஜயித்து கெடிவின் அரசாட்சியை நிலைநிறுத்தினர். ஒரு சமயம் அவர் கார்டூம் நகருக்குச் சென்றபொழுது மஹதியின் சைன்யம் அந்நகரை முற்றுகை செய்து கைப் பற்றிக்கொண்டது. பிறகு அந்தத் தேசத்தினர்கள் அவரைக்

* இதற்கு இரட்டையாட்சி (Dual Control) என்பது பெயர்.

கார்ட்டூர் (Khartoum) நகரில் அடைத்துவைத்துப் பிறகு கொன்றுவிட்டார்கள். பிறகு ஆங்கிலேயர்கள் ஸூடான் நாட்டை விட்டுச் சென்றுவிட்டார்கள். பிறகு கி.பி. 1898-ல் ஸூடானை ஜயிக்க எண்ணி ஆங்கில அரசாங்கத்தார் கீர்த்தி பெற்ற கிச்சனர் பிரபுவை ஒரு சேனையுடன் அனுப்பினர். அவர் அம்டர்மான் என்றவிடத்தில் சண்டைசெய்து அம் மாகாணத்தையே ஜயித்தார். அதுமுதல் ஸூடான் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஒரு பிரிவாக இருந்து வருகிறது.

பத்தோன்பதாம் நூற்றாண்டில் கல்வி:—தொழிற்புரட்சிக்குப்பின் ஆங்கில வாணிபம் செழித்தோங்கியது. அநேக ஆங்கிலேயர்கள் தொழிற்சாலைகள் ஏற்படுத்தி சாமான்களைச் செய்து அயல்நாடுகளுக்கு அனுப்பி வியாபாரம் செய்து லாபத்தை அடைந்து வந்தார்கள். வியாபாரம் பெருகவே சாமான்களைக் கடல்தரை மார்க்கங்கள் வழியாய் எடுத்துச் செல்வதற்காக சில நூதனமான விஷயங்கள் கண்டுபிடிக்கப் பட்டன. நீராவியின் சக்தியால் படகுகளும் வியாபாரக் கப்பல்களும் கடல் மார்க்கமாய்ச் செல்லத் தொடங்கின. நீராவியின் சக்தியைக் கொண்டு புகைவண்டிகள் ஓடத் தொடங்கின. ஆகையால் சாமான்கள் பலவிடங்களுக்கும் சொற்ப நேரத்திற்குள் கொண்டுபோகப்பட்டன. புகைக் கப்பல்கள் எப்படிச் சமுத்திர மார்க்கமாய் வியாபாரம் செய்ய அனுகூலமாக இருந்தனவோ அதேமாதிரி புகைவண்டிகள் உள்நாட்டு வியாபாரம் பெருகுவதற்குச் சாதானமாயிருந்தன. தந்தி, பைஸிக்கில், மோட்டார் வண்டி இவைகள் நூதனமாக இக்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டதால் இவைகளும் மேன் மேலும் ஆங்கில வாணிபம் வளர்வதற்குச் சாதனங்களாய் இருந்தன.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்தில் அநேக கவிகள் சிறப்புற்று விளங்கினார்கள். அவர்களுள் ஆல்பிரெட் டென்னிஸன், ராபர்ட் ப்ரௌனிங், ராஸட்டி, சார்ல்ஸ் ஸ்வின்பர்ன், வில்லியம் மாரிஸ் முக்கியமானவர்கள். வசன நடையில் அநேக அருமையான கதைப் புத்தகங்களை எழுதின அநேக கலைஞர்கள் இருந்தார்கள். அவர்களுள் ஸர் வால்டர் ஸ்காட், சார்ல்ஸ் டிக்கன்ஸ், வில்லியம் மேக்பீஸ் தாக்கரே, ஜார்ஜ் மெரிடித், ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன் மிகக் கியாதி பெற்றவர்கள். வியாசங்களை எழுதின கலைஞர்கள் தாமஸ் டீ குவின்ஸி, சார்ல்ஸ் லாம் மிகப் புகழ் பெற்றவர்கள். ஜான் ஹென்றி நியூமன், தாமஸ் கார்லைல், ஜான் ரஸ்கின் முதலிய மிகக் கியாதி பெற்ற கலைஞர்களும் சிறப்புற்று விளங்கினது ராணியாரின் ஆட்சிக்காலத்தில் தான்.

கேள்விகள்:—

1. பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தின பிரிவுகள் யாவை ?
2. போயர்கள் யாவர் ? தென் ஆப்பிரிக்காவில் அவர்கள் குடியேறின நாடுகள் யாவை ?
3. தென் ஆப்பிரிக்காவில் போயர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் எக்காரணத்தினால் ஒரு பெரிய யுத்தம் ஏற்பட்டது ?

   அப்போரின் வரலாற்றைப்பற்றித் தெரிந்தவரையில் எழுதுக.
4. எகிப்து எவ்வாறு ஆங்கிலேயரின் ஆட்சிக்கு உட்பட்டது ?
5. ஆங்கிலேயர்கள் ஸூடான் நாட்டை எவ்வாறு ஜயித்தார்கள் ?

# அத்தியாயம் 8.

## ஏழாவது எட்வர்ட் (கி. பி. 1901—1910)

**அமைதி ஆக்குவோர் :—** இளவரசராய் இருந்த எட்வர்ட் தமது தாயின் மரணத்திற்குப் பிறகு ஆங்கில வேந்தரானார். அப்பொழுது அவருக்கு வயது அறுபது. அவர் தமது தாய்க்கு ஆட்சிபுரிவதில் உதவி செய்துவந்தார். ஐரோப்பிய வேந்தர்களில் அநேகர் அவருடைய உறவினர்களாய் இருந்தனர். அவர்களுடன் எட்வர்ட் சிநேகத் தன்மையுடன் இருந்துவந்தார். அவர் இவ்வுலகில் அமைதியைப் பரவச் செய்வதற்குப் பாடுபட்டதால் எல்லோரும் அவரை அமைதி ஆக்குவோர் (Peace-Maker) என்று அழைத்தனர். கி. பி. 1902-ல் போயர் யுத்தம் முடிவுக்கு வந்தது.

**மூவர் நட்பு:—** ஸாலிஸ்பரி பிரபுவுக்குப் பிறகு பால்பர் (கி. பி. 1902–1905) பிரதான மந்திரியாய் இருந்தார். அவர் கூட்டுக்கட்சித் தலைவர். அவர் கி. பி. 1902-ல் ஜப்பான் தீவுகளுடன் ஒரு சிநேக உடன்பாட்டைச் செய்துகொண்டார். அதனால் பிரிட்டிஷ்காரர்களுக்கும் ஜப்பானியர்களுக்கும் நட்பு ஏற்பட்டது. மேலும், அவர் பிரான்ஸ், ரஷியா இத்தேசங்களுடன் கி. பி. 1904-ல் நட்புச் செய்துகொண்டார். இதற்கு மூவர் நட்பு (Triple Alliance) என்று பெயர்.

**ஜர்மனியின் அதிகாரப் பெருக்கு :—** பத்தொன்பதாவது நூற்றாண்டின் பின்பாதியில் மத்திய ஐரோப்பாவில் ஒரு பெரிய ஜர்மனிய சாம்ராஜ்யம் ஏற்பட்டது என்றும், அதன் முதல் சக்கரவர்த்தி மகாராணியாரின் மூத்த புதல்வியின் கணவரான பிரடெரிக் என்றும், கி. பி. 1870-ல் நடந்த போரில் ஜர்மன், ஆல்ஸஸ் லொரெய்ன் மாகாணங்களை பிரான்ஸிடமிருந்து பிடுங்கிக்கொண்டது என்றும் முன்னமேயே கூறப்

பட்டுள்ளன. பின்னர், கி. பி. 1878-ல் பிரஷியா ஆஸ்டிரியாவுடன் நட்பு செய்துகொண்டது. மத்திய ஐரோப்பாவில் பிரஷியா ஆஸ்டிரியாவுடன் நட்பு செய்துகொண்டு பலப்படுத்திக்கொள்வதையறிந்த பிரான்ஸ் ரஷியாவுடன் நட்பு செய்துகொண்டது. இதற்குப் பிறகு எட்வர்ட் பிரான்ஸ், ரஷியா இத்தேசங்களுடன் நேசம் செய்துகொண்டார்.

ஆஸ்குவித்:—லிபரல் கட்சித் தலைவரான ஆஸ்குவித் துரை கி. பி. 1908-ல் பிரதான மந்திரியானார். அவர் லாயிட் ஜார்ஜ் (Lloyd George) என்பவரைப் பொக்கிஷத் தலைவராகச் செய்துகொண்டார். கி. பி. 1908-ல் பார்லிமெண்ட் விருத்தாப்பியரின் பென்ஷன் சட்டம் (The Old Age Pensions Act) என்ற ஒரு சட்டம் இயற்றியது. அதன்படி கிரேட் பிரிட்டனில் இருபது வருஷங்கள் வாசஞ் செய்தவர்களாயும் 70 வயதானவர்களாயும் உள்ளவர்களுக்கு வருஷ வருமானம் £ 31—Sh. 10—க்கு மேல்படாவிட்டால் அரசாங்கத்தாரால் அவர்களுக்கு ஏதோ ஒரு தொகை பென்ஷனுகக் கொடுக்கப்படும் என்று ஏற்பட்டது.

வரவு செலவு கணக்கைப்பற்றிய வழக்கு:—கி. பி. 1919-ல் லாயிட் ஜார்ஜ் வரவு செலவுக் கணக்கை (Budget) அங்கீகரிக்கும்படி பொதுஜன சபையில் கொண்டுவந்தார். அச்சபை அதை அங்கீகரித்துப் பிரபுக்கள் சபைக்கு அனுப்பியது. பிரபுக்கள் சபையினர் அதை அங்கீகரிக்காமல் தள்ளிவிட்டனர். ஆகையால் பொதுஜன சபை கோபங்கொண்டு தமது அதிகாரத்தை ஸ்தாபித்துக் கொள்ள நினைத்துச் சில சட்டங்களை இயற்றியது. கி. பி. 1910-ல் நடந்த பார்லிமென்ட் இலெக்ஷனில் லிபரல் கட்சியினர் அதிகமாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இந்த நிலைமையில் ஏழாவது எட்வர்ட் மன்னர் மரணமடைந்தார்.

கேள்விகள்:—

1. ஏழாவது எட்வர்டுக்கு 'அமைதியாக்குவோர்' என்ற பட்டப் பெயர் எவ்வாறு தகுதியுள்ளதாகும்?

2. எட்வர்டின் காலத்தில் வரவு செலவு கணக்கைப்பற்றி நடந்த வழக்கைச் சுருக்கமாய் எழுதுக. அஃது எவ்வாறு முடிந்தது?

3. ஆஸ்குவித் மந்திரியாயிருக்கையில் பார்லிமெண்ட் இயற்றிய சட்டம் யாது?

| முக்கிய நிகழ்ச்சிகள். | | வருஷங்கள். |
|---|---|---|
| பதினைந்து என்னும் கிளர்ச்சி | கி. பி. | 1715 |
| வால்போல் பிரதான மந்திரியாயிருக்கல் | ,, | 1742 |
| நாற்பத்தைந்து என்னும் கிளர்ச்சி | ,, | 1745 |
| ஏக்கன் உடன்பாடு | ,, | 1748 |
| முத்திரை காகிதச் சட்டம் | ,, | 1765 |
| அமெரிக்கன் சுயாதீனப்போர் | | 1775—1782 |
| வெர்ஸெல்ஸ் உடன்பாடு | ,, | 1783 |
| சிறிய பிட் முதன் மந்திரியாதல் | ,, | 1783 |
| நைல் நதிச் சண்டை | ,, | 1798 |
| அயர்லாந்து இங்கிலாந்துடன் ஐக்கியமானது | ,, | 1800 |
| ட்ரபால்கர் சண்டை | ,, | 1805 |
| தீபகற்பப்போர் | | 1808—1814 |
| வாட்டர்லூ சண்டை | ,, | 1815 |
| வியன்னு காங்கிரஸ் | ,, | 1815 |
| கத்தோலிக் விடுதலைச் சட்டம் | ,, | 1829 |
| முதல் பார்லிமெண்ட் சீர்திருத்தச் சட்டம் | ,, | 1832 |
| பீல் தானியச் சட்டங்களை ரத்து செய்தல் | ,, | 1846 |
| பாமர்ஸ்டனின் மரணம் | ,, | 1881 |
| பொருட்காட்சி | ,, | 1851 |
| இரண்டாவது பார்லிமெண்ட் சீர்திருத்தச் சட்டம் | | 1867 |
| கனடா சுயாட்சி நாடானது | ,, | 1867 |
| இரகசிய வோட் உரிமைச் சட்டம் | ,, | 1871 |

பீக்கன்ஸ்பீல்டின் மரணம் ,, 1884
மூன்ருவது பார்லிமெண்ட் சீர்திருத்தச்சட்டம் ,, 1884
கிளாட்ஸ்டனின் ஐரிஷ் சுயாட்சி மசோதா ,, 1886
கிளாட்ஸ்டனின் மரணம் ,, 1898
டிரான்ஸ்வால் ஜயிக்கப்பட்டது ,, 1990
ஆஸ்டிரேலியாவில் ஐக்கிய அரசாங்கம் ஏற்பட்டது 1901
போயர் யுத்தம் 1899—1902
வரவு செலவு கணக்கைப்பற்றிய வழக்கு ,, 1909

---

# X. வின்ஸர் அரசர்களின் காலம்

(கி. பி. 1910 முதல்)

## அத்தியாயம் 1.

### ஐந்தாவது ஜார்ஜ் (கி. பி. 1910 முதல்)

**வின்ஸர் வம்சம் :**—ஏழாவது எட்வர்ட் கி. பி. 1910-ல் இறந்தபிறகு அவரது இரண்டாவது புதல்வரான ஜார்ஜ் ஆங்கிலச் சிங்காதனமேறினர். அவருக்கு அப்பொழுது

ஏழாவது எட்வர்ட் = அலெக்ஸாண்டிரியா

ஐந்தாம் ஜார்ஜ் = மேரி
(கி. பி. 1911—1936)

| | | | |
|---|---|---|---|
| எட்வர்ட் VIII (கி.பி. 1936முதல்) | ஆல்ட்ரெட் பிரெடரிக் | விக்டோரியா அலெக்ஸாண்டிரியா | ஹென்றி வில்லியம் |

வயது நாற்பத்தைந்து. அவர் பட்டத்துக்கு வருவதற்கு முன் ஒரு மாலுமியாக இருந்துவந்தார். அதனுல் அவரை மாலுமி மன்னர் என்று அழைத்தார்கள். அவர் தமது

தமயன் இறந்தபிறகு கப்பற் படையினின்று விலகிவிட்டார். அவர் தமது அத்தை மகளான மேரியை விவாகம் செய்து கொண்டார். அவர் தாம் வகித்துவந்த அன்னிய பட்டங்களை கி. பி. 1917-ல் விலக்கினார்; அங்ஙனமே தம்முடைய உறவினர்களையும் விலக்குமாறு செய்தார். அன்றுமுதல் தங்களை வின்ஸர் வம்சத்தைச் (House of Windsor) சேர்ந்தவர்கள் என்று கூறிக்கொண்டார்.



சில சீர்திருத்தங்கள் :-ஜார்ஜ் பட்டத்திற்கு வரும்போது பிரபுக்கள் சபைக்கும் பொதுஜன சபைக்கும் உள்ள வாதம் தீரவில்லை. பார்லிமெண்ட் இலெக்ஷன் கி. பி. 1910-ல் நடைபெற்றது. இப் புதிய பொதுஜன சபை அநேக சீர்திருத்தங்களைச் செய்தது. அது பணசம்பந்தமான மசோதா (Money Bill) வில் திருத்தங்களைச் செய்யவும், அதைத்

தள்ளிவிடவும் பிரபுக்கள் சபைக்கு அதிகாரமில்லை என்று தீர்மானித்தது. மேலும், பொதுஜன சபை எந்த மசோதாவை மூன்று தரம் அங்கீகரித்ததோ அந்த மசோதா பிரபுக்கள் சபையின் ஆமோதிப்பு இல்லாமலே சட்டமாகிவிடலாம் என்றும், பார்லிமென்ட் ஐந்து வருஷங்களுக்கு ஒரு தரம் கட்டாயம் கலைக்கப்பட்டு மறுபடியும் தேர்தல் நடைபெற வேண்டும் என்றும் தீர்மானங்கள் செய்யப்பட்டன. மேலும், கி. பி. 1918-ல் பார்லிமென்டால் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி 21 வயதுக்கு மேல்பட்ட ஆண்களும் 35 வயதுக்கு மேல்பட்ட ஸ்திரீகளும் பார்லிமென்ட் சபைக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் வோட் உரிமையைப் பெற்றார்கள்.

அயர்லாந்தும் சுய ஆட்சியும் :—அயர்லாந்துக்குச் சுய ஆட்சி அளிக்கவேண்டுமென்று கொண்டுவந்த மசோதா சில காலமாக பார்லிமென்டால் அங்கீகாரம் செய்யப்படாமல் இருந்து வந்தது. கி. பி. 1914-ல் அம் மசோதா மூன்றும் முறை பொதுஜன சபையால் அங்கீகாரம் செய்யப்பட்டது. இதற்குப் பிறகு ஐரோப்பியப் பெரும்போர் நடந்ததால் கொஞ்சகாலம் ஐரிஷ் சுய ஆட்சிக் கேள்வி தடைபட்டு நின்றது. இந்தப் போர் கி.பி 1919-ல் முடிந்ததும், அக்காலத்தில் பிரதான மந்திரியாயிருந்த லாயிட் ஜார்ஜ் அயர்லாந்துக்குச் சுயஆட்சி அளிக்கும்படி செய்தார். இவ்வாறு அயர்லாந்தில் சுய ஆட்சிப் போர் முடிந்து, அது இப்பொழுது ஒரு சுயாட்சி பெற்ற நாடாக விளங்குகிறது.

ஐரோப்பியப் பெரும்போரின் சில காரணங்கள்:—ஜர்மனிக்கும் பிரான்ஸுக்கும் கி. பி. 1870-ல் நடந்த யுத்தத்திற்குப் பிறகு, ஜர்மனி மிக அதிகாரம் படைத்த தேசமாக ஆயிற்று. அது தன் வியாபாரத்தைப் பெருக்கிக்கொண்டும்

தனது கப்பற் படையையும் தரைப் படையையும் பலப்படுத்திக்கொண்டும், புதிய பிரதேசங்களில் குடியேறியும், சாமான்களை ஏராளமாகச் செய்து அன்னிய நாடுகளுக்கு அனுப்பி வியாபாரம் செய்து லாபத்தை அடைந்தும் வந்தது. இதனுல் ஆங்கில வியாபாரம் குறைந்தது. மேலும், ஆஸ்டிரியா இடலி முதலிய தேசங்களுடன் ஜர்மனி நட்புச்செய்துகொண்டு தனது பலத்தை வளரச் செய்தும் வந்தது. இதைக் கண்ட இதர ஐரோப்பியத் தேசவாசிகள் அஞ்சினுர்கள். ஜர்மனியர்களோ ஒரு பெரிய ஸாம்ராஜ்யத்தை ஏற்படுத்த எண்ணி, போர்க் கப்பல்கள், ஆகாயக்கப்பல்கள், பீரங்கிகள், விஷவாயுக்கள் முதலிய போர்க்கருவிகளைச் சேகரித்து வந்தார்கள்.

ஸராஜீவோ படுகொலை:—இவைகளை யெல்லாம் தவிர இப்போருக்கு வேறு ஒரு காரணமும் உண்டு. ஆஸ்டிரியா இளவரசர் ஸர்வியா நாட்டில் 1914ஹ ஜூன் மாதத்தில் பிரயாணம் செய்யும் பொழுது, அவர் ஒரு முரட்டுத்தனமுள்ள ஸர்வியனுல் ஸராஜீவோ (Serajivo) என்னும் இடத்தில் கொலை செய்யப்பட்டார். இச் செய்தியைக் கேட்ட ஆஸ்டிரியர்கள் கோபம் அடைந்து ஸர்வியாவின்மீது போர் தொடுத்தார்கள். உடனே ஸர்வியாவுடன் நட்புச் செய்து கொண்டிருந்த ரஷியா, அதன் கட்சியில் சேர்ந்து கொண்டது. இதையறிந்த ஜர்மனி ஆஸ்டிரியாவுடன் நட்பு செய்துகொண்டிருந்தமையால் ரஷியாவை ஸர்வியாவின் கட்சியிலிருந்து விலகிக்கொள்ளும்படி கேட்டது. அதற்கு ரஷியா சம்மதிக்காததால், ஜர்மனி ஆஸ்டிரியாவுடன் சேர்ந்துகொண்டு ரஷியாவின்மீது போர் தொடுத்தது.

ஆங்கிலேயர்கள் போரில் கலந்து கொள்ளுதல்:—ஒரு ஜர்மனியத் துருப்பு பிரான்ஸின்மீது படையெடுப்பதற்கு பெல்ஜியம் தேசத்தின் வழியாகச் சென்றது. ஜர்மனியர்கள்

இவ்வாறு செய்தது ஒரு பெரும் குற்றமாகும். ஏனெனில் ஜர்மனி, பிரான்ஸ், இங்கிலாந்து இம்மூன்று தேசங்களும் கி. பி. 1839-ல் பெல்ஜியத்தின் சுயாதீன உரிமைகளைக் காப்பதாகச் சம்மதித்து ஓர் உடன்பாட்டைச் செய்து கொண்டிருந்தன. அதற்கு நேர்விரோதமாய் ஜர்மனி நடந்ததால், அதன் அநீதியான செயலைத் தடுக்க 4–8–1914-ல் எதிர்க் கட்சியில் சேர்ந்துகொண்டதாக ஜர்மனியரிடம் ஆங்கிலேயர்கள் தெரிவித்தார்கள்.

லாயிட் ஜார்ஜ் பிரதான மந்திரியாதல்:—இப்போர் தொடங்கும்பொழுது ஆஸ்குவித் * முதல் மந்திரியாய் இருந்தார். பிறகு கி. பி. 1915-ல அவர் கன்ஸர்வெடிவ் கட்சித் தலைவர்களையும் காபினெட் மெம்பர்களாயிருந்து தமக்கு உதவி புரியும்படி செய்தார். மேலும், அவர் கிச்சனர் பிரபுவை ராணுவ இலாகா மந்திரியாகவும் செய்தார். சில மாதங்களுக்குப் பிறகு கி. பி. 1916-ல் கிச்சனர் ஒரு கப்பற் சேதத்தினல் இறக்கவே, லாயிட் ஜார்ஜ் ராணுவ இலாகா மந்திரியானர். பிறகு ஆஸ்குவித் பிரதான மந்திரிப் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார். அவருக்குப்பிறகு லாயிட் ஜார்ஜ் கி. பி.1916-ல் பிரதான மந்திரியானர்.

போரின் வரலாறு:–ஜர்மனியர்கள் பெரிய படைகளுடன் திடீரென்று போர் தொடுத்ததால், நேசக்கட்சியினர் ஆரம்பத்தில் பின்னடையும்படி நேரிட்டது. பிரான்ஸை முதலில் நசுக்கிவிட்டுப் பிறகு ரஷியாவை ஜயிக்கலாம் என்பது அப்பொழுது ஜர்மனி சக்ரவர்த்தியாயிருந்த இரண்டாவது

---

*இவர் இப்பொழுது 'ஆக்ஸ்பர்ட் பிரபு' என்ற பட்டம் பெற்று பிரபுக்கள் சபையில் ஒரு மெம்பராய் இருந்து சில வருடங்களுக்கு முன் காலஞ்சென்ருர்.

வில்லியமின் நோக்கம். ஆகையால்தான் ஜர்மனியர்கள் பெல்ஜியத்தின் வழியாகச் சென்று பிரான்ஸின் வடபாகத்தின் மீது படையெடுத்தார்கள். பிரெஞ்சு என்ற ஓர் ஆங்கில தளகர்த்தர் ஒரு பெரிய பிரிட்டிஷ் சேனையுடன் பிரான்ஸுக்குச் சென்றார். அங்கே அவர் தமது சேனையை பிரெஞ்சுப் படையுடன் சேர்த்துக்கொண்டு வெள்ளம் போல் திரண்டு வந்த ஜர்மனிய சைன்யத்தை மான்ஸ் (Mons) என்னுமிடத்தில் எதிர்த்து நின்றார். ஆனால் பிரெஞ்சுக்காரர்களும் ஆங்கிலேயர்களும் மார்ன் (Marne) நதிக்கரை வரையில் பின்னடைந்தார்கள். இதற்குப் பிறகு மார்ன் நதிக்கரையில் ஒரு கடும் போர் நடந்தது. இதற்கு மார்ன் நதிச் சண்டை என்று பெயர். இதில் ஜர்மனியர்கள் தோல்வியடைந்தார்கள். ஆனதுபற்றி அவர்கள் பின்னடைந்து அநேக அரண்களைத் தோண்டிக் கொண்டு, அவைகளுக்குள் இருந்துகொண்டு வெளியே பீரங்கிகளை மட்டும் வைத்து விரோதிகளின் மேல் குண்டு மழைகளைப் பெய்தார்கள். இதற்கு அரண் யுத்தம் (Trench Warfare) என்று பெயர்.

இவ்வாறு மேற்கு ஐரோப்பாவில் அரண் யுத்தம் நடந்து வருகையில், ஜர்மனி ரஷியாவுடன் வெகு கடுமையாகப் போர் புரிந்தது. ரஷியப்படைகள் கி. பி. 1915-ல் தோற்கடிக்கப் பட்டுப் பின்னடைந்தன.

மறுவருஷத்தில், கி. பி. 1916-ல், ஆங்கில அட்மிரலான ஜெல்லிகோ (Jellicoe) என்பவர் ஜர்மனியக் கப்பற்படையைத் தோற்கடித்தார். அதே வருஷத்தில் ஒரு ஆங்கில சைன்யம் ஸாம் (Somme) நதிக்கரையில் ஜர்மனியப்படை வரிசையைத் தாக்கிப் பின்னடையும்படி செய்தது. இவ் வெற்றிகள் பிரான்ஸை ஜர்மனியிடமிருந்து காப்பாற்றிய

தோடு, ஜர்மனியக் கப்பற்படையை வெளியே வரவொட்டாமலும் தடுத்தன.

மறு வருஷத்தில், கி.பி. 1917-ல், ஜர்மனியர்கள் கடலின் கீழ்ச்செல்லக்கூடிய கப்பல்களை (Submarines)செய்து அவைகளைக்கொண்டு தமது விரோதிகளின் போர்க்கப்பல்களைக் கடலில் மூழ்கும்படி செய்தனர்; ஆங்கிலேயர்களுக்கு அன்னிய நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களும், போர்க்கருவிகளும் அனுப்பக்கூடாதபடி செய்து வந்தனர். இச் சமயத்தில் ரஷியாவில் ஒரு பயங்கரமான துரைத்தனப் புரட்சி ஏற்பட்டது. ஆனதுபற்றி ரஷியா போரினின்று விலகிக்கொண்டது. பிறகு அமெரிக்கன் ஐக்கிய நாடுகள் இப்போரில் ஜர்மனியருக்கு விரோதமாய்ச் சேர்ந்துகொண்டன. இச் சமயத்தில் பாஸ்ரா (Basra) விலிருந்து சென்ற இந்தியப் படைகள் துருக்கியர்களுடன் மெஸபடோமியா (Mesopatomia)வில் போர் செய்து அவர்களைப் பின்னடையும்படி செய்தன; பாக்தாத் (Bagdad) என்ற நகரையும் கைப்பற்றிக் கொண்டன.

மூன்று வருஷகாலமாய் அரண்யுத்தம் புரிந்து வந்த ஜர்மனியர்கள் அரண்களிலிருந்து திடீரென கி. பி. 1918-ல் வெளியேவந்து சண்டை செய்யத் தொடங்கினார்கள். ஜர்மனியத் துருப்புகள் பாரிஸ் நகரை நோக்கி சென்றன. பிரான்ஸை ஜர்மனியர்கள் ஜயித்து விடுவார்கள் போல் தோன்றியது. இத்தகையக் கஷ்ட நிலைமையில் லாயிட் ஜார்ஜ் ஒரு பெரிய பிரிட்டிஷ் சேனையைப் பிரான்ஸுக்கு அனுப்புவித்தார்; பிரெஞ்சுப் படையும் பிரிட்டிஷ் சேனையும் மார்ஷல் பாச்ஷ் (Marshal Foch) என்ற பிரெஞ்சுத் தளகர்த்தரின் கீழிருந்து போர் புரியும்படி செய்தார். மார்ன் நதிக்கரையில் நேசக் கட்சியினரின் சைன்யம் ஜர்மனியப்படையுடன் போர் புரிந்து

அதனைத் தோற்கடித்தது. இச்சமயத்தில் போரினால் சோர்வு அடைந்த ஜர்மனியர்கள் நேசக் கட்சியினருடன் சமாதானம் செய்துகொள்ள விரும்பினார்கள்.

வேர்ஸேல்ஸ் உடன்பாடு (கி. பி. 1919) :—நேசக் கட்சியினர் ஜர்மனியர்களுடன் வேர்ஸேல்ஸ் என்னுமிடத்தில் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டனர். அதன்படி ஜர்மனி பிரான்ஸுக்கு அல்ஸஸ், லொரெய்ன் என்ற மாகாணங்களைக் கொடுத்துவிடச் சம்மதித்தது. ஜர்மனியர்கள் தங்கள் குடியேற்ற நாடுகளை இழந்து விடுவதாகவும், தங்களுடைய சேனையையும் கப்பற் படையையும் மிகக் குறைத்துக் கொள்வதாயும் ஒப்புக்கொண்டார்கள். மேலும், ஜர்மனியர்கள் நேசக் கட்சியினருக்குப் போரினால் ஏற்பட்ட கஷ்டங்களுக்கு ஈடுபண்ணப் பெரும் தொகையைக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்கள். இவைகளையெல்லாம் தவிர இவ்வுலகத்தின்கண் போர் நிகழாது அமைதியைப் பரவும்படி செய்வதற்காக ஒரு சர்வதேச சங்கம் (League of Nations) ஏற்படுத்தப்பட்டது. இச்சங்கம் சென்ற சில வருஷங்களாக எல்லாத் தேசங்களுக்குள்ளும் ஏற்படுகின்ற சகலவிதமான சச்சரவுகளையும் கலந்து ஆலோசனை செய்து தீர்ப்பதற்காக ஏற்பட்ட ஒரு பஞ்சாயத்துச் சபை போன்றது. இச் சங்கத்தில் நமது தேசமும் ஒரு மெம்பராக இருந்துவருகிறது

ஐரோப்பியப் பெரும்போர் முடிந்ததும், லாயிட் ஜார்ஜ் இந்தியர்கள் அதிக விசுவாசத்துடன் இங்கிலாந்துக்குப் பேருதவி செய்ததை உணர்ந்து இந்தியா காலக்கிரமத்தில் சுய ஆட்சியை அடைய எண்ணி ஒரு இந்திய அரசியல் சீர்திருத்த மசோதாவைப் பார்லிமெண்டில் கொண்டுவரும்படி

செய்தார். அப்பொழுது இந்தியாக் காரியதரிசியாயிருந்த மாண்டேகுவின் உதவியால் பார்லிமென்ட் அம் மசோதாவை அங்கீகரித்தது. இச் சட்டத்தின்படி நமது நாடு தற்காலம் ஆளப்பட்டு வருகின்றது.

---

## அத்தியாயம் 2.

### சர்வதேசச் சங்கம்

மஹா ஐரோப்பிய யுத்தத்தில் ஏற்பட்ட உயிர்ச்சேதம் பொருள் நஷ்டம் இவைகளைக்கண்டு, இவ்வுலகில் சண்டையை ஒழித்து அமைதியைப் பரவச் செய்யவேண்டும் என்ற உணர்ச்சி பொதுவாக ஐரோப்பாவில் எல்லா அரசாங்கத்தாருக்கும் ஏற்பட்டது. அதனால் வெர்ஸெல்ஸ் உடன்பாட்டின்படி ஐரோப்பாவில் சர்வதேசச் சங்கம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இவ்வுலகத்தில் இனிமேல் யுத்தங்கள் ஏற்படாமல் எல்லாத் தேசங்களும் சமாதானத்துடன் வாழ்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதற்கு இச்சங்கம் அமைக்கப்பட்டது.

இச் சங்கத்தில் பிரான்ஸ், இங்கிலாந்து, [illegible], இடலி முதலான தேசங்கள் மெம்பர்களாக இருந்து வருகின்றன. எல்லாத் தேசங்களும் இச்சங்கத்தில் சேரலாம். ஒவ்வொரு தேசத்தின் அரசாங்கத்தாரும் ஒரு மெம்பரைப் பிரதிநிதியாகப் பொறுக்கி இச் சபைக்கு அனுப்புகின்றனர். சர்வதேசப் பிரதிநிதிகள் அடங்கிய இம் மகாசபைக்கு (League Assembly) என்று பெயர். இச் சபையின் அங்கத்தினர்கள் தங்களுக்குள் ஒருவரை அக்கிராசனாதிபதியாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகின்றனர். இந்தச் சபை வருஷத்தில் இரண்டு மூன்று தடவை கூடி எல்லா அரசாங்கத்தார்களுக்

கும் பொதுவான விஷயங்களை ஆலோசனை செய்து தீர்மானிக்
கின்றது. இத்தீர்மானங்களை நிறைவேற்றவும், இச்சபையின்
நிர்வாக காரியங்களைக் கவனித்து வரவும் ஒரு நிர்வாக சபை
(League Council) யும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த
நிர்வாக சபைக்குப் பெரிய சங்கத்தின் மெம்பர்களுக்குள்
சிலர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். சர்வதேசச் சங்கமும்
நிர்வாக சபையும் சுவிட்ஸர்லாந்து தேசத்தில் ஜினிவா
நகரில் கூடி வருகின்றன. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் அடங்கி
யுள்ள குடியேற்ற நாடுகளும் இந்தியாவும் சர்வதேசச் சங்கத்
தின் மெம்பர்களாக இருந்து வருகின்றன.

சர்வதேசச் சங்கம் கூடி போராயுதங்களையும் சைன்யத்
தையும் போர்க் கப்பல்களையும் குறைத்தல், போர்க்கருவிகளை
ஓரளவுக்குமேல் செய்யக் கூடாதென்று தடுத்தல், ஒரு
தேசத்தை மற்றொரு தேசம் அபகரித்துக் கொள்ளாமல்
செய்தல், எல்லைப் பிரதேசத்தில் உள்ள நாடுகளைப்பற்றிய
விவாதங்களைத் தீர்த்தல், தேசங்களுக்குள் ஏற்படக் கூடிய
வழக்குகளையெல்லாம் தீர விசாரித்து நியாயமான தீர்ப்பு
அளித்தல், பொதுவாக உலக வியாபார அபிவிருத்தி, ஜன
சமூக வாழ்க்கையின் முன்னேற்றம் இவைகளைப்பற்றி
ஆலோசனை செய்து தீர்மானம் செய்கின்றது. இவ்விஷயங்
களைப்பற்றிச் சர்வதேசச் சங்கம் சிறிய கமிட்டிகளாகப்
பிரிந்து வேலை செய்துவருகிறது. போர்க் கப்பல்களையும்
போர்க் கருவிகளையும் குறைப்பதற்குச் சர்வதேசச் சங்கம்
அநேக ஆண்டுகளாக ஆலோசித்துச் சில தீர்மானங்களைச்
செய்திருக்கின்றது. ஆனால் இவ்விஷயத்தில் சர்வதேசச்
சங்கத்தின் முயற்சி அதிகப் பயனைக் கொடுக்கவில்லை. சில
தேசத்தார்கள் அதன் தீர்மானங்களை ஒத்துக்கொண்டபோதி
லும் அவைகளின் பிரகாரம் நடவாமலும் இன்னும் சில

தேசத்தார்கள் அவைகளை ஒத்துக்கொள்ளாமலும் இருந்து வருகின்றனர். எல்லைப் பிரதேசங்களைப்பற்றின வழக்குகளால் உலக அமைதி கெடாமல் சர்வதேசச் சங்கம் பாதுகாத்துவருகின்றது இச்சங்கம் ஏற்பட்டபின், எல்லை நாடுகளைப்பற்றின வழக்குகள் அதிகமாக ஏற்படவில்லை. இதற்கு சர்வதேசச் சங்கத்தின் முயற்சிதான் காரணம். சர்வதேச வழக்குகளை விசாரணை செய்து நியாயமான தீர்ப்பை அளிப்பதற்கு ஒரு சர்வதேச நீதிஸ்தலம் (International Court of Justice) ஹேக் என்ற நகரில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த நீதிசபை சர்வ தேசங்களுக்குள் தோன்றக்கூடிய வழக்குகளைத் தீர விசாரணை செய்து திருப்திகரமான தீர்ப்பை அளித்து உலகத்தின் அமைதியைப் பரவச் செய்கின்றது. ஆகையால் இச்சங்கம் சென்ற பதினைந்து வருஷங்களாக எல்லாத் தேசங்களுக்குள் ஏற்படும் பல வழக்குகளையும் தீர்ப்பதற்காக ஏற்பட்ட ஒரு பஞ்சாயத்துச் சபை போன்றது.

இச் சங்கம் ஏற்பட்டு மேற்கூறிய முக்கிய வேலைகளைச் செய்யாமல் இருந்தால் உலகத்தின் அமைதி குன்றியிருக்கக்கூடும். இது உலகத்தாருக்கு நன்மையைத் தரக்கூடிய ஒரு சபை என்று யாவரும் ஒத்துக்கொள்ளக்கூடியதேயாகும். சில மாதங்களுக்குமுன் இடலி அபிஸீனியாவின்மீது போர்தொடுத்து தோற்கடித்த விஷயம் யாவரும் அறிந்ததே. இந்த யுத்தத்தைத் தடுக்க சர்வதேசச் சங்கம் செய்த முயற்சிகளும் ஏற்பாடுகளும் பயன்படவில்லை. இச்சங்கத்தின் முயற்சிகள் பயனைத் தருவதற்கு வேண்டிய ஆதரவை அளிக்க வேண்டியது ஒவ்வொரு தேசத்தாரின் முக்கியகடமையாகும்.

---

## அத்தியாயம் 3.

### ஐரோப்பியப் பெரும்போருக்குப் பின் (கி. பி. 1919 முதல்)

லாய்ட் ஜார்ஜ் யுத்த இலாகா மந்திரியாகவும் பிரதான மந்திரியாகவும் இருந்து ஐரோப்பியப்பெரும்போரை அதிகத் திறமையுடன் நடத்தி முடிவுக்குக்கொண்டுவந்தார். அதனால் அவருடைய புகழ் உலகமெங்கும் பரவியது. யுத்தம் முடிவடைந்தபின், அவர் சர்வதேசச் சங்கத்தின் ஒரு முக்கிய மெம்பராய் இருந்து வர்ஸெல்ஸ் உடன்பாட்டின்படி ஐரோப்பியத் தேசங்களை நடக்கும்படி செய்தார். சர்வதேசச் சபையார் சில நாடுகளைப் பிரிட்டிஷ் அதிகாரத்திற்குட்படுத்தி வைத்தார்கள். அவைகளில் இராக் (Iraq), பாலஸ்டின் என்ற நாடுகள் முக்கியமானவை. இதனால் பிரிட்டிஷ்காரர்களின் அதிகாரம் புதிதாகச் சில நாடுகளில் வளர்ந்தது.

தொழிற்கட்சி தோன்றுதல்:—பார்லிமெண்டாரும் பொது ஜனங்களும் லாய்டு ஜார்ஜிடம் அதிகக் கௌரவமும் விசுவாசமும காண்பித்தார்கள். வயது வந்த மக்கள் யாவரும் பார்லிமென்டிற்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு உரிமை பெற்றார்கள். அதனால் தொழிலாளர்கள் பார்லிமென்டின் மெம்பர்களாக ஆகிவிட்டார்கள். இப்பொழுது பார்லிமென்டில் எத்தனையோ உள்ள கன்ஸர்வேடிவ், லிபரல் என்ற இரண்டு அரசாங்கக் கக்ஷிகளைத்தவிர, தொழிற்கட்சி (Labour Party) என்ற ஒரு புதிய அரசாங்கக் கட்சியும் தோன்றிற்று. இக்கட்சிக்கு ராம்ஸே மாக்டனல்டு தலைவராக நான்கு வருடங்களுக்கு முன்வரையில் இருந்தார். தொழிற் கட்சியார்கள் பார்லிமென்டில் கொஞ்சம் கொஞ்சமாகப் பலமடைந்து வந்தார்கள்.

அயர்லாந்து சுயஆட்சி பெற்றது :—பெரிய ஐரோப்பிய யுத்தம் நடக்கையில் அயர்லாந்தியர்கள் தங்களுடைய

நாட்டிற்குச் சுயாட்சி அளிக்கப்படவேண்டுமென்று மீண்டும் கிளர்ச்சி செய்துவந்தார்கள். அவர்கள் அக் கிளர்ச்சியை மேன்மேலும் நடத்தி ஆங்கில அரசாங்கத்திற்கு அதிகத் தொந்தரவை விளைவித்து வந்தார்கள். அதனால் அக்காலத்தில் பிரதான மந்திரியாக இருந்த லாய்டு ஜார்ஜ் பிரிட்டிஷ்காரர்களின் குடியேற்ற நாடுகள் அனுபவித்து வரும் சுயாட்சி அயர்லாந்திற்கும் அளிக்கப்படவேண்டுமென்று பார்லிமென்டில் ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார். அந்த மசோதாவைப் பொதுஜன சபையும் பிரபுக்கள் சபையும் அங்கீகரித்தன. அதன்படி அல்ஸ்டர் மாகாணத்தைத் தவிர அயர்லாந்தின் இதர பாகத்தில் சுயாட்சி ஏற்படுத்தப்பட்டது. அல்ஸ்டர் மாகாணத்தில் குடியேறியிருந்த இங்கிலீஷ் பிராடஸ்டண்டுகள் மட்டும் ஐரிஷ் அரசாங்கத்திற்கு உட்பட்டிருக்கச் சம்மதிக்கவில்லை. இந்த ஏற்பாட்டினால் ஐரிஷ்காரர்கள் சிறிது காலம் கிளர்ச்சி செய்யாமல் இருந்தனர். பிறகு அயர்லாந்தியர்கள் முழுச் சுயேச்சையும் (Independence) பெறவேண்டுமென்று கிளர்ச்சி செய்யலானார்கள். அயர்லாந்து முழு சுயேச்சையைப் பெறக் கிளர்ச்சி செய்துவரும் கக்ஷிக்குத் தி வலிரா (De Valera) என்ற ஒரு தேசாபிமானி தலைவராக இருந்து வருகிறார். இன்னும் இக் கிளர்ச்சி அயர்லாந்தில் நின்றபாடில்லை. தற்காலம் தி வலிராவின் கட்சியினரே அயர்லாந்தின் அரசியலில் சர்வதிகாரம் பெற்று துரைத்தனம் நடத்திவருகின்றனர்.

**தொழிற்கட்சியின் அதிகார வளர்ச்சி:**—கி. பி. 1921-ல் கன்ஸர்வேடிவ் கட்சியார் பார்லிமென்டில் பெரும்பான்மைக் கட்சியாரானார்கள். அக் கட்சித் தலைவரான பால்டுவின் பிரதான மந்திரியாக ஆனார். லிபரல் கட்சித் தலைவர்களுக்குள் ஏற்பட்ட சண்டைகளால் அக்கட்சி பலமற்றுப் போய்

விட்டது. மூன்றாவது பார்லிமெண்ட் சீர்திருத்தச் சட்டத்திற்குப்பின் தொழிலாளர்கள் வோட் உரிமையடைந்து அரசியலில் அதிகக் கவனம் செலுத்தலானார்கள். பார்லிமெண்ட் சபையில் தொழிற்கட்சி எதிர்க்கட்சியாக ஆயிற்று. பிறகு சில சமயங்களில் கன்ஸர்வேடிவ் கட்சியும் இன்னும் சில சமயங்களில் தொழிற்கட்சியும் பார்லிமெண்டில் பெரும்பான்மைக் கட்சியாக மாறிமாறி இருந்துவந்தன. தொழிற்கட்சியினர் பார்லிமெண்டில் பெரும்பான்மைக் கட்சியாக இருந்து இரண்டு வருடங்கள் மட்டும் பிரிட்டிஷ்த் தீவுகளின் அரசியலை நடத்தி வந்தனர். அக் கட்சியின் தலைவரான ராம்ஸே மாக்டனால்டு பிரதான மந்திரியாக 1935-ஆம் ஜூன் மாதம் வரையில் இருந்தார். பிறகு நடந்த பார்லிமெண்ட் தேர்தலில் கன்ஸர்வேடிவ் கட்சியினர் பெரும்பான்மைக் கட்சியாய் விட்டார்கள். அக் கட்சியின் தலைவரான ஸ்டான்லி பால்டுவின் தற்காலம் பிரதான மந்திரியாக இருந்துவருகிறார்.

வட்ட மேஜை சபை :—ஐரோப்பியப் பெரும் போரில் இந்தியா, பணம் துருப்புக்கள் இவைகளைச் சேகரித்து அனுப்பிப் பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்கு அதிக விசுவாசத்துடன் உதவி செய்ததால், பிரதான மந்திரியான லாய்ட் ஜார்ஜ் இந்தியாவிற்குச் சுயாட்சி அளிக்கவேண்டும் என்பதுதான் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரின் நோக்கம் என்ற கருத்துள்ள ஒரு அரசாங்க அறிக்கையை வெளியிட்டார். அதன் பிறகு கி.பி. 1919-ல் இந்தியா அரசியல் சீர்திருத்தச் சட்டம் பார்லிமெண்டாரால் இயற்றப்பட்டது. அதன்படி இந்திய அரசியல் தற்காலம் நடத்தப்பட்டு வருகிறது. ஆனால் சென்ற சில வருஷங்களாக இந்திய அரசியலில் சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டுமென்று பெரும் கிளர்ச்சிகள் நாட்டில் ஏற்பட்டன. அதன் பயனாக பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்திய அரசியலில்

சில மாறுதல்களைச் செய்ய உத்தேசித்தனர். இந்தச் சமயத்தில் தொழிற்கட்சியினர் அரசியலில் அதிகாரம் பெற்றனர். இங்கிலாந்தின் பிரதான மந்திரியான ராமஸே மாக்டனல்டு,



இரண்டாம், வட்டமேஜை சபை.

ஸர் ஜான் ஸைமன் என்ற ஒரு சட்ட நிபுணரைத் தலைவராக வைத்து ஒரு கமிஷனை நியமித்து இந்தியாவிற்கு அனுப்பினர். அக் கமிஷன் செய்த சிபார்சுகளின் பேரில் பிரிட்டிஷ்

அரசாங்கத்தார் இந்திய அரசியலில் மாறுதல்களைச் செய்வதற்குமுன் நமது தேசத் தலைவர்களுடன் கலந்து பேசி அவர்களுடைய அபிப்பிராயங்களைத் தெரிந்துகொள்ளுவதற்காக வட்ட மேஜை சபை (Round Table Conference) என்ற ஒரு மகாநாட்டை லண்டன் நகரில் மூன்றுதடவைகள் கூட்டினர். இரண்டாவது வட்ட மேஜை சபையில் மட்டும் இந்திய நாஷனல் காங்கிரஸின் தனிப்பிரதிநிதியாகக் கனம்



எட்டாவது எட்வர்ட்

காந்தி அவர்கள் சென்று இந்தியாவிற்கு முழுச் சுயேச்சை அளிக்கப்படவேண்டுமென்று ஆண்மையுடன் வாதாடினர். பிறகு பொதுஜன சபை, பிரபுக்கள் சபை இவைகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட நபர்கள் அடங்கிய ஒரு கூட்டுக் கமிட்டி

ஏற்படுத்தப்பட்டது. அந்தக் கமிட்டியார் கூடி இந்திய அரசியலில் செய்ய உத்தேசிக்கப்பட்டுள்ள மாறுதல்கள் அடங்கிய ஒரு யாதாஸ்தைத் தயாரித்தனர். இந்த யாதாஸ்தில் அடங்கிய சிபார்சுகளை அனுசரித்து இந்திய அரசியல் சீர்திருத்த மசோதா ஒன்று தயாரிக்கப்பட்டு பிரிட்டிஷ் பார்லிமெண்டில் கொண்டுவரப்பட்டு சட்டமாகிவிட்டது.

## முடிவு

கி. பி. 1911 முதல் மிகச் சிறப்புடன் அரசாட்சி புரிந்த ஜார்ஜ் சென்ற எப்ரல் மாதம் காலஞ்சென்றார். அவரது மூத்த புதல்வரான எட்வார்டு ஆங்கிலச் சிங்காதனமேறினார். இவரது மகுடாபிஷேகம் கி. பி. 1937 மே மாதம் வெகு விமரிசையாக நடைபெறும். இந்த மன்னரே நமது நாட்டின் சக்கரவர்த்தி. இவருடைய அரசாட்சிக் காலத்தில் இந்திய அரசியல் சீர்திருத்தச் சட்டம் இந்தியாவில் அமுலுக்குவரப் போகிறது. அப் புதிய இந்திய அரசியல் சீர்திருத்தச் சட்டத்தினால் இந்தியா இப்பொழுதைக்காட்டிலும் அதிகச் சுயேச்சை பெற்று பிரிட்டிஷ் ஆதீனத்தின் கீழுள்ள குடியேற்ற நாடுகளைப்போலச் சிறப்புற்று விளங்கும் என்று மிக ஆவலுடன் எதிர்பார்க்கப்படுகிறது.



SRI VIDYA POWER PRESS, KUMBAKONAM.

